





விம் உபயோகித்து எப்போதாவது தரையை சுத்தம் செய்ததுண்டா? எவ்வளவு எளிதாக, துரிதமாக சுத்தம் செய்கிறது என்று பிரமித்துப்போவீர்கள். விஞ்ஞான முறையில் துலக்கும் பவுடர் விம். அழுக்கும் பசையும் அதை எதிர்த்து நிற்க முடியாது. ஒரு ஈரத்துணியில் விம் தூவி, தேய்த்து அலம்பி, உலரவிட்டுப்பாருங்கள்—பளிச்சென்று எல்லாம் பரிசுத்த மயம்! மேலும் சமையலறை சாமான்கள், எவர்சில்வர், சாதாரண பீங்கான், கண்ணாடி சாமான்கள், வாஷ்பேஸின்கள், ஓடுகள் முதலியவைகளுக்கும் விம் உபயோகியுங்கள். அது சிக்கனமானதுகூட! சிறிதளவு விம் உபயோகித்தாலும் பரிசுத்தம் அதிகப்படச் செய்யும்.










விஞ்ஞான முறையில் துலக்கும் பவுடர் விம்

V. 89A-50 TM

மலர் 18
இதழ் 12

# கல்கி
## பொருளடக்கம்

தனிப்பிரதி அணா 6

அக்டோபர் 21, 1956



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

# ஏறுகிறது

## நிலக்கரி விலை —
## ஆனால் சிமெண்டின்
## விலையோ அதே
## நிலையில்தானிருக்கிறது

நிலக்கரி மற்றும் இதர பொருள்களின் விலைகள் ஏறிக்கொண்டே வரும் இந்த சமயத்திலும்கூட ஏசிசி சுதந்திர தொழில் ஸ்தாபனத்தின் பாக்டரிகளால் மிகக் குறைந்த விலையில் உயர்தர சிமெண்ட் வழங்கப்படுகின்றது.

சிமெண்டின் விலை உயர்த்தப்படாததால் பாதிக்கப்பட்டவர்கள் எவர்களாவது உண்டா? இல்லை, சிமெண்டின் மலிவான விலையினால், வீடுகள், ரஸ்தாக்கள், அணைக்கட்டுகள், பாக்டரிகள் முதலியவைகளின் நிர்மாணச் செலவு குறைகிறது. மற்றும், லட்சோப லட்சம் ஜனங்களின் வாழ்க்கை வசதிகள் அதிகரிக்கின்றன.

சிமெண்டின் விலையை எப்படி உயராமல் வைத்திருக்க முடிகிறது? நவீன உற்பத்தி முறைகளை கையாளுவதால் — அதாவது வேலைத்திறனை அதிகரிப்பதால் தான்! இதனாலேயே விலைவாசிகளை உயர்த்தும் மேலும் குறிப்பிட்ட விசேஷ காரணங்கள் சமீப வருஷங்களில் ஏற்பட்டிருந்தும், ஏசிசியினால் அதன் சிமெண்டின் விலையை ஏற்றாமல் வைக்க முடிந்தது.

- உயர்ந்த சம்பளங்கள்
- உயர்ந்த ராயல்ட்டி கட்டணங்கள்
- உயர்ந்த போக்குவரத்து கட்டணங்கள் மற்றும் நூப்பொருது
- நிலக்கரி விலையேற்றம்

இந்த வேலைத்திறன் மூலமும், பண வீக்கத்தை அதிகரிக்கச் செய்யக்கூடாது என்ற நோக்கத்தாலும், இருபது ஆண்டுகளுக்கு முன் கனவில்கூட கற்பனை செய்திருக்க முடியாத திரவிய சம்பத்தும் சுபிட்சமும் கூடிய ஒரு புது யுகத்திற்கு வழிகோல ஏசிசி ஒத்தாசை புரிந்துகொண்டிருக்கிறார்கள்.

**தி அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்.**

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கோ., ஆப் இந்தியா பிரைவேட் லிட்.

CHI 4147



மலர் 16
இதழ் 12

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகிஞு
ஐப்பசி 5உ

# மக்களுக்குப் புரிகிறது! மந்திரிகளுக்குப் புரியவில்லை!

ராஜாஜி ஏதாவது சொன்னால் அதை ஆயிரக்கணக்கான பொது மக்கள் சரியாகப் புரிந்து கொள்வது என்றும், அதிகாரத்திலும் ஆட்சிப் பீடத்திலும் இருக்கும் காங்கிரஸ்காரர்கள் மட்டும் தவறாகப் புரிந்து கொண்டு பேசுவது என்றும் ஒரு வழக்கம் உண்டல்லவா? அதற்குப் பழுதில்லாமல் இப்போதும் நடந்திருக்கிறது.

சென்ற ஞாயிற்றுக்கிழமை காந்தி கிராம ஆண்டு விழாவில் லட்சக்கணக்கான தமிழர்களுக்கும் பொது மக்களுக்கும் உள்ளத்தில் மேலோங்கி நின்ற விஷயத்தையேதான் ராஜாஜி சொன்னார்.

ஏன்? இரண்டு வாரங்களுக்கு முன் 'கல்கி'யில் தலையங்கமாக எழுதப்பட்டிருந்த விஷயத்தையேதான் எடுத்துச் சொன்னார்.

காங்கிரஸில் சுயநலவாதிகளும், தகுதியற்றவர்களும் சேர்ந்து விட்டார்கள். நாட்டில் காங்கிரஸைத் தவிர வேறு கட்சி இல்லாததால், காங்கிரசுக்குக் குளிர் விட்டுப் போய்க் காரியங்கள் செய்து கொண்டு போகிறது. அதனால் காங்கிரசுக்கு அச்சுறுத்தக் கூடிய நல்ல எதிர்க் கட்சி உருவாக வேண்டும் என்று ராஜாஜி சொன்னார். "காங்கிரசுக்கு எதிர்க்கட்சி வேண்டும்!" என்று ராஜாஜி அவர்கள் கூறியதை "காங்கிரசுக்குள் எதிர்க்கட்சி வேண்டும்" என்று தவறாக அர்த்தம் செய்து கொண்டு வாய்க்கு வந்தபடியெல்லாம் காங்கிரஸ் ஆட்சி பீடத்திலிருப்பவர்கள் பேசி வருகிறார்கள்.

காங்கிரசுக்காக, தேசத்துக்காகத் தமது வாழ்க்கையையே அர்ப்பணம் செய்த ராஜாஜி காங்கிரசுக்குள் எதிர்க்கட்சி வேண்டும் என்று சொன்னதாகக் கற்பனை செய்தது அவர்களது மனநிலையைத்தான் குறிக்கிறது. 'மருண்டவன் கண்ணுக்கு இருண்டது எல்லாம் பேய்' என்பதாகத் தமிழில் ஒரு பழமொழி உண்டு. அதுபோல் கோஷ்டிப் பூசல்களிலேயே காலம் கடத்துகிறவர்கள், அவரை இவர்மேல் ஏவிவிடுவது இவரை அவர்மேல் ஏவிவிடுவது போன்ற சில்லறை விஷயங்களிலே ஈடுபட்டுப் பதவியை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பவர்களுக்கு ராஜாஜி கூறிய சர்வ சாதாரண உண்மைகூட கலவரத்தை யுண்டாக்குகிறது. இவர்களுக்குத் தேசத்தின் நலனிலோ, காங்கிரஸ் ஸ்தாபனத்தின் தூய்மையிலோ அக்கறைஎன்ன இருக்க முடியும்? ஆகையால் 'காங்கிரசுக்கு எதிர்க்கட்சி வேண்டும்' என்று ராஜாஜியின் தெளிவான கருத்து அவர்களுக்குப் புரியாததுபற்றி நமக்குச் சிறிதும் வியப்பில்லை.

காந்தி கிராமத்தில் ராஜாஜி சொன்ன கருத்தையே, பரோடா சர்வ கலாசாலையின் பட்டமளிப்பு விழாவில் பேசிய டாக்டர் ஜான்மத்தாய் கூறியிருக்கிறார். "இன்றைய நிலைமையில் காங்கிரஸ் ஒரே கட்சியாக இருந்து நாட்டில் நிர்வாகம் நடத்தினால் காங்கிரஸ் சீரழிந்துவிடும் என்பதுடன், தேசமே விரைவில் சீர்குலைந்து போகும்!" என்று எச்சரிக்கை செய்திருக்கிறார்.

காந்தி மகானும், நேருஜியும், ராஜாஜியும் வளர்த்த காங்கிரஸ் ஸ்தாபனம் நாட்டு மக்களின் மனத்தில் தூய்மை யுணர்ச்சி யூட்டும் வண்ணம் விளங்க வேண்டும் என்பதே பொது மக்களின் விருப்பம். காங்கிரசில் சிரத்தையுள்ளவர்கள் அத்தனை பேரும் காங்கிரசுக்கு ஒரு எதிர்க்கட்சி வேண்டும் என்று கூறி வருகிறார்கள்.

எதிர்க் கட்சி என்று சொல்லும்போது, "ஏன், பிரஜா சோஷலிஸ்ட் கட்சி இல்லையா? சோஷலிஸ்ட் கட்சி இல்லையா? கம்யூனிஸ்ட் கட்சி இல்லையா?" என்று கேட்கலாம்: இவைகள் எல்லாம் இன்றைய நிலையில் எதிர்க்கட்சிகளாக உருவாகும் அளவுக்குப் போதிய பலம் பெறவில்லை என்பதே நமது அபிப்பிராயம்.

பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் கொள்கைகளும், சோஷலிஸ்ட் கட்சியின் கொள்கைகளும் ஏறத்தாழக் காங்கிரஸ் கட்சியின் கொள்கைகளாகவே இருக்கின்றன. ''காங்கிரஸ் கொள்கையைக் கடைப் பிடிக்கும் இந்தப் பலவீனமான பி.சோ. கட்சியை ஆதரிப்பதைவிட அந்தக் காங்கிரஸையே ஆதரித்து விட்டால் போகிறது'' என்ற எண்ணம் தான் பொதுமக்கள் மனத்தில் நிலவுகிறது.

கம்யூனிஸ்ட் கட்சி பல காரணங்களால், இன்று இந்த நாட்டில் மீண்டும் உயிர் பெற முடியாத நிலையில் மிகவும் பலவீனமாயிருந்து வருகிறது.

பின் எதை வைத்து, எப்படி எதிர்க் கட்சியை உருவாக்குவது என்ற கேள்வி எழுகிறது.

சென்ற ஒன்பது வருஷங்களில் காங்கிரஸ் எத்தனையோ காரியங்கள் செய்திருக்கிறது. அந்தக் காரியங்களில் அதிருப்தியும் மனக் கசப்பும் அடைந்த நல்லோர்கள் பாரத நாட்டில் ஏராளமான பேர்கள் உண்டு. அவர்கள் ஒன்று சேர்ந்து காங்கிரஸின் தவறான காரியங்களைக் கண்டிக்க முன் வரவேண்டும். அப்படிச் செய்தால் ஒரு பலமான எதிர்க்கட்சி உருவாகச் சாத்தியமாகும்.

கொள்கை அடிப்படையில் கட்சி அமைப்பதை விட்டு விட்டுக் காங்கிரஸின் தவறான காரியங்களையும் அது சம்பந்தமாக நிறைவேற்றும் சட்டங்களையும் நேர்மையில் பற்றுக் கொண்ட மக்கள் எதிர்த்தால் தேசத்தில் அக்கட்சிக்கு ஆக்கம் பெருகும்.

இங்கிலாந்து மக்கள் மிக முற்போக்கான மக்கள் என்பது உலகமே ஒப்புக் கொண்ட உண்மை. அவர்கள் முற்போக்கான சீர்திருத்தவாதிகள் என்பதும் யாவரும் அறிந்த விஷயம்.

இருப்பினும் அவர்கள் தங்கள் அரச பரம்பரையினரை இருக்கிற இடம் தெரியாமல் செய்து விடவில்லை. ஜனநாயக நாடாயினும் தாங்கள் தங்கள் ராணியின் பிரஜைகள் என்று பெருமையுடன் கூறிக் கொள்ளுகிறார்கள். தங்கள் ராணிக்கு நல்ல கௌரவம் அளித்து வருகிறார்கள். நீண்ட காலமாக அரச குடும்பத்தைப் போற்றி வருகிறார்கள்.

ஜனநாயக ஆட்சி இங்கிலாந்தில் ஆரம்பமாவதற்கு முன் சொத்துரிமைச் சட்டங்கள் எப்படியிருந்தனவோ அப்படியேதான் இன்றும் இருந்து வருகின்றன. அவைகளில் ஒரு சில திருத்தங்கள் செய்திருக்கிறார்களே தவிர அடியோடு மாற்றியமைத்து விடவில்லை.

இங்கிலாந்தில் பழைய அரசர்கள் எப்படி மாகாணங்களின் எல்லையை வகுத்தார்களோ அப்படியேதான் மாகாண எல்லைகள் இன்றும் இருக்கின்றன. ஒரு மாகாணத்தின் எல்லைக் கோடாகிலும் மாற்றப்படவில்லை!

பழைய அரசர்கள் எந்த நாணய முறையைக் கையாண்டு வந்தனரோ அதேதான் இன்றும் வழங்குகிறது. மாற்றவில்லை. பவுன், ஷில்லிங், பென்ஸ்தான் வழக்கில் இருக்கிறது. நிறுத்தல் அளவுகளையும் மாற்றவில்லை.

திருமணச் சட்டங்களிலும் விசேஷமான மாறுதல் எதுவும் செய்து விடவில்லை. பழைய திருமணப் பழக்க வழக்கங்களே, சமுதாயத்துக்கு ஏற்றதாக இருக்கின்றன என்று வைத்துக் கொண்டிருக்கின்றனர்.

ஆகவே ஜனநாயக ஆட்சியிலே இங்கிலாந்து பெரிதும் முன்னேறியிருக்கிறது. அத்துடன் தனது பழைய பண்பாட்டையெல்லாம் இழந்து விடாமல் இங்கிலாந்து இங்கிலாந்தாகவே இருக்கிறது. இதைச் சாதிக்க முடிந்ததற்குக் காரணம், நல்ல யோக்கியர்கள் கொண்ட பலமான எதிர்க் கட்சி ஆதியிலிருந்து இங்கிலாந்தில் இருந்து வருவதுதான்.

பழைய பண்பாட்டில் உள்ள நலன்களைத் தூக்கி எறியும்படியான சட்டம் ஆளும் கட்சி கொண்டு வந்தால் எதிர்க் கட்சி தடுத்து நிறுத்தி விடும். அப்படியே நிறைவேற்றினாலும் அடுத்த தேர்தலில் எதிர்க்கட்சி செல்வாக்கு அடைந்து முன் கட்சி செய்த தவற்றைத் திருத்தி விடும்.

ஆனால் நமது நாட்டிலுள்ள நிலை என்ன? இப்பொழுது காங்கிரஸ் தனக்குக் கிடைத்த பதவி வெறியில் பாரத நாட்டைப் பாரத நாடாக இருக்க விடாமல் அடித்து வருகின்றது. சிலர் இதை ருஷ்ய நாடாக மாற்ற விரும்புகிறார்கள். சிலர் இதை அமெரிக்காவாக மாற்ற விரும்புகிறார்கள். சிலர் சீனாவாக மாற்ற முயல்கிறார்கள்.

ஆகவே பாரத தேசத்தின் ஆட்சிப் பீடத்தில் இருப்பவர்களுக்கு, அவர்களும் பாரத வாசிகள் என்பதையும் பாரத நாட்டைப் பாரத நாடாகவே போற்றி வளர்க்கும்படியும் நாம் ஞாபகப்படுத்த வேண்டியிருக்கிறது. அவ்வாறு அடிக்கடி நினைவுறுத்தவேனும் ஒரு நல்ல எதிர்க் கட்சி உருவாக வேண்டியது அவசியமல்லவா?

# அட்லி தம்பதிகளுக்கு அமோக வரவேற்பு

முப்பது ஆண்டுகளுக்கு முன் நாற்பது வயதுள்ள ஓர் ஆங்கிலப் பிரமுகர் இந்தியாவுக்கு விஜயம் செய்தார். அவர் அழையா விருந்தினராக இந்தியாவுக்கு வந்ததால் அவரைக் கறுப்புக் கொடிகளைத் தவிர வேறு யாரும் வரவேற்கவில்லை! எவரும் வரவேற்காதது மட்டுமல்ல, ''உங்கள் ஊருக்குத் திரும்பிப் போ!'' என்ற கோஷம் பாரத நாட்டின் எட்டுத் திசைகளிலும் ஒலித்தது.

அந்தப் பிரமுகர்தான் பிரிட்டிஷ் தொழிற் கட்சித் தலைவரான ஸ்ரீ அட்லி என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அப்போது அவர் சரித்திரப் பிரசித்தி பெற்ற சைமன் கமிஷனில் ஒருவராக இந்தியாவுக்கு வந்ததால் அவரை யாரும் வரவேற்கவில்லை.

ஆனால் அதே ஸ்ரீ அட்லியையும் அவரது மனைவியாரையும் இன்று இந்திய மக்கள் சகலரும் மட்டற்ற மகிழ்ச்சியுடன் அகமும் முகமும் மலர வரவேற்கிறார்கள். ஆம்! இந்திய மகாஜனங்களின் இருதயபூர்வமான வரவேற்புக்குப் பாத்திரரான முதல் ஆங்கிலேயர் ஸ்ரீ அட்லிதான் என்பதில் கருத்து


அகில இந்திய கிரிக்கெட் விளையாட்டு
காங்கிரஸ்
பந்தை எறியவே நடுங்குகிறார்.


எதிர்க் கட்சிகள்


பம்பாயில்
மொரார்ஜி தேசாய்
மொழி வெறியர்கள்
அடித்தார் 'சிக்ஸர்!'


வகுப்புவாதிகள்
எங்கும் படு தோல்வி!


தமிழ்நாட்டு விளையாட்டுக் கோஷ்டி


ஆந்திராவில்
"பந்தைப் பிடித்து விட்டேன்!"



வேற்றுமையே இருக்க முடியாது. ஏனெனில், இந்தியாவின் விதியை மாற்றுவதற்குக் காரணமாக இருந்த சக்திகளில் அட்லிக்குப் பெரும் பங்கு உண்டு அல்லவா?

முப்பது வருஷங்களுக்கு முன் அட்லி தம்பதிகள் இந்தியாவுக்கு வந்திருந்தபோது, சைமன் கமிஷனை எதிர்த்த இந்திய மக்களின் உணர்ச்சிப் பிரவாகத்தை நேரில் பார்த்தனர். எனவே, சென்ற மகாயுத்தத்துக்குப் பிறகு ஸ்ரீ அட்லி பிரதம மந்திரியாக வந்ததும், வேறு எந்தப் பிரிட்டிஷ் பிரதம மந்திரியும் செய்யத் துணியாத ஒரு மகத்தான சாதனையை, அதாவது பாரத நாட்டுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டிய கைங்கர்யத்தை உலகமே பிரமிக்கத் தக்கவாறு நிறைவேற்றி வைத்தார்.

அதன் பலனாக பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் விஸ்தீரணத்தில் பெரும் பகுதி குறைந்து விட்டது. ஆனால் பிரிட்டனின் புகழும் மதிப்பும் உலகமெங்கும் உயர்ந்தன; சரித்திரத்தின் பொன் ஏட்டில் பிரிட்டன் நிலையான ஸ்தானத்தைப் பெற்றது.

கல்லூரி மாணவராக இருக்கும்போதே ஸ்ரீ அட்லியின் மனத்தை லண்டன் ஏழை மக்களின் பரிதாப நிலை உருக்கிவிட்டது. அதிலிருந்து 'சோஷலிஸ்டா'க மாறிய அட்லியின் அரசியல் வாழ்வுக்கு, இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்தது ஒளி வீசும் சிகரம்போல் அமைந்தது.

முப்பது ஆண்டுகளுக்கு மேலாக பிரிட்டிஷ் பார்லிமெண்டில் ஸ்தானம் வகித்தும், பல தடவைகள் மந்திரி பதவிகளை ஏற்றும் புகழும் நற்பெயரும் பெற்ற ஸ்ரீ அட்லி, முதலாவது உலக மகாயுத்தம் நடந்தபோது போர்க்களத்தில் தமது தீரத்தைப் பிரகடனம் செய்து மேஜர் பட்டம் பெற்றவர்.

ஐக்கிய நாடுகள் சபையைச் சிருஷ்டித்த ராஜதந்திரிகளின் அணியில் அட்லிக்கும் ஒரு ஸ்தானம் உண்டு.

ஸ்ரீ அட்லி பன்னிரண்டு வருஷ காலம் பிரிட்டிஷ் சர்க்கார் உதவி பிரதம மந்திரியாகவும், பிரதம மந்திரியாகவும் இருந்து பிரிட்டனுக்குப் புரிந்துள்ள தொண்டைப் பிரிட்டிஷ் மக்கள் மறக்கவில்லை.

ஸ்ரீ அட்லி வெறும் அரசியல் வாதியல்ல; உயர்ந்த ராஜதந்திரி, சிறந்த சமூகத் தொண்டர், சீரிய பேராசிரியர், வீர சிப்பாய், வாசாலகரான வக்கீல்!

அரசியல் வாழ்க்கையில் வெற்றிமேல் வெற்றி கண்ட ஸ்ரீ அட்லி குடும்ப வாழ்க்கையிலும் வெற்றி கண்டவர் என்பது அவரது சுய சரிதத்திலிருந்து நன்கு தெரிகிறது. ஸ்ரீமதி அட்லி கணவனுக்கு ஏற்ற மனைவியாகத் திகழ்ந்து அட்லியின் அரசியல் தொண்டுக்கு உறுதுணையாக இருந்து வந்துள்ளார்.

இவ்வாறாக இந்தியாவின் அரசியலிலும், பிரிட்டிஷ் அரசியலிலும், சர்வதேச அரசியலிலும் வெற்றிகண்ட ஸ்ரீ அட்லியையும் அவரது அருமை மனைவியாரையும் தமிழ் மக்களின் சார்பில் 'வருக' 'வருக' என்று முகமன் கூறி மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

## நல்ல குணவானை இழந்தோம்

**வி**ருது நகர் தேசபக்தர் திரு கே. பி. சங்கரலிங்க நாடார் தமது எழுபத்தெட்டாவது வயதில் எழுபத்தேழு நாட்கள் உண்ணாவிரதம் இருந்து உயிர் நீத்த செய்தி தமிழ் மக்கள் எல்லாரையும் துயரத்தில் ஆழ்த்தியிருக்கும் என்பதில் ஐயமில்லை. முக்கியமாக நிர்வாகத்தைப் பற்றிய பல காரணங்களுக்காகத் திரு நாடார் உண்ணாவிரதத்தை மேற்

பெருந்தீனியால்
பயனில்லை...
சத்துள்ளதா
என்பதை
கவனியுங்கள்



ஒரு தட்டு நிறைய குவிக்கப்பட்ட உணவைச் சாப்பிடுவதால் குழந்தை பூரண ஆரோக்கியத்துடன் இருப்பதாகக் கருதுவதற்கில்லை. உங்களது குழந்தை அதிகமாகச் சாப்பிடலாம். இருந்தாலும், சரியான போஷாக்குகள் இல்லாமல் இருப்பதற்கான அறிகுறிகள் காணப்படும். சரியான வளர்ச்சியின்மை, மெல்லிய தோற்றம், அசுத்தமான பற்கள், அடிக்கடி ஜலதோஷத்தால் பீடிக்கப்படுதல் — இவைகள் யாவும் அவன் உண்ணும் உணவில் போதுமான விட்டமின் சத்துக்கள் இல்லை யென்பதை எடுத்துக் காட்டுகின்றன.

இயற்கையாகவே A & B விட்டமின் சத்துக்கள் கொண்ட அடமின் (இறுக்கப்பட்டது) கொடுத்து அவனது வளர்ச்சியைக் கவனியுங்கள். பருத்து உருண்டையான கன்னங்கள், ஆரோக்கியமான தோற்றம் — வியாதிகளை எதிர்க்கும் சக்தி இவையெல்லாம் காணலாம்.

**ஸீகோல்ட் பிளெண்டெட் ஷார்க் லிவர் ஆயில்**

**விலை மிகக் குறைவு. அதிகமான போஷாக்கு அளிக்கக்கூடிய உணவு.**

# அடமின்




# ஸீகோல்ட்

பிளெண்டெட் ஷார்க் லிவர் ஆயில்

| அளவுபடுத்தப்பட்டது | |
|---|---|
| லிக்விட் | காப்ஸ்யூல்கள் |
| விட்டமின் - A | விட்டமின் - A |
| 12,000 I.U. / Gm | 6,000 I. U. |
| விட்டமின் - D | விட்டமின் - D |
| 1,000 I. U. / Gm | 1,000 I. U. |

அளவுபடுத்தப்பட்டது

ஒவ்வொரு கிராமிலும்

விட்டமின் - A 1,500 I. U.

விட்டமின் - D 100 I. U.

**கவர்ன்மெண்ட் ஆயில் பாக்டரி**

**கோழிக்கோடு**



சென்னை சர்க்கார் கைத்தொழில் & வியாபார இலாகாவின் ஒரு பகுதி



# அவள் எழிலுருவம்...



ஆகா, அவளுடைய சௌந்தர்யத் தோற்றமே தோற்றம், எழில் நடையே நடை! சருமப் பொலிவும் சேர்ந்து கொண்டதால் அவள் அழகு அதிகரித்துக் காணுகிறது.

...அவளின் மென்மையான மலர் போன்ற, **மேனியின் ரகசியம் மேட்டூர் சந்தன** சோப் தான். சந்தனத்தின் உண்மையான நறுமணம் கமழும் **மேட்டூர் சந்தன** சோப்பின் நுரை சருமத்தினுள் ஊடுருவிச் சென்று, பளபளப்பையும் காந்தியையும் தருகிறது.

**மேட்டூர் சந்தன** சோப்பின் நறுமண ரகசியம் அதன் கலவையில் தான் இருக்கிறது. கலவையே அதன் தனிச்சிறப்புக்குக் காரணம்.



**மேட்டூர் சந்தன** சோப்பின் புதிய பெட்டியைப் பார்த்து, **மேட்டூர் சந்தன சோப்** என்று கேட்டு வாங்குங்கள்.

தயாரிப்பு :

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**
**மேட்டூர் அணை** **சேலம் ஜில்லா**

மானேஜிங் ஏஜெண்ட்ஸ் : **சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.**

**“இசை விருந்து” இலங்கை வானொலி 41.72 மீட்டர்கள்** ஒவ்வொரு புதன்கிழமையும், மாலை 6-30 மணிக்கு நாங்கள் அளிக்கும் இந்நிகழ்ச்சியில் பிரபல பின்னணி பாடகர்கள் பங்கெடுத்துக் கொள்கிறார்கள். பாடவும் செய்கிறார்கள். கேட்கத் தவறாதீர்கள்.

கொண்டார். காந்திஜி காட்டிய வழிகளை அடிப்படையாகக் கொண்டு தேசத்தில் சர்க்கார் நிர்வாகம் நடைபெற வேண்டும் என்பது திரு நாடாரின் கோரிக்கைகளில் ஒன்று. இந்த உண்மையை நேருஜி முதல் எல்லாத் தலைவர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். நிர்வாகம் நேர்மையாக நடைபெறுவதற்கான முயற்சிகளையும் செய்து வருகிறார்கள்.

திரு சங்கரலிங்கம் போன்றவர்களின் உண்ணாவிரதங்களால் இத்தகைய விஷயங்களில் சீர்திருத்தம் ஏற்படுவது அசாத்தியம்.

காந்தியடிகள் உண்ணாவிரதம் இருந்ததில்லையா என்று சிலர் வாதிப்பார்கள். உண்மை. ஆனால் இந்த உயிர் நீத்தல் என்பது ஒரு யக்ஞம். அந்த யக்ஞம் செய்வதற்கு யார் அதிகாரி, தகுதி பெற்றவர்கள் என்பது தான் கேள்வி. விறகு எரிந்தால் அடுப்பில் சோறு வேகும். வைக்கோல்ப் புல் எரிந்துச் சோறு சமைக்க முடியாது. சாதாரண காங்கிரஸ்காரர்கள் உண்ணாவிரதமிருப்பது தவறு.

இவ்வளவு கண்டிப்பாக எழுதுவதற்குக் காரணம் அரசியல் துறையில் உண்ணாவிரதத்தை ஆரம்பிக்கும் வழக்கத்தை முற்றிலும் விட்டுவிட வேண்டும் என்பதற்காகத் தான். திரு சங்கரலிங்கம் அவர்களைப் பற்றி எவ்வளவு துயரப் பட்டாலும் இந்த விஷயத்தைக் கண்டிப்பாக விளக்க வேண்டிய அவசியம் நேர்ந்து விட்டது.

உயிர் நீத்த திரு சங்கரலிங்க நாடார் அவர்கள் ஒரு பரிசுத்தமான ஆத்மா. முப்பது ஆண்டுகளாகக் காந்திஜியையும் ராஜாஜியையும் குரு ஸ்தானத்தில் வைத்து வாழ்க்கை நடத்தியவர். தமிழ் நாடு ஒரு நல்ல குணவானை இழந்து விட்டதற்காக வருந்துகிறோம்.

# சென்னையில் கிரிக்கெட்

அக்டோபர் 19ந் தேதியிலிருந்து ஒரு வாரத்துக்குச் சென்னை நகரத்தார் கிரிக்கெட் விளையாட்டைத் தவிர வேறு ஒன்றிலும் கவனம் செலுத்த மாட்டார்கள். அடுத்த கவர்னர் யார்? சூயெஸ் கிளர்ச்சி யுத்தத்தில் முடியுமா?—என்ற கேள்விகளை யெல்லாம் மூட்டைகட்டித் தூர வைத்து விட்டுச் சிறுவர்களும் சரி, பெரியவர்களும் சரி, ஆண்களும் சரி, பெண்களும் சரி, ஒரே விஷயத்தைப் பற்றித் தான் பேசுவார்கள். 'இந்தியா, ஆஸ்திரேலியாவைத் தோற்கடிக்குமா?' என்ற ஒரே கேள்விதான் ஒருவரைப் பார்த்து ஒருவர் கேட்டுக் கொண்டிருப்பார்கள்.



திரு உம்ரிகர்



திரு ஐயான் ஜான்ஸன்

முதன் முதலாக ஆஸ்திரேலியாவிலிருந்து, அதிகார பூர்வமாக, இந்தியாவில் ''டெஸ்டு மாட்ச்'' ஆடப் போகிற கோஷ்டி இப்போது வந்திருப்பதுதான். அதற்குத் தலைவர் ஐயான் ஜான்ஸன். மேலும் சென்னை வாசிகள் எல்லாருக்கும் மிக்க சந்தோஷத்தைக் கொடுப்பது என்னவென்றால் முதலாவது 'டெஸ்ட்' நமது நகரத்தில் நடக்கிறது என்பதுதான்.

சென்ற வருஷம் இந்தியா, நியூஸிலாந்தைச் சென்னையில் சந்தேகமறத் தோற்கடித்தது நேயர்களுக்கு ஞாபகமிருக்கும்.

அப்பொழுது இந்திய கோஷ்டியில் ஆடியவர்களே இப்போதும் விளையாடுகின்றனர் — பட்கர் ஒருவரைத் தவிர. அவருக்குப் பதிலாகக் குலாம் அஹமத் ஆடுவார். அதனால் நாம் மறுபடியும் இந்தியா ஜெயிக்கும் என்று ஆவலுடன் எதிர் பார்ப்பதில் அதிசயமொன்றுமில்லை.

ஆனால் இப்போது வந்திருக்கும் கோஷ்டி, நியூஸிலாந்து கிரிக்கெட் கோஷ்டியை விட மிகச் சிறந்தது. மில்லரின் அழகான ஆட்டத்தை நாம் எல்லோரும் பார்த்திருக்கிறோம். ஹார்வியும், லிண்ட்வாலும் மிகப் பெயர் பெற்றவர்கள்.

இந்தியாவுக்கு உம்ரிகர் (தலைவர்), மன்காட், ராய், குலாம், குப்தே, கிருபால் போன்ற சிறந்த ஆட்டக்காரர்கள் விளையாடுவதால் முடிவு எப்படியிருந்தாலும் சரி, பார்க்கப் போகும் லட்சக்கணக்கான அபிமானிகளுக்கு ஏமாற்றம் இருக்காது.

---

## கிரிக்கெட் மலர்

சென்னை 'ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம்' காரியாலயத்தினர் ஆஸ்திரேலிய ஆட்டக்காரர்களின் புகைப்படங்களையும் அவர்களைப்பற்றிய விவரங்களையும் இந்திய கோஷ்டியினரின் புகைப்படங்களையும், இந்திய கிரிக்கெட் டெஸ்ட் மாட்சுகளைப்பற்றிய விவரங்களையும் கொண்ட கிரிக்கெட் மலர் ஒன்று வெளியிட்டிருக்கிறார்கள். அதன் விலை எட்டணாதான். கிரிக்கெட் ரஸிகர்களுக்கு உதவியாக இருக்கக்கூடிய புஸ்தகம்.

# வட்ட மேஜை

அமெரிக்காவில் மினிஸோடா யூனிவர்ஸிடியில் சுகாதார ஆராய்ச்சிக் கழகத்தில் பேராசிரியராக இருந்து வரும் பிரபல வைத்திய நிபுணர் ஜே. ஏ. மையர்ஸ் ராஜாஜிக்குப் பின்வரும் கடிதம் எழுதியிருக்கிறார் :

அன்புமிக்க ராஜகோபாலாச்சாரியருக்கு,

உயிருடன் வாழும் மனித உடலுக்குள் க்ஷய வியாதிக் கிருமிகளை வேண்டுமென்று ஏன் சிலர் புகுத்த விரும்புகிறார்கள் என்பது எனக்குப் புரியவே இல்லை. நான் இந்த உத்தியோகம் ஏற்றுக்கொண்டு 36 வருஷங்கள் ஆகின்றன. அதற்கு முன்னேயுங்கூட உத்தியோகமின்றி 12 ஆண்டுகள் ஆராய்ச்சி நடத்தி வந்திருக்கிறேன். இத்தனை ஆண்டுகளும் இந்த பி. ஸி. ஜியை எதிர்த்து வந்திருக்கிறேன்.

கிருமிகளின் வேகத்தை மிகவும் குறைத்துத் தயாரிக்கப்பட்டதாக எவ்வளவுதான் சொல்லி வந்தாலும் பயனில்லை. பல முறை ஆராய்ச்சி செய்து நிரூபிக்கப் பட்டிருக்கிறது என்னவென்றால் வீர்யம் குறைக்கப்பட்ட கிருமிகள் சிறிது காலம் உயிருடன் விட்டுவைத்தால் அவை பல மாறுதல்கள் அடைந்து விடுகின்றன. இப்படி பி. ஸி. ஜி கிருமிகள் விஷயத்திலும் ஏற்பட்டிருக்கின்றது. உண்மையைச் சொல்லப் போனால் அசல் பி.ஸி.ஜி என்று நாமதேயமிட்ட கிருமிகள் இப்போது உலகில் இல்லவே இல்லை. அது சாத்தியமில்லை. கால்மெட் உண்டாக்கிய பி.ஸி.ஜி கிருமிகள் பல மாறுதல்கள் அடைந்து விட்டன. இப்பொழுது இருப்பது தீங்கு விளைக்கக்கூடிய மாறுபட்ட வேறு கிருமிகள்தான். இவை மனிதஉடலில் ஹானிகரமான நோய்களை உண்டாக்குகின்றன; சில சமயம் மக்களையே கொன்றும் இருக்கின்றன.

இந்தியாவில் நடைபெற்று வரும் பி. ஸி. ஜி குத்தும் இயக்கத்தை நீங்கள் எதிர்த்து வருவதாகக்கூறி யிருக்கிறீர்கள். நீங்கள் செய்யும் இந்தப் பணி மிகச் சிறந்த பணி என்பதே என் கருத்து. இதில் தாங்கள் முடிவில் வெற்றி யடைவீர்கள் என்பது நிச்சயம். ஆனால் இந்த வெற்றிக்குக் காலதாமதம் ஆகும். மூர்க்கப் பிடிவாதம் இந்தியாவில் மட்டுமல்ல, உலகின் மற்றப் பகுதிகளிலும் இருக்கவே செய்கிறது.

எங்களுடைய பிரசுரங்கள் சில அனுப்பியிருக்கிறேன். நோய்கள் தடுக்கும் என்று சொல்லப்பட்டு வரும் மருந்துகளைப் பற்றியும் உண்மையில் க்ஷய வியாதி மக்களிடையிலிருந்து அகற்றும் சரியான முறைகளைப் பற்றியும் எழுதப்பட்ட இந்தப் பிரசுரங்களை வேறு தபாலில் அனுப்பியிருக்கிறேன். நீங்கள் செய்து வரும் எதிர்ப்பு வேலையைப் பற்றி அவ்வப்போது அறிய மிகவும் விரும்புகிறேன்.

மின்னியா நகரம்
1—10—1956

ஜே. ஏ. மையர்ஸ்

★

## அரசாங்கம் கவனிக்குமா?

"பயிர்த் தொழிலைக் கெடுக்கவேண்டாம்" என்று அக்டோபர் 14-ந் தேதி இதழில் வெளிவந்த தலையங்கத்தைப் படித்தேன். மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். இவ்வளவு தெளிவாகவும், நேர்த்தியான முறையிலும் வெளியிட்டதற்கு என் நன்றியைத் தெரிவிக்கிறேன். இந்தத் தலையங்கத்தைப் பார்த்த பிறகாவது சென்னை அரசாங்கம் செவிடன் காதில் சங்கு ஊதியதைப் போல் இராமல் உடனே சட்டத்தை மாற்றி இருவருக்கும் (தொழிலாளிக்கும் மிராசுதாருக்கும்) நன்மை பயக்கும் வண்ணம் தயாரிக்கும் என்று நினைக்கிறேன். இதை எழுதும் நான் ஒரு தொழிலாளியும் அல்ல; மிராசுதாரும் அல்ல. ஆனால் நாட்டின் நலனில் அக்கறை உள்ள எவரும் இதைக் கவனியாமல் இருக்கமாட்டார்கள். இவ்வளவு தெளிவாக இப்போதைய சட்டத்தில் உள்ள குறைகளை எடுத்துக் காட்டியதற்கு மற்றும் ஒரு முறை என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பல்லாவரம்
12—10—56

என். ராமமூர்த்தி

★

## பயிர்த்தொழிலைக் கெடுக்கவேண்டாம்!

அக்டோபர் 14-ந்தேதி 'கல்கி'யில் வெளிவந்த தலையங்கம் ஒரு பெரிய அபாயத்தைத் தடுக்க வல்லதான கருத்துக்கள் அடங்கிய சிறந்த அறிவிப்பு. விவசாயத்தைப் பற்றிக் கொஞ்சமும் தெரியாத மந்திரிகளாலும், சட்டசபை அங்கத்தினர்களாலும் சட்டமாக்கப்பட்ட (அ)நியாய வாரச் சட்டத்தையும் அதனால் விளையப் போகிற கேடுகளையும் வெகு அழகாக எழுதியிருக்கிறீர்கள். லட்சக்கணக்கான 'கல்கி' வாசகர்களில் யாரும் இதை மறுக்க மாட்டார்கள். "பணம் போட்டு நிலத்தை விலைக்கு வாங்கியவனுக்கு நஷ்டம் உண்டாக்கி விட்டு, அவனுடைய நிலத்தில் விவசாயம் செய்யும் பணக்காரக் குடியானவனுக்கு அந்த நிலத்தில் பெரும்பாலான லாபத்தை ஏற்படுத்தப் பார்ப்பது என்ன நியாயம்? அதற்கு என்ன காரணம்? ஒருவனை அமுக்குவானேன்? மற்றொருவனைத் தூக்குவானேன்? குடியானவன் ஏழை என்றல்லவோ சமாதானம் சொல்லப்படுகிறது."

கொஞ்சமும் தவறில்லாத உண்மையைத் தலையங்கத்தில் எழுதியிருக்கிறீர்கள்.

இந்தச் சட்டத்தினால் உண்மையிலேயே பயிர்த் தொழிலுக்குப் பெரிய கேடு ஏற்பட்டு விட்டது. நிலச் சொந்தக்காரருக்குப் பாதகம் ஏற்படுத்தினால் அவர்கள் எப்படி நிலத்தைக் கவனிப்பார்கள்? ஆகவே விவசாயத்துக்கே இந்தச் சட்டம் பெரிய சாபக்கேடு. வருகிற தேர்தலில் வோட்டு வாங்குவதற்காகவே இச் சட்டம் நிறைவேறியிருக்கிறது. மக்களுக்கோ நிலச் சொந்தக்காரருக்கோ அல்லது விவசாயிக்கோ இந்தச் சட்டத்தினால் நன்மை கடுகளவுகூடக் கிடையாது. இது உறுதி.

திருவென்னைநல்லூர்
12—10—56

எஸ். கண்ணன்




WULFING Original German

# Sanatogen

## ஸானடோஜன்




கடுமையாக உழைக்கும் பொழுதும், பலஹீனம் • பசியின்மை • நரம்புத் தளர்ச்சி • களைப்பு • உற்சாகமின்மை முதலியவைகள் இருக்கும்பொழுதும் சிறந்த ஊக்குவிக்கும் சக்தி வாய்ந்தது என்று 25,000 டாக்டர்களுக்கு மேல் ஆமோதிக்கிறார்கள்.

## சங்கீதக் கல்யாணம்

அக்டோபர் 10, 11, 12 தேதிகளில் சென்னையில் நடைபெற்ற மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யரின் அறுபதாம் ஆண்டு பூர்த்தி விழா வைபவத்தில் பிரபல சங்கீத வித்வான்களின் சங்கீதக் கச்சேரியும், பிரமுகர்களின் பேச்சுக் கச்சேரியும் நடைபெற்றன. விழாவுக்கு ஏராளமான நண்பர்களும், ரசிகர்களும், பிரமுகர்களும், பெண்மணிகளும் விஜயம் செய்திருந்தார்கள். 1. ஸ்ரீ விசுவநாதய்யர். 2. சங்கீத ரசிகர்கள் கூட்டம். 3. விழாவில் ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யர் கச்சேரி செய்கிறார். 4. பெண் ரசிகமணிகள். 5. மகாராஜபுரம் தம்பதிகள். *





# காந்தி கிராமத்தில்



எஸ்.வி.எஸ்

"யார் ஒருவர் வயது வந்த பின்னரும் குழந்தை மனப்பான்மை வைத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர்களே பாக்கியசாலிகள்" என்று யாரோ சொல்லக் கேட்டிருக்கிறேன். அதில் உண்மையும் இருக்கிறது என்று ஒப்புக் கொள்வீர்கள். அப்படியானால் நான் பாக்கியசாலி தான். சாதாரண பாக்கியசாலியல்ல-இரண்டு மடங்கு பாக்கியசாலி!

'அப்படி என்ன பாக்கியம்' என்று கேட்கிறீர்களா? சொல்லி விடுகிறேன்.

சின்னஞ்சிறு பையன்கள் ரயில் பிரயாணம், ஊருக்குப் போக வேண்டும் என்றால் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும்.

இந்தப் பண்பு இன்னும் எனக்கு இருக்கத்தான் செய்கிறது. ஊருக்குப் போவது என்றால் தனியான குஷியாகத்தான் இருக்கிறது. ரயில் கரியையும், நீண்ட தூரப் பிரயாணம் செய்வதில் ஏற்படும் அலுப்பைப் பற்றியும் ரொம்பப் பேர் சலித்துக் கொள்கிறார்களே! அந்த மாதிரி நான் சலித்துக் கொள்வதில்லை. அப்படிச் சலித்துக் கொண்டாலும், போய் வந்து விட்டுத்தான் ரயிலிலுள்ள கூட்ட நெரிசலைப் பற்றி அலுத்துக் கொள்வேன். மூட்டைப்பூச்சி உபத்திரவத்தைப் பற்றிச் சலித்துக் கொள்வேன். பிரயாணம் தொடங்குவதற்கு முன்னால் எல்லாம் ஒரே உற்சாகந்தான். அதனால்தான் என்னை விட்டு அந்தப் பால்ய உணர்ச்சி போகவில்லை என்கிறேன். இது ஒன்று போதாதா, நான் பாக்கியசாலி என்று எண்ணிக் கொள்ள!

இந்தப் பாக்கியம் மட்டுமல்ல; ராஜாஜியுடன் பிரயாணம் செய்யும் அரும் பெரும் பேறும் எனக்கு வாய்த்தது! அதனால்தான் இரட்டிப்பு பாக்கியம் பெற்றவன் என்று ஆரம்பத்திலேயே சொல்லிக் கொண்டேன்!

ஆமாம், ராஜாஜி சமீபத்தில் திண்டுக்கல்லுக்குச் சென்றார். திண்டுக்கல்லுக்கு அருகில் காந்தி கிராமம் இருக்கிறது. அந்தக் காந்தி கிராமத்தின் ஒன்பதாவது ஆண்டு விழாவில் கலந்து கொள்ளத்தான் ராஜாஜி சென்றார். அவருடன் நானும் போகும் அரும் வாய்ப்புக் கிடைத்தது.

ரயில் பிரயாண விஷயத்தில் எனக்குத்தான் சிறு பையனைப் போன்ற பரபரப்பு என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் ராஜாஜிக்கு இந்த வயதிலும் சின்னஞ்சிறு பையனைப் போன்ற பரபரப்புத்தான். அவருக்கு இந்த வயதிலும் இவ்வளவு புகழ்பெற்ற பின்னரும் ரயில் தன்னை விட்டு விட்டுப் போய் விடுமோ என்ற பயமும் கவலையும் இருக்கும் போல் தோன்றுகிறது!

ராஜாஜி ரயிலில் பிரயாணம் செய்யப் போகிறார்கள் என்றால் ரயில்வே அதிகாரிகள், ஸ்டேஷன் அதிகாரிகள் எல்லாருக்கும் முன்னதாகத் தெரிந்திருக்கவே செய்கிறது. மேலும் முதல் வகுப்புப் பிரயாணிகள் ரயில் புறப்படும் நேரத்துக்குச் சரியாக வந்து சேரவில்லையானால் ஐந்து நிமிஷமோ பத்து நிமிஷமோ தாமதித்து ரயில் புறப்படக் கூடச் செய்யலாம் என்று அனுமதியும் இருக்கிறது. இவ்வளவு இருந்தாலும் ராஜாஜி அவர்கள் ரயில் புறப்படுவதற்கு ஐந்துநிமிஷமோ பத்து நிமிஷமோ முன்னால் வரமாட்டார். சரியாக அரை மணி நேரம் முன்னால் வந்து விடுவார்! ஒரு சமயம் சரியாக ஒரு மணி நேரம் முன்னதாக வந்து விட்டார். பிளாட்பாரத்தில் ரயில்வண்டி கூட வந்து சேரவில்லை!

பெரியோர்கள் சிலவற்றைப் பகிரங்கமாகச் சொல்லி வழி காட்டுவார்கள். சிலவற்றைத் தங்கள் நடத்தையின் மூலம் காண்பிப்பார்கள்! ராஜாஜி பேச்சைவிட நடத்தையே

பிறர் கற்றுக் கொள்ள உகந்த பாடம் என்று திண்ணமாக நம்புகிறவர். சிலர், ரயில் புறப்படும் நேரத்துக்குச் சரியாக வந்து அவசரம் அவசரமாகச் சாமான்களை ரயில் பெட்டிக்குள் திணித்துத் தங்களுக்கும் பிறருக்கும் ஏக அசௌகரியங்களை உண்டாக்குகிறார்கள். அவர்களுக்குப் பாடம் கற்பிக்கவே நீண்ட நாட்களாக ராஜாஜி ரயில் புறப்படுவதற்கு அரைமணி நேரம் முன்னதாக ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து விடுவது என்ற வழக்கத்தை வைத்துக் கொண்டிருக்கிறார் என்று நினைக்கிறேன்.

ராஜாஜி பங்கெடுத்துக் கொள்ளும் காந்தி கிராம ஆண்டு விழாவில் காங்கிரஸ் காரியதரிசி திரு ஸ்ரீமன்நாராயண் அவர்களும் கலந்து கொள்வதாக இருந்தது. திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் ஏறி அமர்ந்துவிட்ட ராஜாஜிக்கு ரயில் புறப்படும் நேரம் நெருங்கவே, ஒரு கவலை பிடித்துக் கொண்டது. "இன்னும் ஸ்ரீமன்நாராயண் வரவில்லையே?" என்று கேட்டார். நல்ல வேளை! ராஜாஜி கேட்டதற்கும் ஸ்ரீமன் நாராயண் வருவதற்கும் சரியாக இருந்தது. ஸ்ரீமன் நாராயண் ரயில் பெட்டிக்குள் ஏறித் தம் சாமான்களை ஒழுங்குபடுத்திக் கொண்ட ஒரு சில நிமிஷங்களில் ரயில் புறப்பட்டது!

## ராஜாஜிக்கு ஜே!

திண்டுக்கல் ரயில்வே நிலையத்துக்கு அக்டோபர் ஏழாம் தேதி காலை ஆறே முக்கால் மணிக்கு ரயில் போய்ச் சேர்ந்தது. ரயில் பிளாட்பாரத்துக்குள் நுழையும் போதே, "ராஜாஜிக்கு ஜே!" என்ற வாழ்த்தொலி விண்ணைத் தொட ஆரம்பித்து விட்டது. சுமார் ஐயாயிரம் பேர்களுக்குமேல் ரயில்வே ஸ்டேஷனில் கூடி விட்டார்கள். ராஜாஜிக்கு அன்பார்ந்த வரவேற்பை அளிக்கத் தொடங்கி விட்டார்கள். அவர்கள் கரங்கள் குவித்து வணங்கிய வண்ணம் நின்ற பக்தி புருஷிதமான காட்சியைப் பார்த்தபோது, கண்ணுக்குப் புலப்படாத கடவுள் காட்சிக்கு வந்து விட்டாற் போன்ற உணர்ச்சியே அவர்கள் உள்ளத்தில் மேலோங்கி நின்றிருக்க வேண்டும் என்று தோன்றியது.

இப்படி ராஜாஜிக்கு மலர்மாலைகளைப் போட்டும், வாழ்த்து ஒலி எழுப்பியும், ஜே! கோஷம் போட்டும் பொதுமக்கள் அளித்த உற்சாக வரவேற்பில், திரு ஜி. ராமச்சந்திரனும் ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரனும் தங்கள் வரவேற்பை மறந்து விட்டார்கள். இந்தத் தம்பதிகளின் அழைப்பின் பேரில் தான் ராஜாஜி காந்தி கிராமத்துக்கு வந்தார். திண்டுக்கல் வாசிகள் அளித்த அன்பு வரவேற்பில் அவர்கள் கரைந்து விட்டதில் அதிசயமில்லை. ஆனாலும் அவர்கள் விரைவில் விழித்துக் கொண்டு ராஜாஜி இருக்கு மிடத்துக்கு நெருங்கி வந்து மலர் மாலை அணிவித்து அழைத்துச் சென்றார்கள்.

இப்படித் திண்டுக்கல்லில் ராஜாஜிக்குப் பொது மக்கள் வரவேற்பு அளித்ததில் காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீமன் நாராயண் அவர்களுக்கு ஒரு விஷயம் விளங்கியிருக்கும். ராஜாஜி பதவியி லிருந்தாலும் இல்லா விட்டாலும் அவர் ஒருவரே தமிழ் நாட்டில் ஏக சக்கரவர்த்தி என்பது நன்றாகத் தெரிந்திருக்கும் அல்லவா!

திண்டுக்கல்லிலிருந்து சுமார் பத்து மைல் தூரத்தில் காந்தியின் பெயரால் நிறுவப்பட்ட காந்திகிராமம் இருக்கிறது! அந்த ஸ்தாபனத்துக்குத்தான் ஸ்ரீமான் ஜி. ராமச்சந்திரனும் அவரது மனைவி ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரனும் அழைத்துச் சென்றார்கள்!

ஸ்ரீமான் ஜி. ராமச்சந்திரனைப் பற்றிப் பழைய காங்கிரஸ் வரலாறு தெரிந்தவர்களுக்குத் தெரிந்திருக்கும். இவர் ரவீந்திரநாத் டாகூரின் சாந்திநிகேதன ஆசிரமத்தில் கல்வி பயின்று, காந்தீயக் கொள்கையில் தீவிரப் பற்றுக் கொண்டு, ராஜாஜி நடத்திய திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் ராஜாஜியின் தலைமையில் நிர்மாண வேலைகளில் பயிற்சி பெற்ற தேசபக்தர். ஆதாரக் கல்வியின் நுட்பங்களை அறிந்த ஒருசில நிபுணர்களில் ஒருவர். சென்ற ஒன்பது ஆண்டுகளாகத் திண்டுக்கல்லுக்குப் பக்கத்தில் ஒரு விஸ்தீரணமான இடத்தில் காந்திய முறையில் நிர்மாண வேலைகளில் பயிற்சி அளிக்கும் ஸ்தாபனத்தை ஏற்படுத்தி அரும் பணியாற்றி வருகிறார். பாரதியாரின் புதுமைப் பெண் தன் 'கணவனின் காரியம் யாவினும் கைகொடுத்து உதவுவேன்' என்று சபதம் கூறினாள். அந்தச் சபதத்தை ஸ்ரீமதி சௌந்தரம் வெற்றிகரமாக நிறைவேற்றி வருகிறார். காந்தி கிராமப் பணிகள் யாவற்றிலும் அவர் தமது கணவருடன் ஒத்துழைத்து வருகிறார். அத்துடன் தமிழ் நாட்டுக் குடும்பத் தலைவியின் பொறுப்பையும் மறந்து விடாமல் ஸ்ரீமதி டாக்டர் சௌந்தரம் காந்தி கிராமத்தின் பெட்டிச் சாவியையும் வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார்—பொக்கிஷதாரராக இருந்து வருகிறார்!

கொஞ்சம் பொறுங்கள். கார் திரும்புகிறாற் போலிருக்கிறது. எங்கே திரும்புகிறது? காந்தி கிராமத்துக்குள்தான் நுழைகிறது.

இதோ கார் நின்று விட்டது. ராஜாஜி, ராமச்சந்திரன் தம்பதிகள் யாவரும் இறங்கி விட்டார்கள். வாருங்கள் நாமும் அவர்களுடன் போவோம்.

சாந்தி சேனையின் வணக்கம்.





ஜி. ராமச்சந்திரன், ஸ்ரீமன் நாராயண், ராஜாஜி.

காந்தி கிராமத்தினுள் நுழையும் சாலையின் வலது புறம் ஒரு பெரிய மைதானம் இருக்கிறது. அந்த மைதானத்தில் காந்தி கிராமத்தைச் சேர்ந்த ஆண் பெண்கள் அனைவரும் தூய கதராடையும், தலையில் காந்தி குல்லாவையும் அணிந்து வரிசையாக நிற்பதைப் பாருங்கள். 'இது என்ன அணிவகுப்பு!' என்று நீங்கள் வியக்கிறீர்கள். அதற்குள் ஸ்ரீமதி சௌந்தரம் ''இதுதான் எங்கள் சாந்தி சேனை. இவர்கள் ராஜாஜிக்கு வணக்கம் செலுத்துவார்கள்'' என்று கூறுகிறார். அப்படியே அவர்கள் வந்தே மாதரம் கீதம் பாடி வணக்கம் செலுத்துகிறார்கள். அவர்களுக்கு ரத்தினச் சுருக்கமாக ராஜாஜி ஒரு விஷயத்தை எடுத்துச் சொல்லுகிறார்.

''காந்தி கிராமத்தில் பயிற்சி பெற்று வரும் உங்களை உலகம் எப்படிப் பார்க்கிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். உலகம் உங்கள் பேச்சையோ, கருத்தையோ கவனிக்கவில்லை. உங்கள் அன்றாட வாழ்க்கை முறையையும் நடத்தையையுமே கவனிக்கிறது. அதனால் உங்கள் சிறிய நடத்தையைப் பார்த்து உலகம் கற்றுக் கொள்ளும். உங்களில் பொறாமை, துவேஷம் இவற்றிற்கு இடம் தரலாகாது. சத்தியத்திலும் அன்பிலும் தோய்ந்த வாழ்க்கை முறையை நீங்கள் அனுஷ்டிக்க வேண்டிய பொறுப்பு உங்களுக்கிருக்கிறது என்பதை உணர வேண்டும். ஆயிரம் பிரசங்கங்களை விட, உங்கள் நடத்தை மிகவும் சக்தி வாய்ந்தது!'' என்று கூறினார்.

காந்தி கிராமத்தில் விருந்தினர்களுக்கு என்று பிரத்தியேகமான அறைகள் இருக்கின்றன. எளிமையும் சகல வசதிகளும் உள்ள அறைகள். அந்த அறைகள் ஒன்றில் ராஜாஜியை இறக்கி இருந்தார்கள். அந்த அறைக்கு வந்ததும் ஸ்ரீ ஜி. ராமச்சந்திரனிடம், ''சரி, இனி எனக்கு எவ்வளவு அவகாசம் தருகிறீர்கள்!'' என்று கேட்டார்.

''சரியாக முக்கால் மணி நேரம் தருகிறேன்!'' என்றார் ஸ்ரீ ராமச்சந்திரன்.

ராஜாஜி குளிக்கச் சென்றவுடன் முதல் நாள் வைபவங்களைப் பற்றி அங்கே ஒரு நண்பரிடம் விசாரித்துக் கொண்டேன்.

தற்சமயம் காந்தி கிராமத்தில் ஸ்ரீமான் கிரெக் என்ற அமெரிக்கரும் அவரது மனைவியாரும் வசித்து வருகிறார்கள். ஸ்ரீமான் கிரெக் பிரபல எழுத்தாளர். அவர் காந்தியக் கொள்கைகளில் நீண்ட நாட்களாகப் பற்றுக் கொண்டவர். பாரத நாட்டுக்குப் பன்முறை வந்துள்ள அவர் காந்தீயக் கொள்கைகளை அமெரிக்க மக்களுக்கு விளக்கியவர். நாங்கள் காந்தி கிராமத்துக்குச் சென்றிருந்த மறுநாள் ராஜாஜி அவரை அவரது குடிலிலே சந்தித்தபோது ஒரு ரஸமான நிகழ்ச்சியைச் சொன்னார். ''ராஜாஜி! தாங்கள் தங்களையறியாமலேயே எனக்கு ஒரு பாடம் கற்றுக் கொடுத்திருக்கிறீர்கள். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் கான்பூரில் நடந்த காங்கிரஸுக்கு நான் வந்திருந்தேன். அப்போது ஒரே கூட்டம். தாங்கள் மேடையை விட்டுக் கீழே இறங்கிவந்தீர்கள். பிறகு சற்று முதுகை வளைத்துக்கொண்டு பணிவாக, நீங்கள் செல்ல வேண்டிய திசையைக் கையால் காண்பித்துக் கொண்டே முன்னேறிச் சென்றீர்கள். கூட்டம் உங்களுக்கு வழிவிட்டு இருபுறமும் விலகிக் கொண்டது. இந்தப் பாடத்தை நியூயார்க்கில்காலிபோர்னியாவில் பெரும் கூட்டங்களில் எல்லாம் அனுஷ்டித்து வெற்றியடைந்திருக்கிறேன். இப்படி உங்களை அறியாமல் எனக்கு ஒரு பாடம் கற்றுக் கொடுத்திருக்கிறீர்கள்!'' என்று மகிழ்ச்சியும் பெருமையும் கலந்த தொனியில் கூறினார். அவருக்கு அறுபது வயதிருக்கும். இந்த வயதில் அவர் ராஜாஜி எப்படி நடந்து சென்றார் என்று அபிநயமே பிடித்துக் காண்பித்து விட்டார். அவ்வளவு உற்சாகம் ராஜாஜியைக் கண்டதில்!

இந்த கிரெக் அவர்கள் முதல் நாள், அதாவது 6-ம் தேதி காந்தி கிராம ஒன்பதாவது ஆண்டு விழாவின் கொண்டாட்ட நிகழ்ச்சிகளின் முதல் நிகழ்ச்சியான கொடி ஏற்று விழாவை நடத்தினார். அன்று கொடி ஏற்றி விட்டு அவர் கூறிய வாசகங்கள் ஒவ்வொரு இந்தியனுக்கும் பெருமை அளிக்கக் கூடியவையாகும்.

''சாதாரணமாகக் கொடி ஏற்று விழாக்களில் நான் கலந்து கொள்வதில்லை. பெரும்பாலான தேசக் கொடிகள் பலாத்காரத்தையும், பிறநாடுகளின் மீது தாம் அடைந்த வெற்றியையும் தான் குறிப்பிடுகின்றன. ஆனால் சுதந்திர இந்தியாவின் தேசக்கொடியை ஏற்ற உற்சாகமாக முன் வருகிறேன். ஏனெனில், இக் கொடியின் நடுவே பருக்கும் அசோகச் சின்னம். முதன் முதலாக அஹிம்சை முறையில் வெற்றி யடையலாம் என்பதை நிரூபித்த நாடு இந்தியா என்பதை எடுத்துக் காட்டுகின்றது. எல்லாவற்றுக்கும் மேலாக மனத்தளவில் நான் இந்தியனாகி விட்டேன்!'' என்று கூறினாராம்.

இப்படி அந்த நண்பர் சொல்லிக் கொண்டிருந்த போதே ராஜாஜி அடுத்த நிகழ்ச்சிக்குத் தயாராகி விட்டார். (தொடரும்)

# என் அன்பிற்கு எல்லை இல்லை

நான் சந்தோஷமாயும் திருப்தியாயுமிருக்கிறேன். என் அம்மாவிடம் நான் கொண்டுள்ள அன்புக்கு எல்லை கிடையாது. வாஸ்தவமாகவே அவள் என் பரிபூரண அன்பிற்கு அருகதை வாய்ந்தவள். அவள் புத்திசாலி எனக்கு க்ளாக்ஸோ கொடுக்கிறாள். அது குழந்தைகளின் எலும்புகளையும், பற்களையும் உறுதியாக வளர்க்க விடமின்-டியும் இரத்தம் வளம்பெற இரும்பு சத்தும் சேர்ந்துள்ள புஷ்டி அளிக்கும் ஒரு பால் உணவாகும். ஆகவே நான் நிம்மதியாய் தூங்குவதில் ஆச்சரியமென்ன... குறையாத எடை வளர்ச்சியும்...நான் முழுவதும் எனக்கு ஒரே சந்தோஷம்.

**நான் சிபாரிசு செய்வது க்ளாக்ஸோ**

**Glaxo**

குழந்தைகளின் பரிசுத்தமான பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (பிரைவேட்) லிட்., பம்பாய் · கல்கத்தா · மதராஸ் · புது டில்லி

# ரகுபதி ராகவ

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 49

உள்ளத்திலுள்ள மலம் நீங்குவதற்காகத்தான் கோவிலுக்குப் போகிறோம். தனக்குள்ளிருக்கும் நற்குணத்தையெல்லாம் திரட்டிக் கொள்வதற்காகத்தான் பக்தன் கோவிலுக்குச் செல்வது. உயிருடன் நடமாடும் பெரியார் ஒருவரை தரிசனம் செய்வதால் அந்தப் பெரியாரிடமிருந்து நன்மையை அடையலாம். அதற்கும் சுயநலமற்ற பக்தியோடு பூஜிக்க வேண்டும். நாம் பூஜிக்கத் தகும் பெரியார்களைவிட தேவாலயத்தில் நாம் பூஜை செய்யும் கடவுள் பரிபூரண குணங் கொண்ட தெய்வமாகும். நம்முடைய கற்பனைக்கு அப்பால் நிற்கும் பூரணம். மக்களுக்கு நாம் எழுதும் கடிதங்கள் பயனற்றுப் போகின்றன. விண்ணப்பம் செய்வது ஏமாற்றத்தில் முடிகிறது. சிலசமயம் பதிலே வராது. ஆண்டவனுக்கு நாம் செய்யும் விண்ணப்பத்துக்கும் பக்தன் கோவிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்து கொள்வதற்கும் காகிதம் வேண்டியதில்லை, பேனாவும் வேண்டியதில்லை, மசியும் வேண்டியதில்லை, பேச்சுமே வேண்டியதில்லை. வாய் திறவாமல் மௌனமாகச் செய்யும் பிரார்த்தனையே போதும். அந்தக் கடிதத்துக்குப் பதில் இல்லாமல் போகாது. பூஜை முழுதும் ஒருவனுடைய பக்திக்குப் பயிற்சி தருவதாகும். அந்தப் பயிற்சியால் கஷ்டம் என்பது கிடையாது. பயனற்றுப் போவது என்பதும் கிடையாது. ஏமாற்றமும் கிடையாது. நாம் சொல்லுவதை அவன் தவறாகக் கொள்வான் என்கிற பயமும் கிடையாது. ஒரு மனிதப் பிறவிக்குச் செய்யும் விண்ணப்பத்துக்கும் ஆண்டவனுக்குச் செய்யும் விண்ணப்பத்துக்கும் இதுவே வித்தியாசம். கோவிலுக்கும் மசூதிக்கும் போய்ப் பூஜை செய்வதின் பொருள் இது. பகவானுடைய இருப்பிடம் என்று கருதி எந்த வித தேவாலயத்துக்குச் சென்று பூஜை செய்தாலும் இதுவே பொருளும் பயனும். நாம் செலுத்தும் பக்தியே அந்தக் கோவில்களின் சிறப்பு. கண்ணுக்கெட்டாத பொருளைத் தேடி அடைய ஆசைப்பட்டு மனிதன் கோவில்களைத் தோற்றுவித்தான்.

[ஹரிஜன், 18—3—33]

தெய்வம் அல்லாத ஒரு பொருளைத் தெய்வமாகப் பாவித்து வழிபடுவதைக் கண்டனம் செய்யும் கூட்டத்தில் நானும் ஒருவன். ஏனெனில் நாம் வழிபடும் முறையைத் தவிர மற்ற முறைகள் எல்லாம் தவறு, பயனில்லை என்று கருதும் மூர்க்கத்தனமும் மூர்த்தி பூஜையில் ஒரு வகையாகும். அந்த வகை மூர்த்தி பூஜையை நான் நிச்சயமாகக் கண்டிப்பவன். நமக்குப் பிடித்த முறையே சரியான முறை; நம்முடைய மதமே சரியான மதம் என்று மூர்க்கமாகப் பிடிவாதம் செய்வது ஒரு வகையான விக்கிரக பூஜையே யாகும். இந்த விக்கிரகப் பூஜையில் மோசமும் ஏமாற்றமும் அதிகம். கல்லும், செம்பும், மரமும் வைத்துப் பூஜை செய்வதைக் காட்டிலும் இந்த மூர்க்கத்தனம் அதிக மடமையாகும்; குற்றமுமாகும். ஒரு கல் விக்கிரகத்தைக் கடவுள் என்று வைத்துக் கொள்வதில் அவ்வளவு தவறில்லை, என்னுடைய மதமே சரியான மதம், மற்றவர்களுடைய சமயங்களெல்லாம் பாபமாகும் என்று தன்னுடைய பிடிவாதத்தையே கடவுளாகப் பாவிப்பது எல்லாவற்றையும் விடப் பெரிய அறியாமை யாகும்.

[யங் இந்தியா, 28—8—24]

பல ஹிந்து கோவில்களிலும் கிறிஸ்தவ கோவில்களிலும், மசூதிகளிலும் மோசமும் திருட்டும் நடைபெறலாம். புனிதம் குறைந்துபோய்க் குற்றம் மிகுந்திருக்கலாம். ஆயினும் பூஜை செய்யும் குருக்கள்மார்கள் அனைவரும் கெட்டவர்கள் என்று சொல்ல முடியாது. எல்லாக் கோயில்களுமே கெட்டுப் போயின என்று சொல்ல முடியாது. எந்த சமயத்திற்கும் ஒரு கோவில் அவசியமாகிறது. கோயிலில்லாமல் சமயம் இருக்க முடியாது. சமயம் தோன்றியதும் அதற்கென்று ஒரு கோவில் தோன்றவே தோன்றும். இது ஒரு தவிர்க்க முடியாத இயற்கை விதி.

ஆண்டவனுக்கு இந்த மனித உடலே ஒரு கோவில் என்பார்கள் அல்லவா? அப்படிச் சொல்வதில் தவறு ஒன்றுமில்லை. ஆயினும் தோலும் சதையும்

கொண்ட அந்தக் கோவில்கள் எத்தனையோ பாபமும் குற்றமும் நிறைந்த கோவில்களாக இருக்கின்றன! அந்தக் கோவில்களையெல்லாம் இடித்து அழித்து விட ஒப்புவோமா? சிலரேனும் நல்லவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் இதயத்தில் ஆண்டவன் கோயில் கொண்டிருக்கிறான் என்பது நமக்குப் போதுமல்லவா? சதையும் தோலும் போர்த்திய உடல்களாகிய இந்தக் கோவில்களைப் போலவே கல்லும் சுண்ணாம்பும் போட்டுக் கட்டிய அக் கோவில்களும் கெட்டுத்தான் போயிருக்கின்றன. அவை தோன்றியது நன்மைக்காகவே. ஆனால் மனிதனுக்குள்ள குறைகளினால் இரண்டுமே கெட்டுப் போகின்றன. இதற்காகக் கோவில்களே வேண்டாம் என்று சொல்வதற்கில்லை.

ஏதேனும் ஒரு இடத்தில் புனிதமாகக் கருதிக் கோவில் என்றோ மசூதி என்றோ மடம் என்றோ வைத்துக் கொண்டுதான் எல்லா மதங்களும் சமயங்களும் சம்பிரதாயங்களும் உலகத்தில் நடைபெற்று வருகின்றன. அப்படியல்லாத எந்தச் சம்பிரதாயத்தையும் நான் கண்டதில்லை. மக்களைத் திருத்துவதற்காகத் தோன்றிய பெரியோர்கள், மகாத்மாக்கள், அவதார புருஷர்கள் அனைவருமே தம்

---

மைச் சேர்ந்த மக்கள் வைத்துக் கொண்டிருந்த கோவில்களை இடித்ததில்லை. விட்டு விட்டதுமில்லை. சீர்திருத்தம் செய்யத்தான் பார்த்தார்கள். அழித்து விட முயலவில்லை. கோவில்களிலேயே நின்று உபதேசம் செய்திருக்கிறார்கள்.

நான் பல ஆண்டுகளாகக் கோவில்களுக்குப் போனதில்லை. அதனால் நான் உயர்ந்தவனாகி விடவில்லை. என்னைப் பெற்ற தாய் உடல் நோயால் பாதிக்கப்பட்டுத் தடைப்பட்ட சமயம் தவிர, எப்போதுமே கோவிலுக்குப் போய் வந்தாள். கோவிலுக்குப் போகாத என்னைவிட அவளுடைய தெய்வ பக்தியே மிகச் சிறந்தது. இதில் சந்தேகமே இல்லை. அதைப் போலவே லட்சக்கணக்கான மக்களுடைய தெய்வ பக்தியும், கோவில்களாலும் மசூதிகளாலும் காக்கப்பட்டு வருகிறது. அவர்கள் மூடர்கள் அல்ல, மூர்க்கர்கள் அல்ல. குருட்டு பக்தர்களும் அல்ல. அறியாமையும் மூர்க்கத்தனமும் எல்லா மக்களுக்கும் பொது. அந்தக் குறை சம்பிரதாய சமய முறைகளினால் உண்டானதல்ல. அது நம்முடைய உள்ளத்திலுள்ள குற்றத்தினால் உண்டான குறை. எந்தச் சம்பிரதாயத்தைக் கொண்டிருந்தாலும் ஒன்றே.

[ஹரிஜன், 11—3—33]

---

# முத்தாலம்மனின்



அன்று அஸ்தினாபுரம் அல்லோல கல்லோலப்பட்டது. வருஷத்துக்கொரு முறை கொண்டாடப்படும் முத்தாலம்மன் திருவிழாவை அன்று சிறப்பாக நடத்துவதென்று கிராமத்துக்காரர்கள் சேர்ந்து முடிவு செய்தனர். அந்தத் தீர்மானம் ஒரு மாதத்துக்கு முன்னமே வெளியிடப்பட்டு விட்டது.

அஸ்தினாபுர மக்களும், சுற்றியிருந்த கிராமத்து ஜனங்களும், அந்தப் பொன்னான நாளை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தனர். அன்றைய தினம், பக்கத்துக்கிராமங்களிலிருந்து குழந்தை குட்டிகள் உள்பட, குடும்பத்தில் ஒருவர் பாக்கி யில்லாமல் பக்தர்கள் சாரை சாரையாக வந்த வண்ணமாயிருந்தனர். உள்ளூர் மக்களும் வித விதமான ஆடை ஆபரணங்கள் அணிந்து மிகவும் குதூகலமாகக் காட்சி யளித்தனர். வருஷத்துக்கு ஒரு நாள் என்றால் அவர்களுக்கு உண்டாகும் உற்சாகத்தைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

அந்தக் கிராமத்துக்குத் திலகம் போன்று விளங்கியது, முத்தாலம்மன் சாவடி. அது ஒரு பிரும்மாண்டமான கற்கட்டடம். கிழக்கு மேற்காக அமைந்திருந்த அதன் முன் பகுதியில் ஒரு சிறிய; சன்னிதி. அதற்கு நேராகக் கல்லினால்செய்யப்பட்ட ஒரு உயர

பட்டாபி நாராயணன்

மான அகல்விளக்கு நின்றது. தர்மகர்த்தாக்களின் உபயத்தினுல், தினந்தோறும் சில மணி நேரங்களுக்கு அதில் 'மினுக் மினுக்' என்று திரி விளக்கு எரிந்து கொண்டிருக்கும்.

சன்னிதிக் கதவு வருஷம் முழுவதும் அடைபட்டுக் கிடக்கும். பட்டப்பகலில் கூட, அந்தக் கதவிலிருந்த சின்னஞ்சிறு துவாரங்களின் வழியே பார்த்தால், உள்ளே பயங்கரமான அந்தகார இருள் சூழ்ந்திருக்கும்.

சாவடியில் சன்னிதிக்குப் பின் புறம் நிறைய இடம் இருந்தது. அதில்தான் அஸ்தினபுரத்தின் வியாபார ஸ்தலம் அமைந்திருந்தது.

காய்கறிக் கடை, பூக்கடை, பழக் கடை, பலசரக்குக் கடை என்று பலதரப்பட்ட கடைகள் அந்தச் சாவடியில் இடம் பெற்றிருந்தன. அவற்றிற்குப் போக எஞ்சியிருந்த காலியான இடங்களில், ஜனங்கள் கூட்டமாக உட்கார்ந்து அரசியல், வேதாந்தம், தத்துவம், ஊர் விவகாரம் போன்றவைகளைப் பற்றி ஆராய்ச்சி நடத்துவார்கள்.

முத்தாலம்மன் கோவில் சன்னிதியில் ஒரு தனிப்பட்ட விசேஷ மென்ன வென்ருல், அதனுள் விக்கிரகமே கிடையாது. வருஷத்துக்கொரு நாள் அந்த அம்மன் அங்கு வந்து வீற்றிருப்பதுதான் அந்த இடத்துக்கே வருஷம் முழுவதும் ஒரு தெய்விகத் தன்மையைக் கொடுத்தது. அகலைப் பயபக்தியுடன் வழிபடும் அந்த ஊர் ஜனங்களைப் பார்க்கும் போது, தெய்வத்தின் அருபத் தன்மையில் அவர்களுக்கு இருந்த அளவற்ற நம்பிக்கை நன்கு வெளிப்பட்டு விட்டது.

கரும்புத் துண்டத்தைக் கொடுத்தால், சாறு தரையெல்லாம் வழிந்தோடும்படி செய்து விடும்: சாவடியில் ஜனங்களின் நெரிசல் அப்படி இருந்தது!

அன்று பிறந்து அன்றே மறையப் போகும் அம்மனைத் தரிசிக்கத்தான் நெருக்கடியையும் பொருட்படுத்தாமல் காத்திருந்தனர் கிராமவாசிகள்.

அன்று பிறந்து அன்றே அழியப்போகிறதா? இதென்ன புதுமையாக இருக்கிறதே....! ஆம்....! முத்தாலம்மனின் திருவிழாவின் மகிமையே அதுதான்.

**வா**னம் பொய்த்தபோது, பயிர்பச்சைகள் தண்ணீரின்றி வாடுவதைத் தவிர்ப்பதற்காக அந்தத் திருவிழா கொண்டாடப்பட்டது. அஸ்தினபுரம் ஒரு வானம் பார்த்த பூமி. அதற்கு இரண்டு மைல் தூரத்திலிருந்த பத்துக் கண்மாய் என்ற பெரிய கண் மாய் நிரம்பினுல்தான், காலத்தில் நல்ல மகசூலை எதிர்பார்க்கலாம். முத்தாலம்மன் திருவிழா பரம்பரை பரம்பரையாக வருஷம் தவருமல் கொண்டாடப்பட்டு வந்தது.

முதல் நாள் மாலை அம்மனின் சிலை பூர்த்தியாகச் செய்யப்படும். அம்மனின் உருவம் செய்வதற்கென்றே ஒரு குடும்பம் தொன்று தொட்டு இருந்து வந்தது. அதுதான் ''அம்மான் குயவன் குடும்பம்.'' குயவன் குடியில் அந்தக் குடும்பத்துக்கென்றே வசதியான ஒரு வீடு கோவில் சொத்திலிருந்து கொடுக்கப்பட்டிருந்தது. அக் குடும்பத்தில் தோன்றிய ஒவ்வொரு மூத்த மகனும், வருஷந்தோறும் அந்தக் குறிப்பிட்ட நாளில் அம்மனின் சிலையைச் செய்து முடிக்க வேண்டும். ஒரு வருஷம் அந்த மூத்த மகன், அம்மன் உருவத்தைச் செய்து முடித்து விட்டால், அவனுக்கு ''அம்மான் குயவன்'' என்று பெயர் வந்து விடும்.

பூர்த்தியான அம்மனின் சிலை, கலை பொருந்தி விளங்கும். புதிய களி மண்ணினுல் மூன்றடி உயரத்தில் அந்த அம்மன் உருவம் அன்றே செய்யப்பட்டு, அன்றே காளவாயில் சுடப்பட்டு, வர்ணங்கள் பல தீட்டப்பட்டுத் தயாராக நிற்கும். 'அம்மனை'க் கிராமத்து மக்கள், மேளதாளம், கொம்பு, சங்கொலி, மத்தளம், உறுமி மேளம் இவைகள் சகிதம் வந்து வரவேற்றுச் சாவடிக்குக் கொண்டு செல்வார்கள். அவ்வளவும் முதல் நாள் மாலை ஏழு மணிக்கெல்லாம் முடிந்துவிடும். ஏழு மணியிலிருந்து இரவு முழுவதும், அம்மனுக்குத் தடபுடலாகப் பூஜை நடக்கும். அம்பாரம்போல் மலர்கள் அதன்மீது குவிக்கப்படும். அம்மனின்கிரீடம் மட்டும்தான் மலர்க் குவியலுக்கு மேல் இலேசாக வெளியே தெரியும்.

சாவடிக்கு வெளியே, குடை ராட்டினம், தொட்டில் ராட்டினம், பொய்க்கால் குதிரை யாட்டம், கரகம், தெருக் கூத்து என்று பல கேளிக்கைகளில் இரவு முழுவதும் ஜனங்கள் ஈடுபட்டுத் தங்களை மறந்து மூழ்கியிருப்பார்கள்.





ல்கி' செப்டம்பர் மாதச் சிறுகதைப் போட்டியில் நூறுரூபாய் பரிசு பெற்ற கதை

ரேவதி

மறுநாள் பொலபொல வென்று கிழக்கு வெளுக்கும் சமயத்தில் அம்மனைத் தேரில் ஏற்றி அஸ்தினாபுர ஊர் முழுவதையும் சுற்றுவார்கள். முத்தாலம்மன் தேர் புறப்பட்டு விட்டால் கிராம மக்களுக்கு உற்சாகந்தான்!

அப்போதுதான் வருஷம் தவறாமல் ஒரு அதிசய சம்பவம் நிகழும். 'அம்மனின் தேர்' முதல் வீதியைத் தாண்டுவதற்குள் அந்த அதிசய நிகழ்ச்சி தொடங்கிவிடும். எல்லோரும் கைகளைக் கட்டிக் கொண்டு அம்மனையே உற்று நோக்குவார்கள். அம்மனின் கண்களினின்றும் நீர்த்துளிகள் வழிந்தோடும்.

அம்மனைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கும் ஜனங்களின் முகத்தில் பரிதாபத்தின் சாயல் படரும்.

ஆனால்....! அம்மனின் கண்ணீர் அவர்களுக்கு வரப்பிரசாதம். அம்மன் கண்ணீர் உகுத்தால், அந்த வருஷம் நல்ல மழை பொழியும். கண்மாய், கிணறு எல்லாம் பொங்கித் ததும்பும். பயிர்கள் செழிக்கும் என்பது அவர்களின் ஐதிகம்.

* * *

முதல் நாள் இரவு முழுவதும் மலர்க் குவியலினுள் வீற்றிருந்த அம்மனுக்கு அபிஷேகம் முதலியன செய்வித்து மறுநாள் அதிகாலையில் வெகு விமரிசையாக அம்மனைத் தேர்மீது வைத்துப் பொருத்தினார்கள். தேர் புறப்பட்டது. அஸ்தினாபுரமே கோலாகலமாகக் காட்சி யளித்தது.

தேர் கிழக்குத் திசை நோக்கிச் சென்றது. முதல் வீதியைக் கடந்தாகி விட்டது. இரண்டாவது வீதியின் கோடிக்கும் தேர் வந்து விட்டது. அப்போது மணி பத்தடித்து விட்டது. ஆனால்....! முத்தாலம்மன் அன்று கண்ணீர் விடவில்லை. ஆவலுடன் எதிர்பார்த்திருந்த பக்தர்கள், ஏமாற்றம் அடைந்தார்கள். ஆயினும், அவர்களுடைய வியப்பு எல்லையை மீறிவிட்டது.

"என்ன? இந்த வருஷம் அம்மனுக்குக் கண்ணீரே வரவில்லை?" என்றார் ஒரு அன்பர்.

"அதுதான் எனக்கும் பெரிய கவலையாயிருக்கிறது. தெய்வ சித்தத்தைப் பற்றி யாருக்கு என்ன தெரிகிறது?"

"இந்த வருஷத்து அம்மனுக்கு ஆயுள் பலமாயிருக்கும் போலிருக்கிறது. அதுதான் கண்ணீர் விடவில்லை" என்றார் மூன்றுமவர்.

"முத்தாலம்மன் கண்ணீர் விட்டால் என்னவென்று நமக்கெல்லாம் தெரியாதா....? அம்மனுடைய கண்ணீர்ப் பெருக்கைப் போன்று, மழை கொட்டும். பெரிய கண்மாய் நிரம்பும். ஆனால் இந்த வருஷம் ஏற்கனவே கண்மாய் நிரம்பிவிட்டது. இன்னும் அம்மன் கண்ணீர் விட்டால் நாமெல்லாம் எங்கு போவது?" என்றார் இன்னொருவர்.

அப்படியே அவர்களுக்குள் பேச்சு வளர்ந்து கொண்டே போயிற்று. ஆனால் அவர்களோ, அல்லது கூட்டத்திலிருந்த வேறு யாரோ, ஒதுக்குப்புறமாக யாருக்கும் சட்டென்று புலப்படாத ஒரு மறைவில் நின்று கொண்டு, கண்ணீர் 'பொல பொல' வென்று உகுத்த முத்தையனைக் கவனிக்கவே இல்லை. அவனைப் பற்றி அவர்களுக்கென்ன கவலை?

முத்தையன்தான். அவ்வூர் 'அம்மான் ருபவனின்' ஒரே மகன். அப்போது தேரின் மீது கம்பீரமாக வீற்றிருந்த அம்மனின் உருவத்தைச் செய்து முடித்தவர் அவனுடைய தந்தைதான். அவர் உருவத்தைச் செய்து முடித்தாரே யொழிய, பூர்ணமாகச் செய்து முடிக்கவில்லை. அதற்குள் அவருக்கு அப்படி நேரும் என்று யார் எதிர்பார்த்தார்கள்?

தந்தையை இழந்தது கூட அவனுக்கு அதிர்ச்சி அளிக்கவில்லை. ஆனால் மரணத்தின் வாயில்



நின்றுகொண்டு, அவனுடைய தந்தை அவனுக்கு இட்ட கட்டளையை நிறைவேற்ற முடியாமல் போய்விட்டதே என்று நினைக்க போதுதான், துக்கம் அவன் உள்ளத்தில் பீறிட்டுக் கொண்டு வந்தது.

முத்தையன் தான் இனி வருங்கால 'அம்மான் குயவன்.' அவன்தான் அடுத்த வருஷத்திலிருந்து அம்மனை உருவாக்க வேண்டியவன். அப்படிப்பட்டவன், முதல் படியிலேயே சறுக்கி விழும்படி சந்தர்ப்பம் செய்துவிட்டதே! தந்தை அவனுக்கு இட்ட முதல் கட்டளையையே இவனால் பூர்த்தி செய்ய முடியாமல் போய்விட்டதே! அவன் கடமையில் தவறிவிட்டவனாகி விட்டானே! தெய்வத்தின் கோபமும், தந்தையின் சாபமும் சேர்ந்து அவன் வாழ்நாள் முழுவதும் வாட்டி எடுக்குமே என்று எண்ணியபோது, அவனுக்கு இதயமே வெடித்துவிடும் போலாகிவிட்டது. தெரு ஓரத்தில் குத்திட்டு உட்கார்ந்து கொண்டு, தலையை முழங்காலுக்கிடையில் வைத்தவாறு, குலுங்கிக் குலுங்கி அழுதான்.

அவன் நிலை தடுமாறினான். அவனுடைய சுய நினைவு தடுமாறியது. முத்தையனுடைய சிந்தனையில் என்னவெல்லாமோ பயங்கரமாகத் தோன்றியது. முதல்நாள் நடந்தது ஒன்று விடாமல் அவனுடைய அகக்கண் முன் தோன்றியது.

*    *    *

“ஏலே .... முத்தையா....என்னலே தூங்கி வழியறே? பொழுது போங்காட்டியும் 'அம்மாளை'ப் பூர்த்தியாக்கணும். அந்தக் களி மண்ணை கல்லாப் பிசைந்துகொண்டுவா!” என்ற கட்டளையைப் பிறப்பித்தது, அம்மான் குயவனின் தழுதழுத்த குரல்.

களிமண்ணை நன்றாகப் பிசைந்து, தந்தையின் முன்பாக ஓடிச் சென்று வைத்தான் முத்தையன். அம்மான் குயவனின் விரல்கள் நர்த்தனமாடின. அரைமணி நேரத்தில், வெறுங் களிமண், அம்மனின் அழகான வடிவைப் பெற்று விட்டது.

முத்தையன், தந்தைக்கு உதவி செய்வதில், பரம்பரத்தைப் போன்றுதான் 'கழன்றவாறு சுடுபட்டிருந்தான். சிலையைக் காளவாயில் அவன்தான் வைத்தான். வெளியே எடுத்தான். சூட்டை ஆற்றினான். தூரிகை வர்ணக் கிண்ணங்கள் சகிதம் தந்தைக்குச் சரியாக அவனும் அம்மனுக்கு வர்ணம் தீட்டினான். பெரும்பாலும் அந்த வேலையும் முடிந்து விட்டது. மணி இரண்டு அடித்து விட்டது.

அம்மனுக்குக் கண்ணும், புருவமும்தான் வர்ணம் பூசப்பட எஞ்சியிருந்தன. அம்மான் குயவன் மெல்லிய நீண்ட தூரிகை ஒன்றைக் கையிலெடுத்துக் கொண்டான். மஞ்சள் பூசிக் குளித்தமாதிரி அந்தப் பதுமை காட்சியளித்தது. சிவப்பு வர்ணத்தால் வட்டமான ஒரு திலகமிட்டான் அம்மான் குயவன். தூரிகையைத் தண்ணீரில் கழுவினான். வில்லைப்போன்று கரிய நிறத்தால் புருவத்தைத் தீட்டினான். கயல்விழியைத் தீட்டினான். அம்மனின் கண் உயிர் பெற்றது. ஒளி வீசியது. அதனின்று அன்பு வழிந்தோடியது.

அம்மான் குயவன் சற்று பின்னே நகர்ந்தான். எட்ட இருந்தவாறு கழுத்தைச் சாய்த்து, தன்னுடைய வேலையைச் சரிபார்த்தான். இரு கரங்களையும் குவித்தான். திடீரென்று வெட்டிச் சாய்த்த மரம் போன்று கீழே சாய்ந்தான். அவன் கண்கள் மூடின.

முத்தையன் அதை எதிர்பார்க்க வில்லை. அவனால் நிலைகுலைந்து விழுந்த அவன் தந்தையைத் தாங்கிக்கூடப் பிடிக்க முடியவில்லை.



அலறிப் புடைத்துக் கொண்டு தந்தையைத் தாங்கினான். அவர் தலையைத் தூக்கித் தன் மடிமீது வைத்துக் கொண்டான். முத்தையன் கதறினான். குயவன் குடியிலிருந்த அத்தனை பேரும் அவனைச் சூழ்ந்து கொண்டனர். அம்மான் குயவன் மூச்சுப் பேச்சின்றிக் கிடந்தார். மெதுவாக அவரைத் தூக்கி வீட்டினுள் கிடத்தி விட்டு, வைத்தியரை அழைத்து வர ஓடினான். வீட்டு வாசலை அடைவதற்கு முன் வாத்திய ஒலி நெருங்கி விட்டதை உணர்ந்தான். அம்மனை அழைத்துச் செல்லக் கிராம வாசிகள் வந்து விட்டார்கள் என்பதை நொடிப் பொழுதில் புரிந்து கொண்டான்.

தந்தையின் எதிர்பாராத நிலைமையினால் திருவிழா நின்றுபோகச் செய்துவிடக் கூடாது என்று முடிவு செய்தான். வீட்டைச் சுற்றி நின்ற சுற்றத்தார்களிடம், தன்னுடைய முடிவைச் சொன்னான். அவர்களைக் கலைந்து போகுமாறு வேண்டிக் கொண்டான். தந்தைக்கு ஏற்பட்ட விபத்தை ஒருவரும் வெளியிடாதபடி இருக்குமாறு முத்தையன் மன்றாடிக் கேட்டுக் கொண்டான்.

அம்மனைத் தலையில் தூக்கிக் கொண்டான். அக்கூட்டம் 'குயவன் குடி'யினுள் நுழைவதற்கு முன், அவன் எதிர் நோக்கிச் சென்று அடைந்து விட்டான். அவர்கள் கையில் அம்மனை ஒப்படைத்தான். தன்னுடைய மனப் பளுவின் பெரும் பகுதியை இறக்கி விட்டதைப் போன்று உணர்ந்தான். அவர்கள் அவனைக் கோவிலுக்கு வந்து மரியாதை பெற்றுப் போகும்படி வற்புறுத்தினார்கள். தந்தையை அழைத்துக் கொண்டு வருவதாக அவர்களுக்குச் சமாதானம் சொல்லி அனுப்பிவைத்தான். மேளதாளங்கள் முழங்க அவர்கள் முத்தாலம்மனின் சிலையுடன் குதூகலமாகத் திரும்பினார்கள்.

முத்தையன் நேராக வைத்தியர் வீட்டை நோக்கி ஓடினான். வைத்தியரை அழைத்து வந்தான். வைத்தியர் கிழவரின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். அது பேச வில்லை. அவர் உதட்டைப் பிதுக்கினார். தம்மையறியாமல், கைக்குட்டையினால் கண்களைத் துடைத்துக் கொண்டார். முத்தையனை ஏறிட்டுப் பார்த்தார். அவன் 'கோ'வென்று கதறிக் கொண்டே கீழே சாய்ந்தான். அவனுடைய மயக்கம் உடனடியாகத் தெளிவிக்கப்பட்டது.

வெளியே நன்றாக இருட்டி விட்டது. முத்தையனின் மனம் அதைக் காட்டிலும் பன்மடங்கு பயங்கரமாக இருண்டு விட்டது. இந்தச் சமயத்தில், ''உங்கள் தந்தையின் மடியில் இந்தக் கடிதம் இருந்தது'' என்று ஒரு கடிதத்தைக் கொண்டு வந்து முத்தையனிடம் கொடுத்தனர். அதை விளக்கின்ஒளிக்கு நேராகக் கொண்டு போய்ப் பிரித்துப் படித்தான் முத்தையன். அவனுடைய கண்கள் நிலைக் குத்திட்டன. அதில் கோணல் மாணலான எழுத்தில் ஏதோ எழுதி யிருந்தது.

'' முத்தையனுக்கு.

நீ இதைப் படிக்கும் போது நான் நிம்மதியாக இறந்திருப்பேன். இதை எழுதுவதற்கு [illegible]ட்டுத்தான். எனக்கு 'அம்மா' ஜீவன் கொடுத்திருக்கிறாள். இனி உனக்கு முத்தாலம்மாதான் துணை. நான் ஒரு தவறு செய்து விட்டேன். அம்மா கண்ணீர் விடும் ரகசியத்தை உன்னிடம் இது வரையில் சொல்லவேயில்லை. அதைப் பற்றிய முழு விவரமும் 'கண்ணீர் ரகசியம்' என்று ஒரு ஓலையில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. அந்த ஓலை நம் குடும்பத்துக்கு ஒரு பொக்கிஷம். அதை என் படுக்கைக்குள் பத்திரமாய் வைத்திருக்கிறேன். அதை எடுத்து உடனே படித்துப் பார்த்துக் கொள். இந்த வருஷம் நானே எல்லாம் தயார் செய்து விட்டேன். ஆனால் அதை அம்மாளின் கண்ணுக்குப் பின்புறம் பொருத்தமட்டும் எனக்கு நேரமில்லாமல் போய் விட்டது. உடனே பூஜையறையின் மாடத்தில் வைத்திருக்கும் இரண்டு கண்ணீர்ப் பைகளை எடுத்து அம்மாளின் கண்களுக்குப் பின்புறம் பொருத்தி விடு. உன்னை அம்மன் காப்பாற்றுவான்.

அம்மான் குயவன்.''



அம்பில் திரு வி. செல்லப்ப முதலியார் புதல்வியும், திரு சி. சுந்தரராஜன் சகோதரியுமான செல்வி மீராவுக்கும், கந்தாடு திரு கே. வேதாசல முதலியார் குமாரன் செல்வன் கே. வி. சீனிவாசனுக்கும் செப்டம்பர் 13ல் சென்னையில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்கு நண்பர்களும், உறவினர்களும், மந்திரிகளும், உயர்தர உத்தியோகஸ்தர்களும் விஜயம் செய்து மணமக்களுக்கு ஆசி கூறினார்கள். வாழ்க மணமக்கள் !

முத்தையன் உள்ளே வேகமாக ஓடிச் சென்றான். தந்தையின் படுக்கைக்குள்ளிருந்த ஓலையை வெளியே எடுத்தான். பரபரவென்று அவன் கண்கள் அதில் பொறித்திருந்த வாசகங்களைப் படித்தன.

அந்த ஓலையில் :

'' கண்ணீர் ரகசியம்—கண்ணீர்ப் பை : ஆட்டுச் சவ்வினால் ஒரு சிறிய பை செய். அதனுள் தண்ணீரை நிரப்பு. தைத்து வாயை அடைத்து விடு. மறுபுறம் ஒரு சிறு துவாரம் செய்து அதை மெழுகினால் அடை. கண்ணில் பொருத்து. வெய்யிலும் சூடும் பட்டு. அந்த மெழுகு இளகும். வாய் திறக்கும். சொட்டுச் சொட்டாகக் கண்ணீர் வெளிவரும்.''

இவ்வாறு எழுதப்பட்டிருந்தது.

'' ஐயோ ! '' என்று முத்தையன் தலையில் அடித்துக் கொண்டான். ''அவசரப்பட்டு விட்டேனே '' என்று அலறினான். இரு கண்ணீர்ப் பைகளையும்—தந்தையார் ஏற்கனவே செய்து வைத்திருந்தவைகளைத்தான்—கையில் எடுத்துக் கொண்டு வெறி பிடித்தவனைப் போன்று வெளியே ஓடினான். அம்மனின் கண்களில் அவற்றை எப்படியும் அன்று பொருத்திவிட வேண்டுமென்றுதான் அவன் அப்படி ஓடினான். சடலத்தை அப்புறப்படுத்

தக் காத்திருந்தவர்களெல்லோரும் பிரமித்துப் போய் நின்றனர். வைத்தியர் மட்டும், முத்தையனின் செய்கையால் கலக்கமுற்று அவனைப் பின் தொடர்ந்தார்.

முத்தையன் நேராக ஓடிப் போய் முத்தாலம்மன் சாவடியை அடைந்தான். ஆனால்... காலம் கடந்து விட்டது.

சாவடி முழுவதும் ஒரே ஜனத்திரள். கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஒரு அடி கூட அவனால் முன்னேற முடியவில்லை. உயரமான திண்ணையொன்றின் மீது ஏறி நின்று மூல விக்கிரகத்தை நோக்கினான். மலர், குன்று போல் காட்சியளித்தது. அம்மனின் கிரீடம் மட்டும் சிறிது வெளியே தென்பட்டது.

முத்தையனின் மனம் பதைபதைத்தது. தந்தையின் கட்டளையை அவனால் நிறைவேற்ற முடியாமல் போய் விட்டது. அவன் சித்தம் கலங்கியது. மூளை குழம்பியது. கண்கள் இருண்டன. உடல் முழுவதும் நடுக்கம் கண்டது. அங்கேயே மயங்கி உயிரை விட்டு விடலாம் போலாகி விட்டது அவனுக்கு. தலை சுழன்றது. தடுமாறி முன்புறம் சாய்ந்தான்.

வைத்தியரின் கரங்கள் அவனைத் தாங்கிப் பற்றிக் கீழே இறக்கின. வைத்தியர் அவனைச் சற்றுத் தேற்ற முயன்றார். அவனை அழைத்துக் கொண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டார். முத்தையன், நடைப்பிணம் போன்று அவரைத் தொடர்ந்தான். தந்தையின் சடலம் அன்றிரவே, அடக்கம் செய்யப்பட்டது. அவனுக்கு ஒன்றுமே நினைவில் தங்கவில்லை. அவனுக்குத் தூக்கத்தில் நடப்பதைப்போன்று தந்தையின் அடக்கம் நடந்தேறியது. அன்று இரவு முழுவதும் அவன் கண்ணை மூடவில்லை. பித்துப் பிடித்தவன் போல் அவன் உட்கார்ந்திருந்தான். மறு நாள் விடிந்தவுடன் வீட்டை விட்டு வெளிக் கிளம்பியவன்தான்; பைத்தியக்காரனைப் போன்று ஒரு சமயம் சிரிப்பதும், மறு சமயம் குலுங்கிக் குலுங்கி அழுவதுமாக யாருடைய கண்ணிலும் படாமல் ''தேரை''ப் பின் தொடர்ந்து முத்தையன் போய்க் கொண்டிருந்தான்.

* * *

இரண்டாம் தெருக் கோடியில் அவன் எவ்வளவு நேரம் அப்படியே குந்திட்டு உட்கார்ந்திருந்தான் என்று அவனுக்கே தெரியாமல் போய் விட்டது. தேர் நிலைக்குப் போய் இரண்டு மணி நேரமாகி விட்டது.

மாலை சரியாக ஆறு மணி. பேரிடி போன்ற வாணங்களின் வெடிச் சப்தம் அவனை இந்த உலகத்துக்குக் கொண்டு வந்தது. அவன் தலையை நிமிர்த்திப் பார்த்தான். அம்மன் புறப்பட்டு விட்டது. எல்லோருமாகச் சேர்ந்து அம்மனைக் கொண்டு சென்று அவ்வூர் ''எல்லைக் குளத்தில்'' தண்ணீருக்குள் போட்டு விடுவார்கள். முத்தாலம்மன் அன்றே அழிந்துவிடும்.

முத்தையன் தலை தெறிக்க அக் கூட்டத்தை நோக்கி ஓடினான். அவர்களைத் தடுத்து நிறுத்துவதற்கு அவனுக்கு அதிகாரமும் கிடையாது. போதிய மனத் தெம்பும் அவனிடம் இல்லை. எல்லோரோடும் சேர்ந்து முத்தையனும் குளத்தை அடைந்தான்.

குளத்தைச் சுற்றி ஆட்கள் கூடி விட்டார்கள். இடுப்பில் குழந்தையை இடுக்கியிருந்த தாய்மார்கள், குடும்பத் தலைவர்கள், கர்ப்பிணிகள், இளந் தம்பதிகள், சிறுவர்கள், வயோதிகர்கள், என்று பலதரப்பட்டவர்கள் அக்கூட்டத்தில் இருந்தார்கள். கூட்டத்தில் பாதி குளத்தினுள்ளே இறங்கி விட்டது. பாதி வேடிக்கை, பாதி கவலை, பல உணர்ச்சிகள் அவர்களுடைய முகத்தில் பிரதிபலித்தன. வாத்தியங்கள் ஒன்றாகச் சேர்ந்து கெட்டிமேளம் வாசித்தன. பிரளய காலத்தில் ஏற்படுவதாகச் சொல்லப்படும் பேரொலியையொத்த முழக்கம் அங்கு வெளிக்கிளம்பியது. ஹா...ஹா...ஹா...என்று எல்லோருடைய குரலும் அம் முழக்கத்துடன் கலந்தது.

அம்மனைத் தண்ணீருக்குள் போட்டாகி விட்டது. அம்மன் அந்நீர்ப் பரப்பின் அடித்தளத்தைப் போய்ச் சேர்ந்தாள். இனி அவர்கள் எல்லோரும் திரும்பிப் பார்க்காமல் குளக் கரையை அடைய வேண்டும். அதுவும் அவர்களுடைய ஐதிகம் தான்.

எல்லோரும் திரும்பினார்கள். வாத்தியக்காரர்கள் அங்கு சற்று ஓய்வு எடுத்துக் கொண்டனர். அப்போது நன்கு இருட்டிப் போய் விட்டது.

அவர்கள் எல்லோரும் பத்து கெஜம் முன்னேறியிருக்க மாட்டார்கள்.

அவர்களின் பின்புறம் காட்டு விலங்குகள் யாவும் ஒன்று சேர்ந்து கர்ஜிப்பது போன்ற பயங்கர ஒலி கேட்டது. அவர்கள் திரும்பவில்லை. ஆனால் அந்த ஒலி நொடிப் பொழுதில் அவர்களை நெருங்கி விட்டது. அவ்வளவுதான்; அடுத்தகணம் எல்லோரும் தடுமாறிக் கீழே சாய்ந்து விட்டனர்.

அவர்களைப் பலமாகத் தாக்கிக் கீழே தள்ளியவாறு, நொங்கும் நுரையுமாக அஸ்திரபுரக் கிராமத்தை நோக்கி முன்னேறியது ஜலப் பிரளயம். எங்கும் ஒரே கூக்குரல். அழுகைக் குரலும், கதறலும் அந்தப் பிராந்தியம் முழுவதும் நிரம்பி எதிரொலித்தன. எங்கும் ''சோ'' வென்ற இரைச்சல். மரங்கள் யாவும் வேருடன் கீழே சாய்ந்தன. குடிசை முழுவதும் நீரில் மிதந்தன. அந்தப் பிராந்தியமே பிரளய பூமியைப் போன்று காட்சியளித்தது. அதிர்ச்சியில் உயிர் இழந்தோர் எண்ணற்றவர். நீரில் மூழ்கி மறைந்தவர்கள் கணக்கில் அடங்க வில்லை.

காவந்காரர்களின் கட்டையும் மீறி, கடல் போன்று நீர் தேக்கியிருந்த ''பத்துக் கண்மாய்'' உடைத்துக் கொண்டு விட்டது. ஒருவரும் அதை எதிர்பார்க்க வில்லை. ஊருக்கும் கண்மாய்க்கும் இடையே இருந்தது இரண்டு மைல்கள்தாம். வெள்ளப் பிரவாகத்துக்கு அது ஒரு தூரமா? எவராலும் முன் கூட்டித் தகவலும் கொடுக்க முடியவில்லை. இயற்கை வெறி கொண்டு விட்டால், மனிதனால் என்ன செய்ய முடியும்?......

முத்தாலம்மன் அந்த வருடம் கண்ணீர் விட வில்லை. ஆனாலென்ன? கணவனை இழந்த ஸ்திரீகள், குழந்தையைப் பறி கொடுத்த பெண்மணிகள், உற்றார் உறவினர்களை இழந்த பெண்கள்,—அந்த அம்மன்கள்தான் அவளைப் போட்டுத் தடுக்க முடியாதபடி கண்ணீர் உகுத்து விட்டனரே!......

---

**இந்தக் கதையில் வரும் ஒரு காட்சிதான் இவ்வார அட்டைச் சித்திரமாகத் திகழ்கிறது.**

# மேலும் மலிவானது!




## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ஏம்மியமணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

**இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?**

குணம் உத்தரவாதம்
கால்கேட் பாமாலிவ்
அளிக்கிறது




**ப்ரோடெக்ஸ்**
**சர்வப்பிரயோக**
**வாசனைப் பௌடர்**

PTR/G/3

இலக்கியச் செல்வம்-3



# நரக இருள்

பேராசிரியர்
அ. சீநிவாசராகவன்

**உ**தயம் மலர்கிறது. உலகத்தின் அழகு தனிரொளிக் கரம் நீட்டிப் பிப்பாவை அழைக்கிறது. பிப்பாவாக—அஸாலோ நகரத்து ஆலைத் தொழிலாளியாக—இருப்பதில் இப்போது அவளுக்கு மனக் குறை இல்லை.

'எந்தப் பணியும் இறைவனுக்கு ஒன்றே'

என்ற பாடல் சிந்தையில் ஆனந்தத் தேன் சொரிகிறது. அதைச் சுவைத்துக் கொண்டே, அவள் போகிறாள்.

பணமும், பதவியும், பெருமையும் உடையவர்கள் தன்னைவிடப் பாக்கியசாலிகள் என்று முதலில் அவள் எண்ணியது உண்மைதான். ஆலை முதலாளி லூக்காவின் மனைவியான ஆதிமா—பணத்திலே புரளுகின்ற அந்த ராங்கிக்காரி—காதலன் ஸிபால்ட் என்பவனோடு, பூலோக சொர்க்கம் ஒன்றைச் சிருஷ்டி செய்து விட்டாளோ என்றும் பிப்பா எண்ணினாள். ஆதிமாவாகத் தன்னைப் பாவித்துக் கொள்ளலாமா, அப்படிச் செய்வதால் அவளுடைய இன்ப உலகத்தைக் கற்பனை மூலமாகவேனும் தொட்டுப் பார்க்க முடியுமா என்றெல்லாம் பிப்பா நினைத்ததும் உண்டு. ஆனால் இந்த நினைவை உடனே ஒதுக்குகிறாள். ஆதிமாவின் இன்பமும் ஒரு இன்பமா, பொய்யிலே புழுத்த அந்த உடல் வெறியும் இன்பமாகுமா என்று எண்ணி, பிப்பாவாகவே இருக்க முடிவு செய்கிறாள்; பகற்பொழுதின் சௌந்தர்ய வெளியிலே உல்லாசமாகப் பாடிக் கொண்டு போகிறாள்.

ராபர்ட் பிரௌனிங் எழுதிய 'பிப்பா செல்கின்றாள்' என்ற ஆங்கிலக் கவிதை நாடகத்தின் முதற் காட்சி இது. இதைச் சென்ற வாரம் பார்த்தோம். இந்தக் காட்சியில் தோன்றும் நாடகப் யாத்திரம் ஒன்றே. அது பிப்பா. வேறு சில பாத்திரங்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன. ஆனால் அப்பாத்திரங்கள் இந்தக் காட்சியில் நேரடியாகத் தோன்றவில்லை. பிப்பாவின் மனத்திலே, அவர்களைப் பற்றி எழுந்த எண்ணங்களையும், காலைப் பொழுது தூண்டிய அழகுணர்ச்சி அலைகளையுமே கவிஞன் சித்திரிக்கிறான்.

**நா**டகத்தின் இரண்டாம் காட்சி, ஆலை முதலாளியின் மனைவி ஆதிமாவின் வீட்டை யடுத்த பூங்காவுக்கு நம்மை அழைத்துச் செல்கிறது. அங்கே, பூம்புதர் சூழ்ந்த சவுக்கண்டி ஒன்று, அது தான் ஆதிமாவின் கொடிவீடு. உள்ளே போகிறோம். மூடியுள்ள ஜன்னலின் இடுக்கு வழியாக, காலை ஒளி இரத்தம் போல் கசிகிறது. அந்த மங்கலில், ஆதிமாவும், அவள் காதலன் ஸிபால்டும் நிற்பதைப் பார்க்கிறோம்.

ஸிபால்ட் பாடிக் கொண்டிருக்கிறான்:

'தூங்காத கண்இமையைக் கோட்டு. கோட்டு:
வீங்கு நீ விழிப் பகலை வேட்டு. வேட்டு:
ஒங்கும் இந்த ராப்போழுதின் விட்டுக்கட்டு -
மதுவை விட்டுக் கட்டு'

குடியர்கள் கோலாகலமாகப் பாடும் ஜர்மன் பாட்டு. ஆமாம், ஸிபால்ட் ஜர்மன் தேசத்தைச் சேர்ந்தவன்,

சங்கீத வித்வான், இத்தாலிய நாட்டுக்குப் பிழைக்க வந்தவன். வந்த இடத்தில், அஸாலோ நகரத்தில், ஆலை முதலாளி ஊர்க்காவின் ஆதரவைப் பெற்ருன். கிழவன் ஊர்க்கா, தன் இளம் மனைவிக்குச் சங்கீதம் கற்றுக் கொடுக்க, ஸிபால்டை அமர்த்தினன். அதிலிருந்து விளைந்தது வினை.

'ஜன்னலைத்திற' என்கிருள் ஆதிமா. எத்தனையோ காலமாகத் திறக்கப் படாத ஜன்னல். ஸிபால்ட் கதவை நெட்டித் தள்ளுகிருன். அருகில் நிற்கும் ஆதிமாவின் கூந்தலின்மேல் பொல பொல வென்று புழுதி விழுகிறது:



கூந்தலிலும், அவள் மனத்திற்போலவே, கறை படிகிறது.

திறந்த ஜன்னல் வழியாக, காலை வெய்யில் பாய்ந்து வரவும், ஸிபால்ட், ஆதிமா இருவரையும் நன்ருகப் பார்க்க முடிகிறது. இருவர் முகத்திலும் தூக்க விடாய், காமத்தின் சேறு, விழியிலே இனந் தெரியாத கலக்கம்; அதன் அடியிலே ஒளிந்து கொள்ள முயல்வது என்ன, அவமானமா, முரட்டுத் தெம்பா, பாப நிழலா, பயமா? ஜன்னல் வழியாக வெளியிலே எட்டிப் பார்த்த படி, ஆதிமா பேசுகிருள்.

**ஆதிமா:** அப்பாட, எவ்வளவு தெளிந்த ஒளி! தொலைவில், வெனிஸ் நகரத்து புனித மார்க் ஆலயம் தென்படுகிறது...அதோ, அது பாதுவா நகரம், அந்த நீலத் திட்டு.

**ஸிபால்ட்:** காலைப் பொழுதா இது? தூ..பனி எங்கே, தண்ணென்ற புதுமை எங்கே? ஏதோ சூரியன் என்ற நெருப்புப் பந்தத்தைத் தொங்கவிட்ட இரவு மாதிரிதான் இருக்கிறது. நேற்று மாலை ஜன்னல் வழியாக உள்ளே நுழைந்தேனே, அப்போது நான் மிதித்துக் காயப்படுத்திய அந்தப் பூஞ்செடி இன்னும் தலை நிமிர்த்தவில்லை. காலை வந்தும், வாடி வதங்கித்தான்... அதற்கு உயிர் வரவில்லை.

**ஆதிமா:** மூடு, மூடு, ஜன்னலை மூடு.

ஏன் ஜன்னலைத் திறக்கச் சொல்லி வெளியிலே பார்த்தவள் இப்போது மூடச் சொல்கிருள்? அவள் குரலிலே ஏன் இந்தப் பதற்றம்? ஸிபால்ட் பேசுகிருன்.

**ஸிபால்ட்:** இருக்கட்டும், திறந்தே இருக்கட்டும். இந்தக் காலைப்பொழுது வயிற்றைக் குமட்டுகிறது. இருந்தாலும், இங்கே உள்ளே மூச்சுத் திணறுகிறது. இங்கே வீசும் இரத்த வாடை சகிக்க முடியவில்லை. வெளியிலே சாய்ந்து நிற்கிறேன்...வேண்டாம்.

(ஜன்னலை மூடுகிருன்)

வேண்டாம், உலகத்தை, வெளி உலகத்தைக் கண் காணுமல் அடைத்து விட்டேன், அது நாசமாய்ப் போகட்டும், உனக்கு எப்படி இருக்கிறது, ஆதிமா? நமக்கு என்ன கவலை இந்த உலகத்தைப் பற்றி, ஊரைப் பற்றி? ஒளிவு மறைவு எதற்கு? இவ்வேஷத்தையும், பாசாங்கையும் களைந்து எறிந்து விடுவோம். எல்லாவற்றையும் அம்பலமாக்கி விடுவோம். என்ன?

**ஆதிமா:** உஸ், பேசாமல் இருப்பது நல்லது.

**ஸிபால்ட்:** பேசுவது நல்லதே. மறுபடியும் மறுபடியும் பேசுவதே சரி. இங்கே பார், அவன் இரத்தம். ஆமாம், மறுபடியும் சொல்கிறேன், அவன் இரத்தம்.

**ஆதிமா:** நடந்ததைப் பற்றி ஏதாவது வருந்தினல்...

**ஸிபால்ட்:** வருத்தமா? யாருக்கு வருத்தம்? எதற்காக? நான் சொன்னேனு, இப்படி நடந்துவிட்டதே என்று வருந்துவதாக?

**ஆதிமா:** இல்லை, என்ன சொல்ல வந்தேன் என்ருல், நடந்து விட்ட இது. அதுதான், அது...

**ஸிபால்ட்:** இது, இது, அது! எது என்று அதன் பெயரைச் சொன்னல் வாய் வெந்து விடுமோ? சற்று முன்பு தான் நமது இன்பத்தின் தவிர்க்க முடியாத விளைவு, காதலில் கனிந்த முடிவு

பல் சொத்தையை நிறுத்துங்கள்

டூத் பிரஷ் **டெக்**கை

வாங்குங்கள்!

அழகிய
பிளாஸ்டிக்
பிடி

சுத்தமான
நைலான்
முடிகள்

ஜான்ஸன்
அண்ட் ஜான்ஸன்

TEK. 3652 (A)

# தேனு பாங்க்

தேவகரன் நான்ஜி பாங்கிங் கம்பெனி லிட்.

ஸ்தாபிதம் : 1938

62 காரியாலயங்களும், 14 ஸேப் டிபாசிட் வால்டுகளும்

---

## தேனு பாங்கின் மதராஸ் கிளை

149, அண்ணு பிள்ளை தெரு, ஜி. டி.

( கோவிந்தப்ப நாயக்கன் தெரு – அண்ணுப்பிள்ளை தெரு, சந்திப்பில் )

1956 அக்டோபர் 20-ம் தேதி சனிக்கிழமை

திறக்கப்படும்

---

எல்லாவிதமான பாங்கிங்
அலுவல்களும் செய்யப்படும்

பிரவின்சந்திர வி. காந்தி
மானேஜிங் டைரக்டர்

---



எண் சாண் உடம்பிற்கு
சிரஸே பிரதானம்

குளிர்ச்சி
நறுமணம் மற்றும்
கேச சிங்காரம்

# டி.எஸ்.ஆர்



- ★ சந்தனுதித் தைலம்
- ★ அரகஜா
- ★ அரைக்கீரை விதைத் தைலம்
- ★ கோகுல் ஹேர் ஆயில்



**டி.எஸ்.ஆர் & கோ.**
கும்பகோணம்

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள்: காசாஜ் ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ★கோயமுத்தூர் பாலக்காடு, நீலகிரிக்கு சோல்ஏஜண்டு: B. பாலபட்டாபி, (ஸ்தாபிதம்1932), வைசியாள் தெரு, கோயமுத்தூர் கல்கத்தாவில் கிடைக்குமிடம்: கோகுல் ஸ்டோர்ஸ், 179/1, ஹாரிஸன் டவுன் ரோடு, கல்கத்தா - 26

என்று பேசினோம். இப்போது பெயரைக் கூடச் சொல்ல முடியவில்லை, அப்படித்தானே? அது. இது. என்ன மறைவு வந்து விட்டது திடீரென்று? ஆசாரக் கள்ளத்தை யெல்லாம் வீசி எறி. உள்ளதைச் சொல், நான் சொல்கிறேன்: லூக்கா ஒரு மானங்கெட்ட பதர், நான் அவன் கழுத்தை வெட்டியவன், கொலைகாரன், நீயோ......? தொலைந்தான் சனியன், செத்தான், என் கண் எதிரே அவன், அவன் இனி உன்னைக் கொஞ்ச மாட்டான்.

**ஆதிமா:** அதற்கு நீ இருக்கிறாயே?

ஸிபால்டின் போக்கு திடீரென்று மாறுகிறது. அவன் மனம் தடுமாறுகிறது என்பதை அவன் பேச்சு காட்டுகிறது. உலகத்தை லட்சியம்செய்யாமல் எல்லாவற்றையும் திறந்து காட்டிவிட வேண்டும் என்று சொன்னவன் இப்போது வேறு விதமாகப் பேசுகிறான்:

**ஸிபால்ட்:** ஆதிமா! நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும். நம்முடைய உறவைப் பிரமாதமாக, வெளிக்குத் தெரியும்படி கொண்டாடப்படாது. என்ன, தெரிகிறதா? வெளிக்குத் தெரியாமலேயே, இதுவரை இருந்தது போலவே இருக்க வேண்டும். சிறுபிள்ளைத்தனமாகக் கொஞ்சிக் குலவுகின்ற அந்த விலங்கு நமது காதலுக்குத் தேவை இல்லை: அப்படி யெல்லாம் செய்வது தான் காதல் இருக்கிறது என்பதற்கு அடையாளமா? அடையாளம் எதற்கு? உன்னைக் காதலிக்கிறேன்......இன்னும் காதலிக்கிறேன். லூக்காவுக்கு நேர்ந்த இந்தக் கதிக்குப் பின்னும் உன்னை நான் காதலிக்கிறேன். நாம் சண்டைகூடப் போட்டுக் கொள்வோம்.. ஆமாம்! ஒருவரை ஒருவர் இழப்பதற்கு உரிமை இருக்கிறது என்ற வகையில் சண்டை கூடப் போடுவோம். அப்போதுதான் நம்மிடையே காதல் மாத்திரம் இருக்கிறது என்று ஆகும். இல்லாவிட்டால், இது. இப்போது நடந்துவிட்ட இது. இது காரணமாக, நமக்குள்ளே பிரிக்க முடியாத தொந்தம் ஏற்பட்டதாக முடியும். அவனை—அந்த லூக்காவை—எப்போது பார்த்தாலும் நம் பேரில் குற்றம் சாட்டுவது போல் கோணலாகப் பார்த்துப் பல்லிளித்த அந்த முகரக் கட்டையை—நம்முடைய எண்ணத்தை விட்டு அகற்றவே முடியாதா? அகற்ற வேண்டும். என்ன, புரிகிறதா?

**ஆதிமா:** ஸிபால்ட், அன்பே!,...

**ஸிபால்ட்:** ஆமாம், அடித்து வீழ்த்தினேன், நான்தான் லூக்காவை அடித்துச் சாய்த்தேன். அவன் வீசிய அவதூற்றை அவனையே இன்று விழுங்கச் செய்தேன். செத்தான் பாவி... ஏதோ வெறியில் அவனைக் கொன்றேன். அதனால் உன்னுடையவன் ஆகி விட்டேனா? நம்முடைய உறவு, நம்மைப் பிணைப்பது காதல்...ஆமாம், காதல்தான், இப்போது நடந்த இந்தக் கொலை இல்லை.

இரவில் நடந்த பயங்கர நிகழ்ச்சி நமக்கு இப்போது தெரிகிறது. லூக்காவை - ஆதிமாவின் கணவனை - ஆதிமாவும், ஸிபால்டும் சேர்ந்து கொன்று விட்டார்கள். வீட்டுக்குள்ளே லூக்காவின் பிணம் கிடக்கிறது. இங்கே, சவுக்கண்டியில், இவர்கள் கொலையை மறக்க முயல்கிறார்கள். முடியவில்லை. உயிரோடு இருந்தபோது இவர்களுடைய காமக் களியாட்டத்திற்குத் தடையாக இருந்தான். இப்போது, இறந்தபிறகு, அவர்கள் நெஞ்சிலே நின்று பேய்ச் சிரிப்புச் சிரிக்கிறான். இருவரும், தவிக்கிறார்கள். இதுவரை தன்னிடம் ஸிபால்ட் பெற்றுள்ள இன்பத்தின் நினைவினால் அவன் மனத்தைத் திருப்பப் பார்க்கிறாள் ஆதிமா. அவனுக்கும் பழைய காம வெறியில் பாய்ந்து முழுகி, இரவில் நிகழ்ந்ததை மறந்துவிட வேண்டும் போலத்தான் இருக்கிறது. ஆனாலும், லூக்கா... லூக்கா... கொலை.. எங்கும் படர்ந்த இரத்தக் கறை... விடுதலை இல்லையா? இருவரும் நரக [illegible]ருளில் நிற்கிறார்கள். வெளியிலே, காலை ஒளிக் கடல் புரளுகிறது. (தொடரும்)



மானேஜர் :- எல்லோரும் தீபாவளிக்கு லீவு கேட்டிருங்களே, நீங்க ஏன் கேட்கவில்லை? உங்களுக்கு மாமனார் வீடு இல்லையா?

குமாஸ்தா :- எனக்கு மட்டும்தான் ஸார் இருக்குது. அதனாலதான் கேட்கவில்லை. மற்றவங்களுக் கெல்லாம் கல்யாணமே ஆகவில்லை!







# வீரசிம்மன்

ராஜாஜி

கிழ வயது அடைந்து விட்ட காசி தேசத்து அரசனுக்கு இரண்டு குமாரர்கள். இருவரும் மிக நல்லவர்கள். தகப்பனார் சொன்னபடி இருவரும் காலையில் கோயிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனம் பெற்று, கங்கைக் கரையில் தனியிடத்தில் தியானம் செய்து பிறகு திரும்பி வருவார்கள்.

ஒரு நாள் மூத்தவன் வீரசிம்மன் தியானம்செய்துகொண்டிருந்தவனுக்கு பகவான் பரமேசுவரன்பிரத்யட்சமானான்.

"மகனே! என்ன வேண்டும் உனக்கு? ஆசைப் படுவதை யெல்லாம் கேள். ஒரே தடவையாகக் கேள். கொடுத்து விடுகிறேன்" என்றான்.

"யோசித்துச் சொல்லுகிறேன்" என்றான் வீரசிம்மன்.

"யோசனை செய். வேண்டியன வெல்லாம் கேள். விட்டுப் போனதைப் பிறகு கேட்க இயலாது" என்றான் பரமசிவன்.

வீரசிம்மன் மகிழ்ச்சி யடைந்து நன்றாக ஆலோசிக்க உட்கார்ந்தான். ஒன்றன் பின் ஒன்று தோன்றி ஆசைக்கு முடிவே அவன் காணவில்லை.

வீரசிம்மன் ஏன் அரமனைக்குத் திரும்பவில்லை என்று அரமனையில் எல்லாரும் கவலைப்பட்டார்கள். வெகு நேரமாகியும் அவன் வரவில்லை.

தியானத்தில் இருக்கிறான் என்பது தெரிந்ததும், "அவனண்டை போய் அவன் தவத்தைக் கெடுக்காதீர்கள். அவனாகவே தியானம் முடித்து விட்டு வரட்டும்" என்று ராஜா உத்தர விட்டான்.

சின்ன ராஜ குடாரன் சம்பூரணன் வழக்கப்படி பூஜையும் ஜபமும் முடித்து

ரதி





விட்டுத் திரும்பி வந்து விட்டான். அவனுடைய சமாசாரம் என்னவென்றால், அவனுக்கும் மகாதேவன் அதே தினத்தில் தரிசனம் தந்தான்.

"உனக்கு என்ன வேண்டும்? வேண்டியதை யெல்லாம் ஒரே தடவையில் கேட்டு விடு" என்று மகாதேவன் சொன்னதும் அவன் உடனே கேட்டுவிட்டான்.

"ஆண்டவனே! ஏதும் வேண்டாத உள்ளத்தை எனக்குத் தருவீர்!" என்று வரம் கேட்டான்.

"அப்பனே! சம்பூரணனே! தந்தேன்" என்று மகேசுவரன் சொன்னதும் ராஜகுமாரனுடைய அழகிய முகம் இன்னும் அழகு பெற்று, அதற்கு முன் என்றுமில்லாத பொலிவு அடைந்து பிரகாசித்தது. உள்ளத்தில் மகிழ்ச்சி நிறைந்து விட்டது. எழுந்து அரமனை திரும்பினான். மகாராணி அவனைக் கட்டி அணைத்து முத்தமிட்டாள்.

அரசனிடம் சென்று, "வீரசிம்மன் இன்னும் ஏன் வரவில்லை?" என்றாள் ராணி.

"அவனுக்குத் தியானத்தில் மிக ஈடுபாடு. முடிந்ததும் வருவான்" என்றான் அரசன்.

வெகு நேரம் கழித்து வீரசிம்மன் ராஜ மாளிகைக்குத் திரும்பி வந்தான். முகம் வாடிப் போய்க் கவலையோடு வந்தான். அன்ன ஆகாரம் பிடிக்கவில்லை.

ஒரு நாள், இரண்டு நாள், மூன்று நாள் கழிந்தன. அவனுடைய ஆலோசனை முடியவில்லை மகாதேவனை ஒன்று கேட்கலாம் என்று எண்ணுவான்; அதன் பின் இன்னொன்று வேண்டும் என்று தோன்றும்; அதன பின் இன்னொன்று; இப்படி அவன் யோசனை தீராமல் போய்க் கொண்டே இருந்தது.



ஆகாரம், விளையாட்டு எல்லாம் விட்டு விட்டு யோசித்துக் கொண்டேயிருந்தான். நாட்கள் செல்லச் செல்ல உடல் மெலிந்து நோய்ப்பட்டுப் போனான்.

ராஜா கவலையடைந்து மந்திரிகளிடம் யோசித்து வைத்தியம் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தான.

மகாராணிக்குக் கனவில் வைத்திய நாதன் பிரசன்னமாகிச் சொன்னான்:

"உன் மகனுக்கு வியாதி வேறொன்றுமில்லை. நான் கொடுத்த வரத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறான்" என்று விவரத்தைச் சொன்னான்.

"ஐயோ! ராஜகுமாரன் ஏமாந்து போனானே" என்று அரசனிடம் விஷயத்தைத் தெரிவித்தாள்.

படுக்கையில் நோய்ப் பட்டுக் கிடந்த ராஜ குமாரனைப்பார்த்து, அரசன் "வேண்டாமை யல்லவோ பெருஞ் செல்வம். அதைக் கேட்காமல் கவலைப்பட்டு நோய்ப் பட்டுக் கிடக்கிறாயே!" என்று புத்தி சொன்னான்.

வீரசிம்மனுக்கு இது விளங்க வில்லை. அந்த நோயிலேயே அவன் ஆன்மா விடுதலையடைந்து உடலைவிட்டு நீங்கிற்று.

"உனக்கு வேண்டியது உனக்குத் தெரியவில்லை. நான் சொல்லுகிறேன் வா!" என்று மகாதேவன் வீரசிம்மனை அழைத்துக் கொண்டான்.


பழனி சலூன்
"அந்த சலூனில் 'கிராப்' வெட்டிக் காதீங்க. மொட்டை அடிச்சுடப் போறான்!"


நாய் ஜாக்கி-ரதை
"நாய் எப்போது வாங்கினீங்க?"
"நாயும் இல்லே; ஒண்ணும்
சும்மா பிச்சைக்காரர்களை
இப்படி ஒரு போர்டு மட்டும் வைத்திருக்கேன்!"


நீங்க ஏன் குல்லாய் போட்டிருக்கீங்க?
தலையிலே மயிர் கம்மியாயிருக்கு அதனாலே..... நீங்க?
தலையிலே மயிர் அதிகமாயிருக்கு ... அதனாலே


"ஏம்பா! நீ நேற்று கொடுத்த பேனா விலே மையே வரலேயே!"
"நீங்கதானே மை கொட்டாத பேனா வேணும்னு கேட்டீங்க!"




அட பாவமே.... பலமா அடி பட்டிருக்கும் ... யார் இந்த வண்டிக்கு டிரைவர்



# அவள் கேட்டது பின்னி சேலைகள்

# நீங்களும் அதையே தான் கேட்பீர்கள்!

விருந்துக் கூட்டங்களில் அலங்காரமாய் எடுப்பாகத் தோன்றுவதற்கு

**பின்னி**
**ஸில்குகளும்**
**ஜார்ஜெட்டுகளும்**

இன்றியமையாதவை.



சென்னை, வடஆற்காடு ஜில்லா & தமிழ்நாடு முழுவதிற்கும் ஏக பங்கீட்டாளர்:

**எச். ஏ. ஆர். மகம்மத் & சன்ஸ்**
8-ஏ, லிங்கு தெரு, சென்னை

Grant Ms./H.A.R. 3

கீழ்க்கண்ட கடைகளிலேயே உங்களது தீபாவளி ஜவுளிகளை வாங்குங்கள்

ஸ்டாக்கிஸ்டுகள்: ஜார்ஜ் டவுன்: மெஸர்ஸ் வெங்கடேஷ் வஸ்திராலயா ஷாப் 1; பாங்க் ஆப் மைசூர் நியூ பில்டிங்ஸ், ஹைகோர்ட்டுக்கு எதிரில். * மவுண்ட் ரோடு: இந்தியா ஸில்க் ஹவுஸ். * தியாகராயநகர்: நம்பி சின்னசாமி செட்டி, நாகேஸ்வர ராவ் ரோடு. * மயிலாப்பூர்: ராதா ஸில்க் எம்போரியம், சன்னதித் தெரு. * திருச்சிராப்பள்ளி: பி. ஆர். நாராயணஸ்வாமி ஐயர், பெரிய கடைத் தெரு. * மதுரை: மெஸர்ஸ் ஜமீந்தார் ஸ்டோர்ஸ்.

## ௰௬. இதுதான் எலிக் கோட்டை

அரண்மனைபோல் இருந்த அந்தக் கட்டடங்கள் எந்தக் காலத்தில் கட்டப் பட்டவையோ? சிறிது பாழடைந்து காணப்பட்ட அந்தக் கட்டடங்கள் தங்களுடைய நீண்ட வாழ்க்கைக் கதைகளைச் சொல்ல முடியாதபடி ஊமையாகி விட்ட நிலையில்தான் காட்சி யளித்தன. ஒருபுறம் அந்தக் கட்டடங்கள் பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்தாலும் மறுபுறம் மனத்துக்கு நிம்மதியையும் இன்பத்தையும் அளிக்கக் கூடியதாக இருந்தன.



கி. ரா. கோபாலன்

இடிந்து தரை மட்டமாகாது ஓரளவே பாழடைந்த நிலையிலிருந்த அந்தக்கட்டடங்களில் மனிதர்கள் வந்து சில நாட்கள் தங்குவதற்கு வசதியாகத்தானிருந்தது. ஜன சஞ்சாரமற்றுக் கேட்பாரில்லாமல் கிடக்கும் அந்த இடத்தில் ஒருவர் வந்து வசிப்பதை யார் கேட்கப் போகிறார்கள்? மனித வாசனையே இல்லாத எலிக்கோட்டையைத் தங்களின் சதிச் செயல்களுக்கு ஏற்ற இடமாகக் கருதித்தான் அவர்கள் அங்கு வந்திருக்க வேண்டும் என்று அஞ்சுகத்துக்கு விளங்கியது.



பல நாட்கள் தேசாந்திரம் சென்று விட்டுத் திரும்பிய ஒருத்தி தன் சொந்த வீட்டைக் கண்டதும் எத்தகைய ஆனந்தம் கொள்வாளோ, அத்தகைய ஆனந்தத்துடன் அதிகம் இடிந்து பாழாகாத ஒரு கட்டடத்துக்குள் நுழைந்தாள் மீனாச்சி. கதிரனும் மருதையும் பெரிய கோட்டையைப் பிடித்த பெரு வீரர்கள் போல் தாங்கள் சுமந்து வந்த சாமான்களை இறக்கினர். இருளடைந்த அக்கட்டடத்தின் மூலை முடுக்குகளில் தொங்கிக் கொண்டிருந்த வௌவால்களெல்லாம் மனிதர் வரும் அரவம் கேட்டதும் அப்படியும் இப்படியும் பறந்து சுற்றத் தொடங்கின. மனித சஞ்சாரமற்ற இடமாதலால் எங்கும் புழுதியும் குப்பையும் துர்நாற்றமுமாய் இருந்தன. மீனாச்சியும் அவளுடைய புத்திரர்களும் அந்த இடத்தைச் சுத்தம் செய்யத் தொடங்கினர். அஞ்சுகம் அவர்களுக்கு உதவியாக ஆற்றிலிருந்து ஒரு பானையில் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். ஒரு சில நிமிட நேரங்களில் அந்த இடம் மிகவும் சுத்தமாகி விட்டது. எவ்வளவு விசாலமான இடம்? அழகான கூடம், தாழ்வாரம்? எவ்வளவு அறைகள்? எல்லா இடங்களும் பார்க்கப் பார்க்க எவ்வளவு அழகான புராதனமான சித்திர விசித்திர வேலைப்பாடுகளுடன் விளங்கின? நூற்றுக் கணக்கான பேர்கள் வசதியுடன் வாழத் தகுதியாக இருந்த அந்தப் பெரிய மாளிகையில் அவர்கள் நான்கு பேரே வசிக்க நேர்ந்தது சிறிதும் பொருத்த மற்றதாகவும் சோபை அளிக்காததாகவும் பட்டாலும், அஞ்சுகத்துக்கு அந்த இடங்களில் நடமாடுவது மன நிம்மதியாகவும், ஆனந்தமாகவும்தான் இருந்தது. வஞ்சனையும் சூதும் நிறைந்த பழிகார உலகத்தை விட்டு மனித சஞ்சாரமற்ற அந்த இடத்தில் பயமின்றி உல்லாசமாக வாழ்வதே அவளுக்கு மிகச் சிறந்ததாகப் பட்டது. வேடுவனின் வலைவீச்சிலிருந்து தப்பி வந்த மான் குட்டி பயமின்றி எப்படி அழகான வனாந்திரத்தில் துள்ளிக் குதித்தோடி விளையாடுமோ, அப்படி அந்த இடங்களிலெல்லாம் துள்ளித்திரிந்து ஓடி விளையாடுவதற்கு நினைத்தாள் அஞ்சுகம்.

மீனாச்சியின் குடும்பம் எலிக் கோட்டைக்கு வந்த மறுநாள்கதிரனும் மருதையும் ஏதோ தீர்மானத்தோடு காலைவேளையிலேயே எங்கோ கிளம்பினர். எப்பொழுதும் இரவு வேளையில்தானே அவர்கள் தொழில்? அவர்கள் பகலில் எங்கோ கிளம்பியது அஞ்சுகத்துக்குச் சிறிது ஆச்சரியத்தை அளித்தது. அவர்கள் மருதூரிலிருந்த தங்கள் குடிசையைக் கிளப்பிக் கொண்டு ஜன சஞ்சாரமற்ற எலிக் கோட்டைக்கு வந்ததே ஏதோ சதிச் செயல் செய்யத்தான் இருக்க வேண்டுமென்று அஞ்சுகம் எண்ணியதற்கு ஆதாரமாக இருந்தது. என்றுமில்லாதபடி மருதையும் கதிரனும் சேர்ந்து பகலிலேயே வெளியே புறப்பட்டது அவள் சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்தது. மீனாச்சியுடன் மருதையும் கதிரனும் பேசியதிலிருந்து அவர்கள் ஏதோ காரியமாகத் தேவிப்பட்டினம் போகிறார்கள் என்று அறிந்து கொண்டாள். தேவிப் பட்

டினத்தை நினைக்கும்போதே அவள் மனத்தில் திகில் ஏற்பட்டது. ஒருவேளை அவர்கள் தன் விஷயமாக ஏதேனும் சதி செய்ய நினைக்கிறார்களோ என்ற குழப்பம் வேறு அவளுக்கு ஏற்பட்டது. ஆனால் மீனாட்சியின் மேல் அவள் வைத்திருந்த நன்னம்பிக்கை அவள் குழப்பத்தைச் சிறிது மாற்றியது. மருதையும் கதிரனும் தேவிப் பட்டினத்துக்கு எதற்காகப் போகிறார்கள் என்று மீனாட்சியைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவள் நினைத்தாள். ஆனால் அவர்களுடைய அந்தரங்க வியவகாரங்களைப் பற்றிக் கிளறிக் கேட்பது மீனாட்சிக்குக் கடுங் கோபத்தை உண்டாக்கிவிடுமோ என்று எண்ணி அஞ்சுகம் பேசாமல் இருந்து விட்டாள்.

* * *

அன்று மாலை இருள் நெருங்கும் நேரத்தில் எலிக்கோட்டையிலிருந்து பல மைல்கள் தூரம் நடந்து மருதையும் கதிரனும் தேவிப்பட்டினத்தை அடைந்தனர். அவர்களைப்பார்த்தாலே எங்கோ நாட்டுப்புறத்திலிருந்து வந்தவர்கள் என்று யாரும் சகஜமாக நினைக்கும் வண்ணம் அவர்கள் உடை அணிந்திருந்தனர். பல மைல்கள் தூரம் நடந்து வந்த அவர்கள் சிறிது களைப்படைந்தவர்களாக ஒரு டீக்கடையில் நுழைந்து டீ குடித்து விட்டு ஒரு பீடியைப் பற்ற வைத்துக் குடித்துக் கொண்டே ஏதோ ஒரு இடத்தை நோக்கி நடந்தனர். அவர்கள் எந்த இடத்தைக் குறியாகக் கொண்டு வந்தார்களோ, அந்த இடத்தைக் கண்டு பிடிப்பது சிறிது சிரமமாக இருந்ததால் வழியில் பார்க்கும் யாரை யாவது விசாரித்துக் கொண்டு அந்த இடத்துக்குச் செல்ல நினைத்தனர். அதிவேகமாகச் சென்று கொண்டிருக்கும் ஒரு மனிதரை நிறுத்திக் கதிரன், ''ஐந்து பிள்ளையார் கோவில் தெரு எது?'' என்று கேட்டான். அந்த மனிதர் அவனை ஏற இறங்க ஒரு தடவை பார்த்து விட்டு, ''இதுதானய்யா ஐந்து பிள்ளையார் கோயில் தெரு! நீங்கள் யாரைத் தேடுகிறீங்க?'' என்றார்.

''இங்கே ராமதுரை என்கிறவர் வீடு எது?'' என்று கேட்டான் மருதை.

அந்த மனிதர் ஒரு பெரிய மாடி வீட்டைச் சுட்டிக் காட்டி, ''அதோ அந்த மஞ்சள் மாடிக் கட்டடம்தான் ராமதுரை வீடு!'' என்று சொல்லி விட்டு நடந்தார். 'இவ்வளவு எளிதாக நாம் தேடிய இடத்தைக் கண்டு பிடித்து விட்டோமே' என்ற திருப்தியில் மருதை

யும் கதிரனும் அந்த மனிதர் கட்டிக் காட்டிய வீட்டை நோக்கி நடந்தனர்.

அந்தத் தெருவிலேயே அந்த வீடு மிகப் பெரிய மனிதர் வீடு போலத் தோன்றியது. அந்த வீட்டு வாசலில் காவலாளி போல ஒருவன் நின்றுகொண்டிருந்தான். மருதை மெதுவாக அவன் பக்கத்தில் நெருங்கி அடக்கமான குரலில், "இங்கே விஜயரங்கன் என்று ஒருத்தர் வந்திருக்கிறாரா?" என்றான்.

அந்தக் காவலாளி மருதையையும் கதிரனையும் உற்றுக் கவனித்து விட்டு, அவர்கள் சாதாரண கிராம வாசிகள் என்பதை அறிந்து கொண்டவன் போல் அலட்சியமாக, "ஆமாம்! வந்திருக்காரு! நீங்க யாரு..?" என்றான்.

"நாங்க அவுங்களைப் பார்க்கணும். நாங்க அவுங்க கிராமத்தைச் சேர்ந்தவங்க. எங்களுக்கு மேகராஜபுரம். அவுங்களைக் கண்டுக்கிட்டு வரச்சொல்லி அவுங்க பெரியம்மா எங்களை அனுப்பியிருக்காங்க! ஒரு முக்கியப்பட்ட விசயம்..." என்றான் கதிரன்.

காவல்காரன், "கொஞ்சம் இருங்க" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றான். சில நிமிஷ நேரத்தில் அந்தக் காவல்காரனைத் தொடர்ந்து மிகவும் ஆடம்பரமாக உடையணிந்த ஒருவர் அந்த வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தார். தாங்கள் சந்திக்க நினைத்த மனிதர் அவர்தான் என்பதை அவருடைய அங்க அடையாளங்களிலிருந்து அறிந்து கொண்ட மருதையும் கதிரனும் கையைக் கூப்பி உடம்பை வளைத்து மிக்க மரியாதையுடன் தங்கள் வணக்கத்தைத் தெரியப்படுத்தினர்.

விஜயரங்கன் மிகவும் பெரிய மனிதத் தன்மையோடு அவர்களைப் பார்த்து விட்டு, "யாரப்பா? ஊரிலிருந்து வந்திருக்கீங்களா?" என்றான்.

"ஆமாம், எசமான்! எசமானிஅம்மா தான் எங்களை அனுப்பிச்சாங்க" என்றான் மருதை.

"ஓஹோ! எதற்காக? நான்தான் ஒருநாள் இங்கே தங்கிவிட்டு நாளைக் காலையில் வருகிறேன் என்று கடிதம் எழுதி இருந்தேனே....?" என்றான் விஜயரங்கன்.

"கடிதாசியைப் பார்த்த பின்னாலே தான் எங்களை அனுப்பினாங்க..ஒரு முக்கியமான சமாசாரம்.." என்று இழுத்தான் கதிரன்.

"முக்கியமான சமாசாரமா? அப்படி என்ன?" என்று கேட்டான் விஜயரங்கன் ஆச்சர்யத்தோடு.

"இல்லீங்க....அதைத் தனிச்சுச் சொல்லணும்.." என்றான்.

"தனிச்சுச் சொல்லணுமா..?"

"ஆமாம்! கொஞ்சம் வருகிறீங்களா" என்றான் மருதை தயக்கத்துடன்.

"ஓஹோ! அப்படியா....? அப்படின்னா உள்ளே வாருங்களேன். தனித்துப் பேசலாம்" என்றான் விஜயரங்கன்.

"இல்லீங்க...அது நாங்க சொல்லக் கூடிய விஷயமா இல்லீங்க, எசமான்! நம்ம ஊட்டிலே காரியம் பார்க்கிறுங்களே, அந்த அம்மாவும் வந்திருக்காங்க. அவுங்க கடைவீதிக்கு அப்பாலே ஒரு இடத்திலே இருக்காங்க. அவுங்கதான் உங்களோடே ஏதோ முக்கியமாகப் பேசணும்..." என்றான் கதிரன்.

பெரியம்மாவுக்கு உதவியாகத் தங்கள் வீட்டு நிர்வாகம் முழுவதையும் நிர்மலா என்ற படித்த பெண் ஒருத்தி கவனித்துக் கொண்டிருப்பதாக அவன் அறிந்திருந்தான். அவள் நல்ல அழகும், குணமும், சாமர்த்தியமும் நிறைந்த பெண் என்பதையும் அவன் கேள்விப்பட்டிருந்தான். அவனுடைய நண்பனாகிய ராமதுரை நிர்மலாவின் குணம், நிர்வாகத் திறமை எல்லாவற்றையும் விட அவளுடைய அழகைப் பற்றித்தான் அசாத்தியமாகப் புகழ்ந்து கொண்டிருந்தான். ராமதுரையின் வர்ணனையிலிருந்து நிர்மலாவைப் பார்க்க வேண்டுமென்ற துடிப்பு விஜயரங்கனின் மனத்தில் ஏற்பட்டிருந்தது. அவளே தன்னைப் பார்ப்பதற்குத் தேவிப் பட்டினம் வந்திருக்கிறாள் என்பதை அக் கிராமவாசிகள் மூலம் கேள்விப்பட்டான். அவனுடைய ஆவலும் துடிப்பும் அதிகமாயின. அவளே இவ்வளவு தூரம் வந்திருக்கிறாள் என்றால் பெரியம்மா ஏதோ அந்தரங்கமான விஷயம்தான் சொல்லி அனுப்பி இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவர்கள் இருவரையும் பின் தொடர்ந்து நடந்தான். மருதையும் கதிரனும் கடைவீதி கடந்து நெடுந் தூரம் வரையில் அவனை அழைத்துக் கொண்டு வந்து விட்டார்கள்.

அவர்கள் நகர எல்லையைத் தாண்டிச் சிறிது தூரம் வந்து விட்டதால் அங்கு அதிக ஜன நடமாட்டம் இல்லாமல் இருந்தது. விளக்கு வெளிச்சமும் மிகக் குறைவாக இருந்தது. கதிரன் விஜயரங்கனுக்கு முன்னே சென்றான். மருதை விஜயரங்கனுக்குப் பின்னால் சென்றான். விஜயரங்கனுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த மருதை திடீரென்று தன் கையில் மறைவாக வைத்திருந்த கனத்த தடியினால் விஜயரங்கனின் மண்டையில் ஓங்கி அடித்தான். 'ஹா!' என்ற சத்தத்தோடு விஜயரங்கன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். முன்னால் சென்று கொண்டிருந்த கதிரன் ஒரு கணம் கூடத் தாமதிக்காமல் சுய நினைவு அற்



# MIXI

இட்டிலி, தோசை, வடை மற்றும் இனிப்புப் பண்டங்களுக்கு வேண்டியதை இரண்டு நிமிஷத்தில் அரைத்துக் கொடுத்துவிடும்.

இரண்டு நிமிஷத்தில் காப்பிக் கொட்டையை அரைத்துக் கொடுத்துவிடும்.

மோர் கடைய வேண்டுமா, 'மில்க் ஷேக்' தயாரிக்க வேண்டுமா, அல்லது மற்ற பானங்கள் தயாரிக்க வேண்டுமா—எல்லாம் ஒரே நிமிஷத்தில் ஆகிவிடும்.



ஆம், 'மிக்ஸி'யை வைத்திருக்கும் வீட்டு அம்மாள் உண்மையிலேயே சந்தோஷமாயிருக்கிறாள்

ஏ. ஸி./டி. ஸி.
230 வோல்ட்ஸ்

சோல் ஏஜண்டுகள்:

**MICHAEL & COMPANY**

2nd FLOOR, BOMBAY MUTUAL ANNEXE, GUNBOW STREET, FORT, BOMBAY-1




# FLOROZONE

## கருநிற மேனியை அழகு படுத்த ஓர் புதிய சாதனம்

ஆயிரக்கணக்கான ஆண், பெண்களின் சமூக வெற்றிக்குக் காரணம் புளோரோஸோன். ஓசோனும் அமோனுக்ஸினும் கலந்த அற்புதமான புளோரோஸோன் சருமத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக பிரகாசமடையச் செய்து பருக்கள், கரும்புள்ளிகள் சுருக்கங்கள் முதலியவற்றைப் போக்குகின்றன.

புளோரோஸோன் சருமத்தை மிருதுவாகவும், வழுவழுப்பாகவும், பிரகாசமாகவும் இளமையாகவும் வைத்துக் கொள்ள உதவும். புளோரோஸோன் லோஷன் ஒரு பாட்டில் விலை ரூ. 4-4-0 புளோரோஸோன் கான்ஸன்டிரேடட் கிரீம் ஒரு புட்டி ரூ. 5-8-0 (வி. பி. சார்ஜ் தனி) எல்லா மருந்து ஷாப்புகளிலும் கிடைக்கும். அல்லது கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

ஹைஜீனிக்ஸ் இன்ஸ்டிடியூட்
த. பெ. 1192, பம்பாய்-1

ஏஜண்டுகளும் ஸ்டாக்கிஸ்டுகளும்

ஆர். எல். கோடா & கோ.,
59, பந்தர் தெரு, சென்னை
அப்பா & கம்பெனி, சென்னை
வில்பிரட் பெர்ச் லிமிடெட், சென்னை
ஜாக்ஸன் மெடிகல் சப்ளைஸ், கோட்டயம்
ஹெக்டர் மெநர் & கோ., கொழும்பு-14

HVB

றுக் கிடந்த விஜயரங்கனைத் தூக்கித் தோள்மீது சாய்த்துக் கொண்டு அதி வேகமாக நடந்தான். சில வினாடி நேரத்துக்குள் மருதையும் கதிரனும் விஜயரங்கனைச் சுமந்து கொண்டு ஒரு காட்டுப் பாதையில் நடக்கலாயினர்.

இரவு மணி இரண்டு இருக்கும். மீனாச்சி எலிக்கோட்டையிலுள்ள கட்டடத்து வாசலில் உட்கார்ந்து தன் பிள்ளைகளை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். மருதையும் கதிரனும் ஒரு மனித சடலத்தைத் தூக்கிக் கொண்டு வரும்போதுதான் அவளுக்கு நல்ல மூச்சு வந்தது. ''அந்த மனிதன் தானே? உங்களுக்கு அடையாளம் தெரிந்ததா....'' என்று கேட்டாள் குறத்தி மீனாச்சி பரபரப்போடு.

அவர்கள் விஜயரங்கனின் உடலைக் கீழே கிடத்தினார்கள். ''வேறு யாரை யாவது இப்படி அடித்துக் கொண்டு வர எங்களுக்குப் பயித்தியமா பிடித்திருக் கிறது!'' என்றான் மருதை.

''சரி! அவனுக்கு உயிர் இருக் கிறதா..? இல்லா விட்டால் கொன்று விட்டீர்களா?'' என்று கேட்டாள் மீனாச்சி சந்தேகத்தோடு.

''கொன்று விடுவோமா? கொன்று விட்டால் அப்புறம் நம்ம காரியமெல் லாம் எப்படி நடக்கும்? சுய நினைவோடு ஒரு மனிதனை இவ்வளவு தூரம் கொண்டு வர முடியுமா? சும்மாத் தலையில் ஒரு தட்டுத் தட்டினோம். அதிலேயே மன் னன் மூர்ச்சை போட்டு விழுந்துவிட் டான்!....'' என்றான் கதிரன்.

''ரொம்ப நல்லது. நீங்கள் அசட்டுத்தனமா கக்கொன்றுவிடுவீர்களோ என்று பயந்தேன். அவனை உயிரோடு வைத்திருப் பதுதான் நமக்கு நல்லது; அனுகூலம். ரொம்ப சரி! இவனை வீட்டுக்குள்ளே கொண்டு போய் விடுங் கள்'' என்றாள் மீனாச்சி.



அஞ்சுகம் ஆழ்ந்த நித்திரையில் இருந்தாள். நடுநிசி நேரத்தில் அந்தக் கட்டடத்தில் எழுந்த 'சுசமுச' என்ற பேச்சுக் குரல் அவளைக் கண் விழிக்கச் செய்து விட்டது. அவள் பரபரப்போடு எழுந்து உட்கார்ந்து கண்களைத் துடைத்துக் கொண்டு மீனாட்சியும் அவளுடைய புத்திரர்களும் பேசுவதை உற்றுக் கேட்க முயற்சி செய்தாள். எதுவும் அவளுக்குத் தெளிவாக விளங்கவில்லை. அவள் மெதுவாகத் தன் அறை வாசற்படிப் பக்கம் வந்து நின்று வெளியே தன் கண் பார்வையைச் செலுத்தினாள். அவள் இருந்த அறைக்கு எதிரிலுள்ள அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. நடு அறையில் யாரோ ஒருவர் படுத்திருப்பது போலிருந்தது. படுத்திருக்கும் அந்த உருவத்தின் முகம் கூடத் தெரியாத வண்ணம் துணியினால் மூடப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் அஞ்சுகத்துக்குக் குடல் நடுக்கம் ஏற்பட்டது. யாரையேனும் அவர்கள் கொலை செய்து அங்கு கொண்டு வந்து கிடத்தி யிருக்கிறார்களோ என்ற சந்தேகம் அவளுக்கு. அவள் அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை உற்றுக் கேட்க முயற்சி செய்தாள்.

மீனாட்சி மருதையைப் பார்த்து உடனே கொஞ்சம் வெந்நீர் கொண்டு வரும்படி ஆக்ஞாபித்தாள். அங்கு கிடத்தப்பட்டிருந்த உருவத்தின் மேற்போர்வையை விலக்கி முகம், மார்பு முதலியவைகளைத் தொட்டுப் பரிசோதித்தாள். மருதை வெந்நீருடன் வந்தான். மீனாட்சி கதிரனைப் பார்த்து மருந்துப் பையை எடுத்துக் கொண்டு வரும்படி சொன்னாள். கதிரன் சில விநாடிக்குள் ஒரு பெரிய துணிப் பையை எடுத்துக் கொண்டு வந்து அவளிடம் கொடுத்தான். மீனாட்சி பையிலிருந்து ஏதோவொரு மருந்துப் புட்டியை எடுத்துத் தயாராக வைத்துக்கொண்டு, பிரக்ஞையற்றுக் கிடந்த விஜயரங்கனுக்கு அருகில் நெருங்கி அவன் பின் மண்டையில்காயம்பட்டிருந்த இடத்தை வெந்நீரைத் தொட்டுத் துடைத்தாள். பிறகு அந்தப் புட்டியிலிருந்து ஏதோ மருந்தை எடுத்துப் போட்டு அவன் மண்டையில் ஒரு கட்டுப் போட்டாள். அவன் முகத்தில் வெந்நீரைத் தெளித்தாள். மறுபடியும் பையிலிருந்து மாத்திரை போல் ஒன்றை எடுத்து அவன் மூக்குக்குச் சமீபமாகக் காட்டினாள். சில நிமிஷ நேரங்கள் சென்றதும் விஜயரங்கன் மெதுவாகத் தலையை அசைத்தான். அவனுடைய கண்கள் திறந்தன.

அவன் கண் திறந்தவுடன் அவன் கண்களில் முதலில் பட்ட குறத்தி மீனாட்சியின் உருவம் அவனைத் திகைப்புறச் செய்திருக்க வேண்டும். சுற்றுப்புறம் ஒரு தடவை விழிகளை யோட்டியபோது, புதிய இடமாகவே தோற்றமளித்தது. அவன் மிரளமிரள விழித்தான். அவனுடைய உதடுகள் அசைந்தன. அவன் பேச முயலுவதை அறிந்த மீனாட்சியும் அவள் புதல்வர்களும் அவன் என்ன சொல்கிறான் என்பதைக் கேட்க ஆவலுள்ளவர்கள்போல் அவன் முகத்தருகே நெருங்கி உட்கார்ந்து கேட்டனர்.

விஜயரங்கன் ஈனஸ்வரத்தில், "நான் இப்பொழுது எங்கே இருக்கிறேன்? நீங்கள் யார்?" என்றான். (தொடரும்)



## பாரதத்தின் பாராட்டு

காந்திமகான் பாரத மக்களுக்கு அளித்த அரும் பரிசு ஆதாரக் கல்வி. இந்த ஆதாரக் கல்வி பயிற்சி சாலைகள் பாரத நாட்டில் பாரிதா பாத், டில்லி சேவா கிராம், லோனி, சென்னை ராமகிருஷ்ண மாணவர் இல்லம் ஆகிய இடங்களில் நடைபெற்று வருகின்றன. அவை எவ்வாறு தொழிற்படுகின்றன என்பதை அமெரிக்க தூதர் காரியாலயத்தினருக்காக 1955ல் அமா போட்டோ கம்பெனியார் டாக்குமெண்டரி படமாக எடுத்தனர். தொழில் மூலமாகக் கல்வி போதிக்கும் இந்தச் சீரிய பண்பை உலகம் அறிய நல்ல வாய்ப்புக் கிடைத்தது. இந்தப் படத்தைப் பாரத சர்க்கார் சிறந்த டாக்குமெண்டரி படம் என்று பாராட்டியிருக்கின்றனர். அந்தப் பாராட்டுப் பத்திரத்தை ஜவாஹர்லால்நேரு, ஸ்ரீ டபிள்யூ. எச். ஹில்லிக்கு வழங்குவதைப் பக்கத்திலுள்ள படத்தில் காணலாம்.

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு



இந்த பரத நாட்டியக்காரியைப்போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண கால நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம். மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால் குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த 'ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்

ec/6/3

PARKSONS
PLAYING CARDS

சிறந்தவை

பார்க்ஸன்ஸ்
சீட்டுக் கட்டுகளைக்
விளையாடுவதே ஓர்
அலாதி ஆனந்தம்.

ஏனெனில் பல ஆட்டங்கள் விளையாடினும்,
வழவழப்பாகவும் புதுமை குன்றாமலும்,
இருப்பதோடு சுகமாகவும் இருக்கிறது.

பார்க்ஸன்ஸ் பிரிண்டர்ஸ்
செக்சரியா சேம்பர்ஸ், 139, மெடோ தெரு, பம்பாய்-1

---

# 1856 - நூறு ஆண்டுகள் சேவை - 1956

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



# S. S. ரஜுலா

**சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்**

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

| சென்னையிலிருந்து | நாகப்பட்டினத்திலிருந்து |
|---|---|
| 1956 நவம்பர் 3 | 1956 நவம்பர் 4 |

பிரயாணத்துக்குரிய தஸ்தாவேஜுகளைக் காண்பித்து வேண்டிய அளவு "பங்க்" வசதியுள்ள டிக்கட்டுகளையும், "பர்த் வசதியற்ற டிக்கட்டுகளையும், "சாப்பாட்டுடனோ" அல்லது "சாப்பாடின்றியோ" எங்கள் கம்பெனியின் ஏஜெண்டிடமிருந்து நேரடியாகப் பெற்றுக் கொள்ளலாம்.

'ரஜுலா' கப்பல் சமீபத்தில் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது. பங்க் வசதி பெற்றுள்ள பிரயாணிகளும் பர்த் வசதியற்ற பிரயாணிகளும் இப்பொழுது நிறைய விளக்கு வசதிகளையும், அதிகப்படியான பங்காக்களையும், புதுக் காற்று புளோயர்களையும், ஷவர், வாட்டர்கூலர் ஆகிய வசதிகளையும் சைவ உணவுக்காரர்களுக்குத் தனி வசதிகளுடன் கூடிய ஒரு பெரிய சாப்பாடு அறையும் பெறலாம். எல்லா பிரயாணிகளும் தமிழ் மற்றும் ஹிந்தி சினிமா படங்களையும் பார்க்கலாம்.

பினங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும் சிங்கப்பூரில் கப்பல் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்பவும் சரக்குகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்

| பின்னி & கோ., (மதராஸ்) லிமிடெட் | மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட் |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

# யோக சிகிச்சை

## சுந்தரம்

### 10. டி. பி. யைத் தடுக்கும் உணவு விஞ்ஞானம்

தற்கால சமூக வாழ்க்கையில் நாம் சுய முயற்சியை இழந்து விட்டோம். ஆரோக்கியத்துக்கென, சிந்திப்பதும், செயலாற்றுவதும், காணக் கூடாத விஷயம். சிந்தனையெல்லாம் மாத்திரை மருந்தைப் பெருக்குவதிலும், செயலெல்லாம் டாக்டர் விடுதிக்கு நடப்பதிலும்தான் காண்பிக்கப்படுகின்றன. இத்தகைய நிலையில் டாக்டர்கள் வேண்டாம் என்று யார் கூற முடியும்? நோயாளியைக் கண்டதும் மருந்தையோ, ஊசியையோ தூக்கினால் இது டாக்டரின் குற்றமாகுமா? அழகான மருந்து டப்பாக்களையும் ஆழமாகக் குத்தும் கூர்மையான ஊசிகளையும் கையாளா விட்டால் டாக்டர் தொழிலை இழந்து விடுகிறார். நோயாளி அவரைச் சிகிச்சை அறியாதவர் என்றும் மதித்து விடுகிறார். அதிலும் மருந்தைக் கொடுப்பதற்குப் பதிலாக, ''உணவைத் திருத்து; பயிற்சி செய்'' என்று டாக்டர் போதிக்கத் தொடங்கினால் அவர் கதி என்ன ஆகுமோ?

டாக்டர்கள் மேல் பிழை கூற நான் தயாராக இல்லை. அவர்களைத் தயார் செய்யும் மருத்துவக் கல்லூரித் திட்டங்களின் மேல் பல குறைகள் இருக்கின்றன. நம் நோய்க்குப் பரிகாரத்தை நாமே தேட வேண்டும். எவ்வளவு உணவு, எத்தகைய உணவு டி.பி. யைப் போக்க மறுப்புச் சக்தியை அதிகரிக்கும்? டி. பி. யைப் போக்கத் திடகாத்திரத்தைத் தரும்? ஒரு குடும்பத்தின் வருமானத்திற்குள் சத்துக்கள் எல்லாம் சேர்ந்த உணவை எப்படிப் பெற முடியும்? வருமானத்தை உணவுப் பகுதியில் எப்படிப் பங்கிட்டுச் செலவழிப்பது? இதற்கெல்லாம் யார் விடை தருவது? யார் வழி காட்டுவது? குடும்ப டாக்டர்களும் ஆஸ்பத்திரியில் பணி புரியும் டாக்டர்களும் தான் நோயாளிகளுக்கு அறிவை ஊட்ட வேண்டும். டாக்டர்களைத்தான் நோயாளிகள் உடனடியாக நாடுகிறார்கள். இயற்கையிலோ அல்லது சுய முயற்சியிலோ, நோயாளிக்கு நம்பிக்கை இருப்பதில்லை.

நம் நாட்டில்தான் மருத்துவர்கள், டி. பி.யைத் தடுக்கும், டி. பி.யைப் போக்கும் உணவுப் பிரச்னையை அறியாதவர்கள் என்று கருத வேண்டாம். மேல் நாட்டிலுமே இந்தச் சூழ்நிலை உள்ளது.

டாக்டர் டன்லப் என்பவர் இங்கிலாந்தில் பிரபல டாக்டர். இவருடைய மருத்துவக் கல்விப் பட்டங்கள், இவருடைய பெயரைக் காட்டிலும் மிக நீளம் கொண்டவை. பி.ஏ., எம்.டி., எப். ஆர்.ஸி.பி., எம்.ஆர்.ஸி.பி. என்றெல்லாம் பட்டம் பெற்றவர்; எடின்பர்க் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்தவர். டி. பி. யைத் தடுக்க உணவின் ஒத்துழைப்பு எத்தகையது என்றும், இதை டாக்டர்கள்தான் சீரமைக்க வேண்டுமென்றும், இந்த வேலைக்கு இவர்களுடைய கல்வியும் தயாரிப்பும் தகுதியாக இல்லை என்றும் கூறுகிறார்.

''உணவுக் குறைவுதான், ஒருவரை டி. பி. தாக்க இடம் அளிக்கும் முக்கிய காரணம் என்பதற்கு, டி. பி. நோய் தாக்கப்பட்ட கணக்குகள் உள்ளன. வைத்தியப் படிப்பில் உணவு விஞ்ஞானம் இது வரை இடம் பெறாது ஒதுக்கப் பட்டு வந்துள்ளது. ஒவ்வொரு வைத்தியருக்கும் புட்டி புட்டியாக மருந்துகளைத் தான் விதிக்கத் தெரியும். ஆனால் பணத்தை உணவு மேன்மைக்காக எவ்வாறு செலவழிக்கலாம் என்று கூறுமளவுக்கு வெகு சிலருக்குக் கூட விஞ்ஞான வளர்ச்சி இல்லை. முக்கியமாகப் பெண்களுக்கும், வீட்டுத் தலைவிகளுக்கும், உணவு விஞ்ஞானக் கல்வியையூட்டுவது



இன்றி யமையாத தேவை. இதைப் பூர்த்தி செய்தால், இந்தப் பிரசாரத்தை மேற்கொண்டால், தேசத்தின் உடல் நல அபிவிருத்தியும் டி.பி. வருவதைத் தடுக்கும் சக்தியும் சித்தியாகும். இது உயர்ந்த ஆரோக்கியத்தைப் பரப்பும் சாதனமாகும்.''

டாக்டர்களின் தயாரிப்பே மாற வேண்டும். இவர்களின் மருத்துவக் கல்வியில் இயற்கை முறைப் படிப்புகள், உணவுப் பகுதிகள், வருமான உணவு பாகுபாடுகள் முக்கிய ஸ்தானம் பெற வேண்டும். நாமும் நம் போக்கைச் சீர்திருத்தம் செய்து கொள்ளுதல் அவசியம். டி. பி. யைத் தடுக்க, டி. பி. யைப் போக்க, 'எத்தகைய உணவு, எந்த உணவுப்பொருள், எந்த நிதானத்தில், எவ்வாறு சிக்கனமாகப் பெறுவது?' என்ற கேள்விக்கு நான் பதிலளிக்கிறேன். வருமானமே இல்லாதவர்களை அரசாங்கம் கவனித்துக் கொள்ளட்டும். சிக்கன வருமானமுள்ளவர்களுக்கு நான் வழி காட்டுகிறேன்.

புஷ்டியான கொழுப்புச் சத்துக்கள், வைடமின் முதலிய பாதுகாப்பு உணவுகள் தேவை. இவைகள் உண்ணும் விகிதமும் சீர்பட வேண்டும். இவ்வாறு அமையுமானால் டி. பி. யைத் தடுக்க மறுப்புச் சக்தியும், டி. பி.யை ஒழிக்க ஆரோக்கிய உறுதியும் கிட்டும். இவைகளைத் தரக்கூடிய பொருள்களைக் கவனிப்போம். தானிய வகை அதாவது அரிசி, கோதுமை, ராகி, கம்பு, சோளம், எண்ணெய், வெண்ணெய், நெய், தேங்காய், பருப்புகள், கீரைகள், காய், பழம் பால் இவைகளே ஆகும். மரக்கறி உணவே போதும் என்றும் அதுவே அதிக ஆரோக்கியமென்றும், விலை குறைவானதென்றும் எனது பலநாள் ஆராய்ச்சியிலிருந்து இந்த முடிவைக் கூறுகிறேன். சத்துள்ள உணவு மரக்கறி உணவிலும் நிறைய இருக்கிறது. மரக்கறி உணவில் சத்துள்ளவை எவை என்றறிந்துகொண்டால் ஆரோக்கியமாக வாழலாம். பன்றி மாமிசத்தையும், மான் இறைச்சியையும், ஆடு கோழி வகையறுக்களையும் ஒதுக்கியே வைக்கிறேன்.

பிரதான உணவாக அரிசியையோ, கோதுமையையோ, ராகியையோ உண்ணுகிறோம். காலை, மாலை இரவு வேளைகளிலும் இதுதான் உண்கிறோம். மற்றவை தாளிப்பது போல் சேர்க்கப் படுபவை; சேர்க்காமலும் ஒதுக்கப்படுகின்றன. ''இருபது சப்பாத்தியும், அரைப்படி அரிசியும், யானைத்தலை ராகி மொத்தையும் சாப்பிடுகிறேனே! தடித்தும் காண்கிறேனே! என்னையுமா டி.பி. கிருமி நேசிக்கும்?'' என்று கேட்கிறீர்களா? இத்தகைய உணவினால் பலன் இல்லை. டி. பி. கிருமிகள் இவ்வாறு சாப்பிடுகிறவர்களை நேசிப்பது மட்டுமல்ல; அன்யோன்னிய உறவும் கொண்டாடும்! ஏன்? இத்தகைய உணவு ஒரு சீர்கெட்ட' தன்மையானது. டி. பி. யைத் தடுக்கும் மறுப்புச் சக்தி அற்றது. இதைக் கீழ்க்கண்ட சித்திரம் விளக்கும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | அரிசி | 15 | அவு. |
| 2. | பால் | 1·03 | அவு. |
| 3. | பருப்பு | 1 | அவு. |
| 4. | காய் | 1·5 | அவு. |
| 5. | கீரை | 0·25 | அவு. |
| 6. | எண்ணெய் வகை | ·05 | அவு. |


1


2


3


4


5


6

இதிலிருந்து கிடைக்கும் உஷ்ணப் பிரமாணம் 1750· இது மிகக் குறைவு. சுண்ணாம்புச் சத்து, வைடமின், அயம், வகையறு தேவையான அளவுக்கு இல்லை.



## ஸ்ரீமத் பாகவத உபன்யாசம்

○●○

வேதங்களின் சாரமெனப் புகழப்படுவதும், பாலகோபாலனின் பால்ய லீலைகளை அழகாகக் கூறும் அரிய புராணமுமான ஸ்ரீமத் பாகவதத்தை உமையாள்புரம் பிர்ம்மஸ்ரீ ஆர். சிவராம சாஸ்திரியார், பம்பாய் மாதுங்கா ஆஸ்திக சமாஜத்தின் ஆதரவில் உபன்யாசம் செய்து வருகிறார். ஆஸ்திக அன்பர்களின் ஆதரவுடன் நடந்து வரும் மேற்படி உபன்யாசம் 21—10—56 அன்று பூர்த்தியாகிறது.

தரம் பிரதானமான
இடத்தில்

# ரெய்ப்பூர்

நிற்கிறது







பாப்ளின்கள், மர்ஸிரைஸ்டு
பிரிண்டட் வாயில்கள்
மற்றும் லான்கள்

# ரெய்ப்பூர் மில்ஸ் லிட்.

அஹமதாபாத்

# இனாம்






மறந்துவிடாதீர்கள்! "ஓ.கே." வனஸ்பதி டின்களில் பரிசுக் கூப்பன்கள் உள்ளன. அவற்றிற்குப் பதிலாக அழகான அமைப்புடன் கூடிய ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களை வெகுமதியாகக் கொடுக்கிறோம். "ஓ. கே." வனஸ்பதி கூப்பன்கள் சேருங்கள். உங்களுக்குப் பிடித்த பரிசைப் பெறுங்கள்.

மேலும் விவரங்கள் அறிய, உங்கள் அருகில் உள்ள "ஓ. கே." வியாபாரியிடமிருந்து படங்களுடன் கூடிய 'போல்டரை' வாங்கிப் பாருங்கள்.

## OK ஓ.கே வனஸ்பதி

ஒரு அவுன்ஸிற்கு 700 I.U. வைட்டமின் 'A' கொண்டது
1, 2, 5, 10 பவுண்டு டின்களில் கிடைக்கிறது.

தயாரிப்பவர்கள்:

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1.

EP

தேவியின் கழகம்

# மாமியும் மருமகளும்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

'ஏக குடும்பமாக இருப்பது நன்மையா? தனிக் குடும்பமாக இருப்பது நலமா? மாமி, மருமகள் இடையே சுமுகமான உறவை வளர்ப்பது எப்படி?' என்று கேட்டிருக்கிறாய். வர வரச் சிக்கலான கேள்விதான் கேட்டு விடுகிறாய். எனக்குத் தோன்றுவதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். பழைய காலத்தைப் போல் ஏக குடும்பமாக இருப்பது இந்தக் காலத்தில் சாத்தியமில்லை. தற்காலத்தில் உத்தியோகத்தின் காரணமாக அநேக ஊர்களுக்குப் போய்க் குடும்பம் நடத்த நேருகிறது. பெரியவர்களோ, இதர குடும்பத்தினரோ வர முடியாமல் போய் விடுகிறது. நாகரிகப் பெண்கள் தனிக் குடும்பத்தையே பெரும்பாலும் விரும்புவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

மாமி, மருமகள் என்று இருந்தால் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளாததே குடும்பச் சண்டையின் காரணமாகிறது. தற்காலத்தில் ஒரு மாமியாராக இருப்பதற்கும் ரொம்பவும் சாமர்த்தியம் தேவை.

வீட்டுக்கு வந்த பெண், முப்பது வருஷங்களுக்குப் பிறகு தன்னுடைய ஸ்தானத்துக்கு வந்திருக்கிறாளென்று ஓரளவு மதிப்புகொடுக்க வேண்டும். முப்பது வருஷங்களில் சமூகம் எவ்வளவு மாறி இருக்கிறதென்று நினைத்துப் பார்ப்பது நலமல்லவா? அந்தப் பெண்ணுடைய நடை, உடை, பாவனை, பழக்க வழக்கங்கள் எல்லாம் தன்னைப் போலவே இல்லையென்ற குறையை விட்டு விடுவது நல்லது. முடிந்தால் தன் பிள்ளையிடம் உள்ள இணையற்ற பாசத்தை வெளிக் காட்டாமல் இருக்க முயலுவதும் நல்லது.



மருமகள் வந்ததும் வராததுமாக அவளைப் பற்றி விமர்சனம் செய்வது தவறு. மருமகளைக் கொண்டாடுவதுடன் அவள் தாயையும் கொண்டாடினால் மிகவும் நல்லது. அல்லது அவளைப் பற்றிக் குற்றமாவது சொல்லாமல் இருப்பது நல்லது. ஒரு அம்மாள் தன் பிள்ளைக்கு வாயாடிப் பெண் வேண்டாமென்று தேடினாள். ஊமையாக இருந்தால் கூடத் தேவலை எனக் கருதினாள். பிள்ளை தமாஷ் பேர்வழி. அவனுக்குப் பிடித்த பெண்ணை ஊமை யென்று அந்தப் பெண்ணின் பெற்றோர்களைச் சொல்லச் சொல்லி அம்மாவின் சம்மதம் பெற்றுக் கல்யாணம் செய்து கொண்டான். அவள் ஊமையாகவே நடித்தாள். ஒரு நாள் மாமி பெண்ணின் பிறந்த வீட்டுக்காரர்களைக் குற்றம் சொல்லிக் கொண்டிருந்தாளாம். அவ்வளவு நாள் ஊமையாக நடித்த பெண் வாயைத் திறந்து பிரமாதமாகச் சண்டைக்கு வந்து விட்டாளாம்.

மாமி நாளடைவில் குடும்பத்தின் பொறுப்புகளிலிருந்தும் ஆட்சி முறைகளிலிருந்தும் விலகிக் கொண்டே வருவது இருவருக்கும் நல்லது. மாமியும் மனச் சாந்தி அடையலாம். சுருக்கமாகச் சொன்னால் மாமிக்குக் குடும்பத்திலிருந்து கொண்டே வானப்ரஸ்தம் அடைவது போன்ற நிலை. அவ்வளவேதான்.

மருமகளாக வந்த பெண்ணுக்கு நிலைமை அவ்வளவு கஷ்டம் இல்லை. குடும்பத்தின் பொறுப்புகளை நாளடைவில் ஏற்றுக் கொண்டால் போதும். குழந்தைகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். வாழ்க்கையில் ஒரே புதுமை. கணவனின் ஆதரவு வேறு பிரமாதமாக இருக்கும். மாமியைச் சமாளிக்க அன்பும் சாதுர்யமும்தான் தேவை. மாமியை மதித்து மரியாதை செய்வது, அல்லது பாவனையாவது செய்தால் கூடப் போதுமானது. குழந்தைகளை வளர்க்கும் விஷயத்திலும் சிக்கல் வரலாம். மாமிக்கு அநுபவம் அதிகம் என விட்டுக் கொடுத்தால் காரியம் ஒன்றும் கெட்டு விடாது. அவர்கள் பிள்ளையின் குடும்பத்தில் ஒட்டுதலாக இருப்பதைத் தடை செய்யாமல் இருந்தால் நல்ல பெண் என்ற பட்டத்தைப் பெற்று விடலாம். எங்கேயோ அபூர்வமாகச் சில மாமியார்கள், மருமகள் வெளியே சினிமா, பாட்டுக் கச்சேரிக்குச் செல்லுவது பிடிக்காமல் தங்கள் முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக் கொள்ளலாம். அதைப் பாராட்டாமல் பொறுமையாக இருந்து விட்டால் காலக் கிரமத்தில் சரியாய் விடும்.

எனது அன்புக்கும் மதிப்புக்கும் உரிய ஒரு சகோதரி ஆதர்ச மாமியாக இருக்கிறார். மாமியின் நிலையை அவர் மிகவும் திறமையுடன் இனிய சொற்களுடன் நிர்வகிப்பதைப் பார்த்து நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். கடைசியாக, மாமி, மருமகள் இருவருக்குமே விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை, சகிப்புத் தன்மை இவைதான் தேவை. இப்படிக்கு,

**பூமாதேவி**




மனிதகுலத்தில் பிறந்தவர்களையே காதல் என்ன வெல்லாமோ பாடாய்ப் படுத்தி விடுகிறது. அப்படியிருக்க, பொன்னுலகத்துப் பெண்ணுக்கும், மண்ணுலகத்து மனிதனுக்கும் இடையில் காதல் ஏற்பட்டதென்றால் அது சாமான்யமானதா? காதலித்தவள் வெறும் தேவலோகத்துப் பெண்மணியா? வனப்பின் எல்லை என்று சொல்லக்கூடிய வனிதா ரத்தினமான ரம்பை அல்லவா அவள்?

இந்திரசபையில் இணையற்ற நடனமாடும் ரம்பை எங்கே? கரும்பாலையில் வேலை செய்யும் அசட்டு வாலிபன் அழகு எங்கே? பூத்துக் குலுங்கும் பூங்காவையும், பாழ்த்துக் கிடக்கும் பாழுங் கிணற்றையும் ஒப்பிட முடியுமா? வானத்தில் உல்லாஸ பவனி வரும் வட்ட மதியையும், பட்டிக்காட்டில் தட்டிக் கேட்க ஆளில்லாமல் பவனி வரும் மதியற்ற மானிடனாகிய அழகையும் ஒப்பிட முடியுமா?

பூவுலகத்திலே, புனித யமுனையில் நீராட வந்த ரம்பை இயற்கை எழிலில் மனத்தைப் பறிகொடுத்து விடுகிறாள். தேவ சபையில் ஊர்வசி, திலோத்தமை முதலியவர்கள் வந்தும் ரம்பை வராததைக் கண்டு இந்திரன் கோபங் கொண்டு யமுனை நதி தீரத்தில் சிலையாக நிற்கும்படி ரம்பைக்குச் சாபங் கொடுக்கிறான். சமய சஞ்சீவியான நாரத முனிவர் தலையிட்டதன் காரணமாக ரம்பை பகலெல்லாம் மண்ணுலகில் சிலையாகவும், இரவிலே விண்ணுலகில் சுயரூபத்துடனும் இருக்கும்படி இந்திரன் சாபத்தை மாற்றுகிறான்.

யமுனாநதி தீரத்தில், வெண்மணற்பரப்பில் ரம்பை சிற்பி செதுக்காத சிலா ரூபத்தில் நிற்கிறாள். நண்பர்கள் கைலாசம், வைகுண்டம் இருவருடனும் யமுனாநதி தீரத்துக்குச் சென்ற அழகு, அவர்கள் சூழ்ச்சியில் சிக்கி அந்தச் சிலைக்கு மாலையிடுகிறான். தான் மாலையிட்ட மனைவி ஒரு சிலை என்று தெரிந்ததும் அழகு அழுகிறான். இரவில் சுயரூபம் பெறுகிறாள் ரம்பை. தன் ஞானதிருஷ்டியினால் மாலையிட்ட மணவாளன் யாரென்று அறிந்து அவனைத் தன் மாயையினால் தேவலோகத்துக்கு அழைத்துச் செல்லுகிறாள்.

மாயையும், ஞானதிருஷ்டியும், நினைத்த இடத்துக்குச் செல்லும் சக்தியும் மட்டும் ரம்பைக்கு இல்லையென்றால்...... ஆகா! படம் பார்ப்பவர்களும் ஒரு தூக்கம் தூங்கி ரம்பையுடன் பொன்னுலகத்துக்குப் போக வேண்டியதுதான்!

கல்பனாவின் "ரம்பையின் காதல்" படத்தின் மூலநட்சத்திரம் பானுமதி. முழுப் படத்துக்கும் மூலமும் உரையுமாக விளங்குகிறார் பானுமதி. ஊர்வசி, திலோத்தமையுடன் யமுனை நதி தீரத்தில் இயற்கை எழிலில் ஈடுபட்டு நிற்கும் நிலையிலிருந்து, மானிடனிடம் காதல் புரிவது, இந்திர சபையில் எழில் நடம் புரிந்தது, கோபங் கொண்ட தேவேந்திரனிடம் ஆவேசத்துடன் பேசியது, கடைசியில் கருணாவுக்கும் அவள் கணவன்

அழகுக்கும் ஆசி கூறியது ஆகிய எல்லாக் கட்டங்களிலும் பானுமதி திறமையுடன் நடித்திருக்கிறார். ''ஆட வாரீர் — இன்றே ஆட வாரீர்'' என்ற பாட்டைப் பாடிய வண்ணம் அபிநயம் பிடித்த பானுமதி, படம் பார்ப்பவர் உள்ளங்களில் சுலபமாக இடம் பிடித்துக் கொண்டு விட்டார்.

''ரம்பையின் காதல்'' மிகப் பழைய கதை; கதா காலட்சேபங்களில் கர்ண பரம்பரையான ஆதாரத்துடன் வழிவழி வரும் கதை. பல வருஷங்களுக்கு முன்பு, ''ரம்பையின் காதல்'' கே. சாரங்கபாணியையும், கே.எல்.வி. வசந்தாவையும் முக்கிய பாத்திரங்களாகக் கொண்டு சேலம் மாடர்ன் தியேட்டர்ஸாரால் தயாரித்து வெளியிடப்பட்டது. அதில் ரம்பையைவிடச் சாரங்கபாணி பிரமாதமாக நடித்தார். கல்பனா கலா மந்திர் தயாரித்திருக்கும் இந்த ''ரம்பையின் காத''லில் ரம்பை நன்றாக நடித்திருக்கிறார். அழகு பாகத்தை ஏற்று நடிக்கும் தங்கவேலுவுக்கு இந்தப் படத்தில் பூரண வெற்றி கிட்டவில்லை என்று கருதுகிறேன். ஆனால், கடைசியில் ரம்பையைப் பிரிந்து பைத்தியமாக நடிக்கும் போது நன்றாக நடித்திருக்கிறார்.

படத்தின் ஆரம்ப முதல், 'இடை வேளை' வரையில் படம் கொஞ்சம் மந்த கதியில்தான் செல்லுகிறது. மானிடக் காதலே துரித கதியில் செல்வதில்லை! விண்ணுலகத்துக் காதல் மட்டும் வேகமாகச் சென்று விடுமா?

காசி தேசத்து இளவரசி கருணாவாக எம். என். ராஜம் நடிக்கிறார். நந்தவனத்தில் விளையாடவும், ரம்பையின் ஆவி பிடித்ததும் பேயாட்டம் ஆடி எல்லோரையும் வெருட்டவும், அதன்மூலம், காதலிப்பதில் அதிகக் காலம் கடத்தாமல், சுலபமாகக் காதலனின் கரம் பற்றவும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்திருக்கிறது; எல்லா இடங்களிலும் அவர் கவர்ச்சியுடன் கச்சிதமாக நடித்திருக்கிறார்.

நடிப்பில் யம காதகரான பாலையாவுக்கு இந்தப் படத்தில் யமன் வேஷம் கிடைத்திருக்கிறது! மிரட்டலுக்கும் உருட்டலுக்கும் அவருக்கு யாராவது சொல்லித்தர வேண்டுமா, என்ன?

செய்திப் பத்திரிகைகளும் ரேடியோவும் இல்லாத புராண காலத்தில் நாரத முனிவர் அந்த இரண்டு வேலைகளையும் தாம் ஒருவரே ஏற்று மிகத் திறமையுடன் செய்து வந்தார். பத்திரிகை நிருபர் மாதிரி அவருக்கு வேண்டுதல், வேண்டாமை இரண்டும் இல்லை; அசுரர்களின் சூழ்ச்சியைத் தேவர்களுக்கு அறிவித்தும், தேவர்களின் முயற்சியை அசுரர்களுக்கு அறிவித்தும், அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் விளங்கியவர் நாரத முனிவர்; அவர் அநாதிகாலம் தொட்டுக் கூத்து, நாடக மேடைகளிலும், வெள்ளித் திரையிலும் வெற்றியுடன் பவனி வந்திருக்கிறார்; தாடியுடனும் தாடியில்லாமலும் தோன்றிக் காரியத்தைத் தடையில்லாமல் முடித்து வைத்திருக்கிறார்; சொந்தக் குரலிலும் இரவல் குரலிலும் பாடி இன்பம் மூட்டியிருக்கிறார்; மொத்தமாகவும், சில்லறையாகவும், ஒல்லியாகவும் தோன்றிக் களிப்பூட்டியிருக்கிறார்! யமன், மானிடன், தேவன், வித்தியாதரன், கந்தர்வன், அரக்கன்—என்ற வேற்றுமையே நாரத முனிவருக்குக் கிடையாது.

அத்தகைய சிறப்பு வாய்ந்த நாரதர் வேஷத்தில் இந்தப் படத்தில் எம். என். நம்பியார் தோன்றுகிறார். வில்லனாகவே நடித்துப் புகழ் பெற்று விளங்கும் நம்பியார் நாரதர் கோலத்தில் வருகிறார் என்பதை முதலில் என்னால் நம்ப முடியவில்லை. ககன மார்க்கமாக வந்து சொந்தக் குரலில் கானம் இசைக்காவிட்டாலும் சீர்காழி கோவிந்தனின் பின்னணிப்பாட்டுக்கு ஏற்ப நன்றாக வாயை அசைக்கிறார். வழக்கமான அவரது உருட்டு புரட்டுகளுக்கு இந்தப் படத்தில் இடமில்லை.

பேயோட்டும் காட்சிகளைக் குறைத்து, அதற்குப் பதிலாகப் படத்தைக் கொஞ்சம் துரிதமாக ஓட்டியிருக்கலாம். இசையமைப்பு, வசனம், பாடல்கள் யாவும் நன்றாயிருக்கின்றன. சமூகப் படங்களைப் பார்த்து அலுப்புத் தட்டியவர்களுக்கு இப்படம் இனிப்பை யளிக்கலாம். ஆர். ஆர். சந்திரனுடைய திறமையான டைரக்ஷனில் இப்படம் தயாரிக்கப்பட்டிருக்கிறது.



# வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

# மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ **வாயில் நறுமணம்!**

✓ **ஒளிவீசும் பற்கள்!**

✓ **சொத்தை குறையும்!**




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள்:

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் ப்ற்களை 2 நிமிஷம் பிரஷ்கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல்நுனி நோக்கி தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

TPC/14

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**



# ஆனந்தக் கண்ணீர்

வி. எஸ். எஸ். மரகதம்

"இது தம்பி செய்த சூழ்ச்சியாகத் தான் இருக்கும்" என்று லவலேசமும் சந்தேகம் இல்லாமல் பட்டுவிட்டது குமாரசாமியின் மனத்தில்.

"என்னதான் இருந்தாலும் அவ்வளவு தூரத்துக்குப் போக மாட்டான் சங்கரன். யார் செய்த பொல்லாத வினையோ இந்த மாதிரி குடும்பத்தில் நிரடு பாய்ந்து விட்டது. இல்லா விட்டால்...." என்று குமாரசாமியின் மனைவி வாக்கியத்தை முடிப்பதற்குள்ளேயே அவருக்குக் கோபம் கொப்புளித்துக் கொண்டு வந்தது.

ஒருவருக்கொருவர் எதிரும் புதிருமான அபிப்பிராயம் கொண்டிருந்தனர்.

"என் கோபத்தைக் கிளப்பாதே, மீனாட்சி! என்னத்தைக் கண்டாய் நீ? உனக்கு அடியும் தெரியாது; நுனியும் தெரியாது. வெளுத்ததெல்லாம் பால்தான் உனக்கு" என்று சொல்லிவிட்டுச் சற்று நிறுத்தினார்.

மீனாட்சி அம்மாள் அவர் நினைத்ததைப் போல அவ்வளவு சோடை அல்ல. அவருடைய குணம் எப்பொழுது எப்படி மாறும் என்பதை முப்பது வருஷ காலமாகத் துல்லியமாய்க் கண்டு வைத்திருந்தாள். அவருக்குக் கோபம் வரும்போதெல்லாம் தன் கட்சியில் நியாயம் இருக்கிறது என்று நன்றாகத் தெரிந்தாலும் அதை விட்டுக் கொடுத்து அவரோடு அபிப்பிராயத்தில் ஒன்றிப்போய் விடுவது அவள் கண்டு பிடித்து வைத்திருந்த இல்வாழ்க்கையின் ரகசியம்.

"ஆமாம், நான் என்னத்தைக் கண்டேன்? எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ? சரி ஏன் மனத்தை வீணாகக் குழப்பிக் கொள்கிறீர்கள்? நடக்க வேண்டிய காரியத்தைப் பாருங்கள். என்ன செய்வீர்களோ தெரியாது. என் மகள் கலியாணம் நாலு பேர்கள் சிரிக்க நின்றுவிடக் கூடாது. அவ்வளவுதான். அந்தக் கடற்கரை முருகன் தான் வழி செய்ய வேணும்" என்றாள் அவள். நெஞ்சில் நிரம்பியிருந்த சோகம் அவளுடைய வார்த்தைகளில் தொனித்தது. அது குமாரசாமியின் மனத்திலும் நன்றாகத் தைத்தது.

மீனாட்சி அம்மாள் கொண்டுவைத்த காப்பியைக்கூடச் சரிவரக் குடிக்காமல், சட்டையைப் போட்டுக் கொண்டு விர்ரென்று கிளம்பிச் சென்றார் குமாரசாமி.

* * *

வடக்குத் தெருவில் குமாரசாமியின் தம்பி சங்கரன் வீடு. சங்கரன் முன் தாழ்வாரத்தில் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு பத்திரிகை படித்துக் கொண்டிருந்தான். தேவானை அவனுக்கு டீ கொண்டு வந்து கொடுத்து விட்டு, ஏதோ ஒன்றை அவனிடம் சொல்லுவதற்கு ஆத்திரப்பட்டுக் கொண்டிருந்தாள்.

"நீ என்ன சொல்லப் போகிறாய் என்பது எனக்குத் தெரியும், தேவானை! செந்தில் நாயகி கலியாணம் தடைப்பட்டுப் போய் விட்டது என்று சொல்லப் போகிறாய். அப்படித்தானே?" என்று சங்கரனே கேட்டான்.

"ஆமாம் அதுதான். காலையில் அதைக் கேள்விப்பட்டதிலிருந்து...."

"சரிதான் போதும், நிறுத்து. அறுந்த செருப்பைத் தூக்கி எறிவது போலத் தூக்கி எறிந்து விட்ட பிறகு என்ன உறவு, பாசம் வேண்டியிருக்கிறது? பேசாமல் உன் வேலையைப் பார்த்துக் கொண்டுபோ. என் காரியங்களைக் கவனிக்கவே எனக்கு நேரமில்லை. ஊராரைப் பற்றிய வம்பளப்பை எல்லாம் இங்கே அளக்காதே."

தேவானையும் இங்கிதம் தெரிந்தவள். கணவனிடம் எப்போது எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை மீனாட்சி அம்மாளிடம் இருந்து கற்றுக் கொண்டதை மறந்து விடவில்லை. ஒரு கையால் தூணைப் பிடித்துக் கொண்டு நின்றவள் அப்படியே திகைத்து நின்று விட்டாள். அவள் மனசில் தோன்றியதைச் சொல்ல அவளுக்குத் துணிவில்லை. தேவானையிடத்தில் சங்கரனுக்கு அளவு கடந்த அன்புதான். அவள் கிழிய கோட்டை அவன் தாண்ட மாட்டான் என்பதும் என்னவோ உண்மை. ஆனால் இந்தக் குடும்பத் தகராறில் அவளுடைய முயற்சி பலிக்கவில்லை. தன்னுடைய தமையன் பேராசையால் தன்னை அவமானப் படுத்தி வீட்டை விட்டு விரட்டி விட்டான் என்பது சங்கரன் மனத்தில் வெகு ஆழமாக வேரூன்றி விட்டது. அதை அவ்வளவு முக்கியமாக எடுத்துக் கொள்ளாமல், 'குடும்பம் என்று இருந்தால் இதெல்லாம் இல்லாமல் இருக்குமா?' என்று எடுத்துக் கொள்ளவேண்

டும் என்பது தேவானையின் எண்ணம். ஆனால் அண்ணன் தம்பிகளுக்குள் மனஸ்தாபம் நாளுக்கு நாள் முதிர்ந்து கொண்டு வந்தது.

அதற்கு மேல் கணவனும் மனைவியும் பேச வில்லை. சங்கரன் பத்திரிகை படிப்பதில் கவனம் செலுத்தினன். தேவானை தூணைப் பிடித்தவாறே இன்னமும் நின்று கொண் டிருந்தாள். அவள் மனக் கண்ணில் அந்தச் சித்திரம் வழக்கம் போல ஓட ஆரம்பித்தது.

அண்ணனும் தம்பியும் பிரிந்து போய் அப்போது ஐந்து வருஷங்கள் இருக்கும். சங்கரன் தனியாக ஆரம்பித்த வியாபாரமும் ஒருவிதமாக வேரூன்றி நிலைத்து விட்டது. அந்தச் சமயத்தில் டைபாய்டு ஜுரத்தில் விழுந்தான் சங்கரன். தேவானை கதிகலங்கிப் போய் விட்டாள். அவளுடைய தந்தையும் தாயும் அங்கு வந்து ஒரு பெரிய டாக்டரை



வைத்துப் பார்த்தார்கள். தம்பியின் நிலை யைக் கேட்டு எந்த நிமிஷத்திலும் குமாரசாமி ஓடி வரலாம் என்று தேவானை எதிர்பார்த் துக் கொண்டிருந்தாள். அவர் வரவில்லை. அன்று நிலைமை மிக மோசமாகி விட்டது. தனியாக இருந்து அழுது கொண்டிருந்தாள். அப்போதுதான் வந்து டாக்டர் ஊசி போட்டு விட்டு இரவுப்பொழுது கழியவேண்டும் என்று சொல்லி விட்டுப் போய் விட்டார்.

மணி இரவு பதினொன்று இருக்கும். ''தேவானை'' என்று குரல் கேட்டது. கொல்லைப் பக்கத்திலிருந்து. அந்தச் சம யத்தில் தன்னை அழைப்பது யாராக இருக்கும் என்ற திகிலோடு எழுந்து சென்றாள்.

கொல்லைப் பக்கத்து வாசலில் மீனாட்சி அம்மாள் நின்று கொண்டிருந்தாள். தேவா னைக்கு என்ன பேசுவது என்று தெரியவில்லை. அழுத கண்ணோடு நின்று கொண்டிருந்தாள் அவள். ''எப்படி இருக்கிறது சங்கரனுக்கு?'' என்று கேட்டாள்.

நிலைமையைச் சுருக்கமாய் எடுத்துச் சொன் னாள் தேவானை.

''ஒன்றுக்கும் பயப்படாதே. அவனுக்குச் சுகமாகி விடும். இந்தா! நம் பூஜை அறையி லிருந்து எடுத்து வந்தேன்'' என்று சொல்லிய வண்ணம் அவள் நெற்றியில் குங்குமத்தை இட்டு விட்டுச் சென்றாள்.

தேவானையின் மனத்தில் ஒரு அசாதாரண நம்பிக்கை பிறந்தது. காலையில் சங்கரன் நிலை மையில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. டாக்டர் தைரியம் பேசினார்; சங்கரன் குணம் ஆகி எழுந்து விட்டான்.

ஆனால் ஒரு வயிற்றுக் குழந்தைகளுக்கு வாழ்க்கைப் பட்ட அந்த இரண்டு பெண்களும் சந்தித்தது அவர்களுக்கு மட்டும் தான் தெரி யும். அதையும் மீனாட்சி மறந்து விட்டாள். தேவானையால் அதை ஒரு நாளும் மறக்க முடியவில்லை.

தேவானை சிந்தனை வசப்பட்டு இன்னும் நின்று கொண்டிருந்தாள். சங்கரன் பத்திரி கையைப் படித்துத் தரையில் எறிந்து விட்டு எழுந்து வேகமாக வெளியில் சென்றான்.

* * *

சங்கரன் குறுக்குத் தெருவைக் கடந்து பெரிய தெருவை நோக்கிச் சென்று கொண் டிருந்த போது எதிரே குமாரசாமி வந்து கொண்டிருந்தார். வெகு அருகில் வரும் வரை இருவரும் அடையாளம் கண்டு கொள்ள வில்லை. எதிரே வருவது சங்கரன் என்று தெரிந்ததும் வெடுக்கென்று முகத்தைத் திருப் பிக்கொண்டு வேகமாகநடந்தார் குமாரசாமி.

பெரிய தெருவின் கோடி வீடு, சங்கரனது நண்பர் கோவிந்தராஜனின் வீடு. அவரை ஒரு வாரமாகப் பார்க்கவில்லை. அடுத்த வீடு சங்கரனோடு கூட்டு வியாபாரத்தில் கலந்து கொள்ளும் அவனுடைய இன்னொரு பாகஸ்தர் ராமலிங்கத்தினுடையது.

சங்கரன் நண்பர் கோவிந்தராஜனின் வீட் டுக்குச் சென்றான்.

''வாருங்கள், உங்கள் அண்ணா இப்போது தான் வந்துவிட்டுப் போனார்.''

''அப்படியா?'' என்றான்.

''ஆமாம். மகள் கல்யாணம் நின்றுபோகும் நிலைமையில் இருக்கிறதாம். அவசரமாய்க் கைமாற்றாகவாவது கடனாகவாவது பத்தா யிரம் ரூபாய் வேண்டுமாம். நான் எங்கே போகிறது பத்தாயிரத்துக்கு, இந்தச் சமயத் தில்? ஒரே வார்த்தையில் இல்லை என்று அவருக்குச் சொல்லி விட்டேன்.''

அவர் மேலும் தொடர்ந்து சொல்லும் போது நாற்காலியை அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு சங்கரனிடம் ரகசியம் பேசுவதுபோல் பேச ஆரம்பித்தார்.

அப்புறம் பேச்சு வியாபாரத் துறையில் திரும்பியது. கொஞ்ச நேரம் பேசிக்கொண்டு இருந்து விட்டுத் திரும்பினான் சங்கரன்.

சங்கரன் வீட்டுக்கு வந்த சமயம் தேவானை ஒரு படத்தை எடுத்துப் பார்த்துக் கொண் டிருந்தாள். அந்தப் படம் வேறு யாருடையது மல்ல. செந்தில்நாயகி ஐந்து வயதுக் குழந் தையாக இருந்தபோது எடுத்த படம்.

''இந்தப் படத்தை வைத்து இப்பொழுது என்ன செய்துகொண்டிருக்கிறாய் தேவானை!'' என்று கேட்டான் சங்கரன்.

''ஒன்றுமில்லை'' என்றாள். ஆனால் அவளுடைய உணர்ச்சிகளை வெளியிட அவளால் முடியவில்லை. அந்தக் குழந்தையைக் கணவனும் மனைவியும் எவ்வளவு சீராட்டினார்கள்? அவன் மீது எவ்வளவு அன்பு செலுத்தினார்கள்? எல்லாம் நேற்று நடந்தது போல் இருக்கிறது. அவள் கல்யாணமாகி வந்த புதிதில் 'சித்தி, சித்தி' என்று சொல்லிக் கொண்டு அவள் காலைத்தான் சுற்றி வருவான். எல்லாம் கனவாகப் போய்விட்டது இப்போது.

அவனுக்குக் கல்யாணம். பணமுடை. சீர் செய்ய இயலாததால் கல்யாணம் முறிந்து போக எத்தனித்துக் கொண்டிருந்தது. சங்கரன் இந்தச் சமயத்தில் அண்ணனுக்கு உதவியாக இருந்து கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டும் என்பதுதான் அவளுடைய அந்தரங்க ஆசை. ஆனால் அவளது கணவன் சங்கரன் உள்ளத்தில்....?



கல்கத்தா தமிழ் மாணவர் மன்றத்தின் மூன்றாவது ஆண்டு விழா செப்டம்பர் மீ 22ந் தேதி முதல் 26-ந் தேதி வரை ஐந்து தினங்களும் சிறப்பாக நடைபெற்றது. விழாவில் 'தமிழ்க் கடல்' மறைமலை அடிகள், 'தமிழ்த் தென்றல்' திரு. வி. க. ஆகியவர்களின் திருவுருவப் படங்களைத் திறந்து வைத்தது விழாவுக்கே ஒரு பெருமையாக இருந்தது. இந்த விழாவில் தலைமை விருந்தினராகப் பச்சையப்பன் கல்லூரி துணைத் தமிழ்ப் பேராசிரியர் திரு அ. மு. பரமசிவானந்தம் கலந்துகொண்டு ''தமிழ் இலக்கிய வளர்ச்சி'' என்பது பற்றிச் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்.

பேராசிரியர் திரு பரமசிவானந்தம் அவர்களைக் கல்கத்தா தமிழ் மாணவர் மன்றம் வரவழைத்துப் பாராட்டியதுடன், அவரை இந்திய சர்க்காரும் பாராட்டிப் பரிசும் கொடுத்திருக்கின்றனர். அவர் எழுதிய 'கூடி வாழ்' என்ற நூலுக்கு இந்திய சர்க்கார் பாமர இலக்கியப் பரிசு வழங்கி யிருக்கின்றனர்.

மேலே: இடது கோடியில் துணைத் தமிழ்ப் பேராசிரியர் திரு பரமசிவானந்தம் அமர்ந்திருப்பதையும் தமிழ் மாணவர் மன்றக் காரியதரிசி பேசுவதையும் காணலாம்.

''உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்காதே, தேவானை. கல்யாணத்தை நம்மிடம் கேட்டுக் கொண்டா ஏற்பாடு செய்தார்கள்? அவனுக்கு எவ்வளவு ரோஷம் உண்டோ, அவ்வளவு எனக்கும் உண்டு என்பதை மறந்து விடாதே. கேட்பார் பேச்சைக் கேட்டுக் கொண்டு என்னை வீட்டை விட்டு விரட்டினானே, அவனுக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். பெரிய இடம் என்று அவ்வளவு பெரிய இடத்தில் யார் மாப்பிள்ளை பார்க்கச் சொன்னார்கள்?'' என்றான் சங்கரன்.

வேறு விஷயமானால் தேவானை சரியானபடி பதில் சொல்லியிருப்பாள். ஆனால் இந்த விஷயத்தில் அவன் எண்ணத்தில் குறுக்கே பாய அவளுக்கு விருப்பம் இல்லை. இப்போதாவது அவன் மனம் திரும்பாதா என்று இருந்தாள்.

''சரி; சாப்பிட வாருங்கள். இது உங்கள் சொந்த அண்ணன் வீட்டு விஷயம். நான் யார்? ஆயிரம் இருந்தாலும் நான் வேறு வீட்டுப் பெண்தானே. இன்றைக்கு இல்லாவிட்டால் நாளைக்கு நீங்கள் இருவரும் ஒன்று கூடாமல் இருக்கப் போகிறீர்களா?''

''அப்படித்தான் பேசாதே என்கிறேன். நான் எப்படி எண்ணுகிறேனோ அப்படி நீ எண்ண வேண்டும்'' என்று பேச்சை முடித்தான் சங்கரன்.

குமாரசாமியின் மனத்தில் சொல்ல முடியாத கோபமும் சோகமும் கொந்தளித்துக் கொண்டு கிடந்தன. கொஞ்சம் ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டதை எண்ணி அவர் மிகவும் நொந்து கொண்டார்.

செந்தில்நாயகியின் அழகுக்கு ஏற்றவன் அந்த மாப்பிள்ளை என்பதுதான் அவர் அந்த இடத்துக்கு அவளைக் கொடுக்கச் சம்மதித்ததற்கு முக்கிய காரணம். இப்போது அது முக்கிய காரணமில்லை; நான்கு பேர்கள் அறிய நிச்சயித்த கல்யாணம் தடைப்படக் கூடாது என்பதுதான். மாப்பிள்ளை தொடர்ந்து படிப்பதற்கு ரூபாய் பதினையாயிரம் ரொக்கமாகத் தராவிட்டால் அவர்கள் வேறு இடம் பார்க்கப் போவதாகத் தீர்மானமாகச் சொல்லிவிட்டார்கள். மற்ற ஏற்பாடுகள் செய்தது போக அவர் கையில் இருந்தது எல்லாம் ஏழாயிரமோ எட்டாயிரமோதான்.

''அந்த நிலத்தை விற்று விடுங்கள்'' என்று எவ்விதத் தயக்கமும் இல்லாமல் சொன்னாள் மீனாட்சி அம்மாள். அந்த நிலம் மீனாட்சி அம்மாள் சீதனமாகக் கொண்டு வந்தது.

அந்தச் சமயத்தில் தலை வாசல் கதவு தட்டப்படும் சப்தம் கேட்டது.

''இந்த நேரத்தில் யார்?'' என்று கேட்டுக் கொண்டு மீனாட்சி அம்மாள் கதவைத் திறந்தாள். அங்கு சங்கரனோடு கூட்டு வியாபாரம் செய்யும் ராமலிங்கம் வந்து நின்று கொண்டிருந்தார்.

குமாரசாமிக்கு மனம் துணுக்குற்றது. இருந்தாலும், ''வாருங்கள், வாருங்கள்! பார்த்து அதிக நாளாகி விட்டது'' என்றார்.

ராமலிங்கம் புன்னகையோடு வந்து அவர் அருகில் கிடந்த நாற்காலியில் அமர்ந்தார்.

''ஏது இந்த நேரத்தில்?'' என்றார்.

''ஒரு முக்கியகாரியமாக வந்திருக்கிறேன்'' என்று ராமலிங்கம் பேச்சை ஆரம்பித்தார்.

''ராமலிங்கம்! நீங்கள் எதற்காக வந்திருக்கிறீர்கள் என்று தெரியும். இனிமேல் சங்கரனும் நானும் ஒன்று சேர முடியாது. இந்தக் கல்யாணச் சந்தடி சாக்கில் ஒன்றாய்ச் சேர்ந்து கொள்ளத் தூது அனுப்பியிருக்கிறானா?'' என்று குமாரசாமி மடமடவென்று பேசினார்.

''நீங்கள் நினைப்பது தவறு. நான் வந்தது அதற்காக அல்ல. அதற்கு நேர்மாறானது என்று கூடச் சொல்லலாம்'' என்றார் ராமலிங்கம் நிதானமாக.

குமாரசாமியின் வேகம் சற்று அடங்கியது. ''என்ன சமாசாரம்?'' என்று கேட்டார்.

''நீங்கள் கோவிந்தராஜனிடம் ஏதாவது பணம் கேட்டதுண்டா?'' என்று கேட்டு விட்டு நிறுத்தினார்.

குமாரசாமி மீனாட்சியின் முகத்தைச் சற்று நோக்கிவிட்டு, ''ஆமாம், நேற்று வயலில் கேட்டேன். பார்க்கலாம் என்றான். இன்று மாலையில் அவன் வீட்டுக்குப் போனேன், கையில் பணமில்லை என்று சொல்லிவிட்டான். குழந்தையின் கலியாண விஷயமாக ரூபாய் பதினையாயிரம் உடனே புரட்ட வேண்டும். என்ன ஆனாலும் ஏற்பாடு செய்த கல்யாணம் நின்று போகக் கூடாது. குடும்பத்தில் தலைக் கல்யாணம் பாருங்கள்'' என்றார்.

''புரிகிறது. ஆனால் கோவிந்தராஜனை இந்தப் பணம் கொடுக்கக் கூடாது என்று சொன்னவன் வேறு யாருமில்லை. உங்கள் தம்பிதான்'' என்றார் ராமலிங்கம்.

மீனாட்சியின் முகம் கண்டிப் போயிற்று. அவளுக்கு வயிற்றைப் புரட்டுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவளால் அதை நம்ப முடியவில்லை.

''உங்கள் குடும்ப விஷயங்களில் எனக்குத் தலையிட உரிமை இல்லை. ஆனால் இன்று மாலையில் நான் வீட்டில்தான் இருந்தேன். நீங்கள் வந்து போனவுடன் கோவிந்தராஜன் வீட்டுக்கு உங்கள் தம்பி வந்து பேசிக் கொண்டிருந்தபோது என் காதிலும் விஷயம் விழுந்தது. மனம் சங்கடப்பட்டதால் உடனே ஓடி வந்தேன்'' என்றார் ராமலிங்கம்.

''இவன் தடுத்து விட்டால் கல்யாணம் நின்று விடுமா? நடப்பது நடந்து தீரும். தெய்வம் வழி செய்யும்.''

''அந்த நம்பிக்கைதான் முக்கியம், குமாரசாமி! தெய்வம் என் மூலமாக வந்தது என்று வைத்துக் கொள்ளுங்கள். இதோ உங்களுக்குத் தேவையான பணம். பதினையாயிரம் ரூபாய் இருக்கிறது. இன்னும் வேண்டுமானால் தருகிறேன். நாளைக்குப் பட்டணத்துக்குப் போக வேண்டிய பணம். ஆனால் அந்த வியாபாரம் அவ்வளவு திருப்திகரமாக இல்லாததால் அதை வேண்டாம் என்று தீர்மானித்து விட்டேன். அவ்வளவுதான். இது நமக்குள் இருக்கட்டும். வெளியில் தெரிய வேண்டாம்'' என்று சொல்லி, பணத்தை எடுத்து ராமலிங்கம் காலியாகக் கிடந்த இன்னொரு நாற்காலியில் வைத்தார்.

பணத்தைக் கண்டதும், குமாரசாமிக்குத் தம் கண்களையே நம்பவே முடியவில்லை.

''மீனாட்சி! பார்த்தாயா?....சரி, ராமலிங்கம் உங்களுக்கு எப்படி உபசாரம் சொல்வதென்றே தெரியவில்லை. எங்களுக்குத் தெய்வம் போல வந்து உதவுகிறீர்கள். அவ்வளவுதான் சொல்லுவேன்.''

''நீங்கள் எதுவும் சொல்ல வேண்டாம். இன்னும் ஒரு வருஷத்துக்குள் திருப்பிக் கொடுத்தால் போதும்'' என்று சொல்லி அத்துடன் பேச்சை முடித்தார் ராமலிங்கம்.

மீனாட்சிக்கு மனம் மிகச் சங்கடப்பட்டது. அவள் கல்யாணம் ஆகிப் புக்ககம் வந்த சமயம் சங்கரன் சிறிய பையனாக இருந்தான். அவனை மைத்துனனாகவே அவள் எண்ணவில்லை. தன் மகனாகவே கருதி வந்தாள். ஆகையால்தான் அவள் மனம் சொல்லொணாத வேதனை அடைந்தது.

*　　　*　　　*

கல்யாணம் மங்களகரமாக நிறைவேறியது. அந்தரங்கத்தில் தங்கள் மகள் செந்தில் நாயகி கல்யாணம் தாம் நினைத்தது போலவே நடந்ததை எண்ணிக் குமாரசாமிக்கு உள்ளுக்குள் மகிழ்ச்சி. ஆனால் மீனாட்சியின் மனம் தான் சங்கரன் செய்கையை நினைத்துச் சங்கடம் அடைந்து கொண்டிருந்தது.

குமாரசாமிக்கும் ஒரு சிறு கவலை இருந்தது. ஆனால் அது கல்யாணக் கடன் பற்றினது தான். அவர் எதிர்பார்த்தபடியே அவருடைய நிலுவைகள் மடமடவென்று பிரிந்து கையில் பதினையாயிரம் அடுத்த மூன்று மாதங்களுக்குள்ளேயே சேர்ந்து விட்டது. மீனாட்சியையும் அழைத்துக் கொண்டு, ராமலிங்கம் வீட்டுக்குப் பணத்தோடு போனார் குமாரசாமி.

ராமலிங்கம் அவ்வளவு சீக்கிரத்தில் பணத்தை எதிர்பார்க்கவில்லைதான்.

''ஏன் இந்த அவசரம்? நான்தான் ஒரு வருஷம் கெடு வைத்திருந்தேனே. என்றைக்கு இருந்தாலும் உங்கள் கையில் பணம் இருப்பதைப் பற்றி எனக்குக் கவலை கிடையாது.''

''அது சரி, ராமலிங்கம். சிரமம் ஒன்றும் இல்லை. பணம் மடமட வென்று வந்து விட்டது. எத்தனையிருந்தாலும் பணத்தைத் திருப்பித் தந்து விட்டால் என்னுடைய கவலை ஒழியும் அல்லவா?''

ராமலிங்கம் தயங்கினார். ''எதிர்பார்த்ததற்கு முன்னாலேயே நீங்கள் கொண்டு வந்ததால் எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. உண்மையில் இது என் பணம் இல்லை, உங்கள் தம்பியின் பணம்தான். அவன் கேட்டுக் கொண்டபடி செந்தில்நாயகி கல்யாணம் எப்படியும் தடைப்படக்கூடாது என்றுதான் அவ்வளவு பெரிய பொய்யைச் சொன்னேன். ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தை நடத்தலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். நான் ஒரே ஒரு பொய்தான் சொன்னேன். என்னை மன்னித்து விடுங்கள். இனி உங்கள் பாடு, உங்கள் தம்பி பாடு'' என்றார்.

குமாரசாமியின் கண்களில் நீர் துளித்தது. அவர் மீனாட்சியின் முகத்தைப் பார்த்தார். மீனாட்சி அவரை அளவு கடந்த திருப்தியுடன் நோக்கினாள்.

# இப்பொழுது

### புது மாதிரியான

# டாய்லெட் பவுடர்

**நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் இருக்க**

இந்தியாவிலே முதன் முதலாக நேர்த்தியான டால்க் உலகப் பிரசித்தி பெற்ற ஜி-11★ (புதிதானது—இறுதியானது) உடன் சேர்க்கப் பட்டிருக்கிறது....இது ஒன்றுதான் நிரூபிக்கப்பட்ட எரிச்சலைத் தராமல் சருமங்களில் கறைகளையும் வியர்வை நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளை நாசம் செய்யும் ரசாயனப் பொருள். இந்த அற்புதமான பவுடர் வேர்க்குரு போன்ற சரும உபாதைகளுக்குத் துரிதமாக நிரந்தர நிவாரண மளிக்கிறது...

மனோகரமான மணமுள்ள இந்த மென்மையான பவுடரை வேலைக்கோ, விளையாட்டுக்கோ, உல்லாசப் பிரயாணத்திற்கோ, விருந்துகளுக்கோ...போகுமுன் உங்கள் மேல் தூவிக் கொள்ளுங்கள். மனோதைரியம் அதிகரிக்கும்; அதிகமாக எல்லோரும் **விரும்புவர்!** ஆடைகளின் மேல் தூவுவதால் சருமத்தில் புண்ணுவதைத் தடுக்கிறது.



Godrej ரிஜிஸ்டர்ட்

## கோத்ரெஜ் டாய்லெட் பவுடர்

**ஜி-11**
கலந்தது

ஜி-11 கலந்த
ஹேர் டானிக்
ஷேவிங் ஸ்டிக்
சிந்தால் ஸோப்

★விஞ்ஞான புத்தகங்களின் விவரணங்கள்கொண்டுள்ள ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபின்) வரலாறுக்கு (ஆங்கிலத்தில் உள்ளது) எழுதுங்கள்:
கோத்ரெஜ் சோப்ஸ் பிரைவேட் லிமிடெட், பம்பாய்-11.



## மேலும் மேலும்
## விற்பனை பெருகிக் கொண்டே போகும் சோப்

நூதனமானது-பெருமையடித்துக் கொள்ள வேண்டியதும் கூட. ஒவ்வொரு வருஷமும் மேலும் மேலும் ஜனங்கள் ஹமாம் சோப்பை உபயோகிக்கிறார்கள். (ஹமாம் சோப் உபயோகிப்போரின் எண்ணிக்கை ஒவ்வொரு வருஷமும் அதிகரித்துக் கொண்டே போகிறது.) இனிய மணம், நன்றாக நுரைத்தல், சிக்கனமான விலை, அதிக நாள் நீடித்தல், ஸ்நானத்திற்குப் பிறகு அற்புதமான மறுமலர்ச்சி. இந்தக் காரணங்களால் ஹமாம் சோப் ஜன ரஞ்சகமாய் உள்ளது. இன்னும் என்ன வேண்டும்?




**மாசிலை கூடிய புதுமலர்ச்சி தருவது—**

டாடாவின்
# ஹமாம்
டாய்லட் சோப்

டாடா ஆயில் மில்ஸ்

இந்தியாவில், இந்திய மூலதனம், நிர்வாகத்தில் தயார் செய்வது.

SISTA'S TOM 3-TAM




சமணத் துறவி ஏழடிப் பட்டத்தில் அமர்ந்தவாறு சித்திராங்க பூபதிக்குச் சொன்ன பேரியாழின் வரலாறு ராஜ சிம்ம பல்லவன் காலத்தில் நடந்தது. ராஜசிம்ம பல்லவன் பட்டத்துக்கு வந்து பதினெட்டு ஆண்டுகள் ஆகியிருந்தன, அந்தச் சம்பவம் நடந்தபோது!

சந்திரசூடன் என்ற மந்திரி குமாரன் தமிழ் நாட்டை விட்டு வலம்புரித் தீவுக்குச் சென்றபோது, ராஜசிம்ம பல்லவன் தனது ஆயுட் காலத்தில் பேரியாழைக் காணும் பாக்கியம் தனக்குக் கிடைக்கும் என்றும், மகேந்திரவர்ம பல்லவன் முதலிய தனது முன்னோர்கள் இசையைப் பற்றிச் செய்து முடித்திருந்த ஆராய்ச்சிகளையெல்லாம் பேரியாழை வைத்துக் கொண்டு தானே தொடர்ந்து நடத்தலாம் என்றும், மனப்பூர்வமாக நம்பினான். ஆனால் நடப்பு வேறு விதமாக இருந்தது.

தமிழ் நாட்டில் மகேந்திரவர்ம பல்லவனும் அவனுடைய மகன் நரசிம்மவர்மனும் எத்தனை பெரும் புகழோடு அரசாண்டார்களோ, அதே போன்ற பெரும் புகழுடன் ராஜசிம்மனும் வீரப் பேரரசனாக விளங்கி இந்த மண்ணுலகிலிருந்து மறைந்தான். சங்கீதத்திலும் மற்ற நுட்பமான கலைகளிலும் அபாரமான தேர்ச்சி பெற்றிருந்ததோடு, வடமொழியிலும் தமிழ் மொழியிலும் அளவு கடந்த ஊக்கம் செலுத்திப் பல புலவர்களையும் ஆதரித்து, வள்ளல் என்ற மகத்தான பெயரோடு மறைந்தான் ராஜசிம்மன். ஆனால் அவனுடைய இறுதி ஆசையாகிய பேரியாழ் ஆராய்ச்சி அவன் காலத்தில் நடவாமல் போயிற்று! காரணம், வலம்புரித் தீவிலிருந்து சந்திரசூடன் யாழை எடுத்துக் கொண்டு தமிழ் நாட்டை நோக்கிப் புறப்பட்டபோது, செந்தமிழ் நாட்டில் ராஜசிம்மன் மறைந்து பரமேசுவரவர்மன் பட்டம் சூடவேண்டிய காலம் வந்து விட்டது! இருபது ஆண்டுகளுக்கு மேல் அற்புதமாக அரசாண்டு வந்த ராஜசிம்மன் மரணம் அடைந்



தான்! அவனுடைய மகன் பரமேசுவரவர்மன் பட்டம் சூடி அரசனாகக் கோலம் தரித்தான்! அவனாவது தந்தையின் கடைசி இலட்சியமாகிய பேரியாழைக் கண்ணால் பார்த்தானா என்றால் அதுவும் இல்லை!

யாருக்கும் தெரியாமல் இரகசியமாக வலம்புரித் தீவிலிருந்து புறப்பட்ட சந்திரசூடன், அந்தச் சிறிய ஓடத்திலே எத்தனையோ பல இடையூறுகளைச் சமாளித்துக் கொண்டு தமிழ் நாட்டுக்கு வந்த போது, பரமேசுவரவர்மனுடைய ஆட்சி நடந்து கொண்டிருந்தது! எப்படி நடந்து கொண்டிருந்தது? எத்தனையோ பல பிரதானிகளின் பகையும், இதுவரை மடங்கி நின்ற பல குறுநில மன்னர்களின் எதிர்ப்புமாகத் தமிழ் நாட்டில் பல்லவர் ஆட்சி ஆடிக்கொண்டிருந்தது! பரமேசுவர வர்மன் ராஜசிம்மனுக்குப் பின்னால் பட்டம் சூடினான் என்பதைத் தவிர, மற்றப்படி ராஜசிம்மனுடைய இலட்சியங்களையெல்லாம் தொடர்ந்து நடத்துவதற்கோ அல்லது அவனுடைய வீர பரம்பரையை நிலைநாட்டுவதற்கோ வேண்டிய துணிவும் சாமர்த்தியமும் அவனிடம் இல்லை. அப்படியே இருந்தாலும் பிறர் அவற்றைப் புரிந்து கொண்டு அடங்கியிருக்கக்கூடிய சூழ்நிலை அப்பொழுது இல்லை! இந்த இக்கட்டான இடைக்காலத்தில் ஐந்தே ஆண்டுகள் அரசாண்டான் பரமேசுவர வர்மன்! இந்த ஐந்து ஆண்டுகளுக்குள் பல்வேறு குழப்பங்களையும், வேதனைகளையும், சிக்கல்களையும் எதிர்த்துச் சமாளிக்க முடியாமல் திணறினான் அவன்! ஆட்சிக்கு வந்து ஐந்தாவது ஆண்டின் முடிவில் பரமேசுவர வர்மன் தனக்குப் பின் சந்ததியின்றி மரணம் அடைந்தான்!

பல்லவர் காலத்தை ''இசைக் காலம்'' என்று புலவர்கள் எல்லாம் போற்றிய போதிலும், அந்த இசைக் காலத்தின் இசையெல்லாம் ராஜசிம்ம பல்லவனுடைய மகனான பரமேசுவர வர்மனின் ஐந்தாண்டு ஆட்சிக் காலத்தில் ஸ்வர சுத்தம் இல்லாமல் குழம்பி நின்றது என்று சொல்ல வேண்டும்! இசையின் இன்னொலி இப்படிக் குழம்புவதற்கு ஆரம்பித்த போதுதான் சந்திரசூடன் பேரியாழோடு தமிழ் நாட்டு மண்ணிலே காலடி எடுத்து வைத்தான்!

ராஜசிம்ம மகாராஜன் மறைந்தான் என்றும் அவனுடைய மகன் பட்டம் சூடிவிட்டான் என்றும் கேள்விப்பட்டதுமே சந்திரசூடனுக்கு இதயத்தில் தீப் பிடித்தது! 'புனிதம் நிறைந்ததும், தனது குருநாதனின் பூஜைக்கு உரியதும், சாருகேசியின் வாஞ்சைச் சின்னமாக விளங்கியதுமான அந்தப் பேரியாழை ஒரு திருடனைப் போல வலம்புரித் தீவிலிருந்து துரோகம் செய்து எடுத்துக் கொண்டு வந்ததின் முதலாவது விளைவு தானா இது!' என்று எண்ணிப் பார்த்தான் சந்திரசூடன்! அந்த எண்ணத்தைத் தாங்க முடியவில்லை அவனால்! ''**ஆகமப் பிரியன்**'' என்றும், ''**சங்கர பக்தன்**'' என்றும், ''**சிவ சூடாமணி**'' என்றும், ''**இரண ஜயன்**'' என்றும் பல பட்டங்கள் ராஜசிம்மனுக்கு இருந்த போதிலும், சந்திரசூடன் சம்பந்தப்பட்டவரை அந்த எல்லாப் பட்டங்களையும் விட அவன் மிகவும் மதித்துப் பணிந்த பட்டம் ஒன்று ராஜசிம்மனுக்கு இருந்தது. அதுதான் ''**வாத்திய வித்தியாதரன்**'' என்ற பட்டம்! இந்தப் பட்டத்தைப் பல பெரியோர்களும், கலைஞர்களும், இசை ஞானியர்களும் சேர்ந்து ராஜசிம்ம மகாராஜனுக்கு வழங்கியிருந்தார்கள். சந்திரசூடன் நினைத்தான்: ''நாம் இப்பொழுது இத்தனை கஷ்டப்பட்டு எடுத்துக் கொண்டு வந்திருக்கும் பேரியாழை மட்டும் நமது ராஜசிம்ம மகாராஜன் பார்த்திருந்தால் எத்தனை மேன்மையாக இருந்திருக்கும்! ஏற்கனவே வீணையில் கைதேர்ந்த இந்த அரசன் நமது பேரியாழையும் பயின்று தனது சங்கீத ஆராய்ச்சிகளை இந்தப் பேரியாழில் நடத்தியிருந்தால், எத்தனை உயர்வாக இருந்திருக்கும்! வாத்திய



வித்தியாதரன் என்ற அந்தப் பட்டத்துக்குப் பொருத்தமான வாத்தியம் அல்லவா இந்தப் பேரியாழ்''— இப்படி நினைத்து மனம் வருந்தினான் சந்திரசூடன்! எத்தனையோ விபரீதங்களையும், துரோகச் செயல்களையும் செய்து இந்தப் பேரியாழோடு தமிழ் நாட்டுக்குத் திரும்பி வந்துங்கூட, அதன் நோக்கம் நிறை வேறாமல் போய் விட்டதே என்று சந்திர சூடன் அன்ன ஆகாரமின்றி ஒரு வார காலம் வருந்தினான்! பரமேசுவர வர்மனுடைய ஆட்சியின் குழப்பங்களுக்கு மத்தியிலே, சந்திரசூடனையும் அவன் கொண்டு வந்துள்ள யாழையும் பற்றி யாருக்கு என்ன கவலை? இத்தனை கஷ்டத்தோடு திரும்பி வந்திருக்கும் தன்னை யார் இனிமேல் புரிந்துகொண்டு வரவேற்கப் போகிறார்கள்? பரமேசுவர வர்மனுடைய அரச சபையில் பேரி யாழுக்கு என்ன இடம்? இதற்காகவா இத்தனை பெரிய பாவம் செய்து விட்டோம்.—இப்படியெல்லாம் எண்ணிய சந்திரசூடன் காஞ்சிமா நகரத்தின் கோட்டைக்குள்ளேயே நுழையவில்லை! அவனோடு வந்த ஒற்றர்களுக்கும் ராஜசிம்மனுடைய மறைவு பெரிய அதிர்ச்சியைக் கொடுத்திருந்ததால், அவர்களும் சந்திரசூடனோடு வாதாடவில்லை. ''எனக்கும் காஞ்சிமா நகருக்கும் இனி எவ்விதமான சம்பந்தமும் இல்லை. வாழ்வில் நான் செய்துவிட்ட மாபெரும் தீவினையின் பயன் என்னைச் சூழ ஆரம்பித்து விட்டது. பேரியாழில் எனக்கு இருந்த மோகத்துக்கு இனிமேல் எவ்விதமான அவசியமோ நியாயமோ கிடையாது!'' இவ்வாறு சொல்லி ஒற்றர்களிடம் விடைபெற்றான் சந்திரசூடன்.

ஒற்றர்களின் தலைவனுக்குச் சந்திரசூடனுடைய நோக்கம் புரியவில்லை. கேட்டான்:

''மந்திரி குமாரரே! இந்த யாழில் உயிரையே வைத்திருந்த நமது ராஜசிம்ம மகாராஜவின் அந்த ஆருயிர், இந்த மண்ணுலகிலிருந்து பிரிந்து விட்டது என்பது உண்மைதான். ஆனால் அந்த உயிர் சாந்தம் அடைய வேண்டும் என்றால் இந்தப் புண்ணிய நாட்டிலே பேரியாழ் எழுந்து ஒலிக்க வேண்டும் அல்லவா? அதை மறந்து விட்டீர்களே?''

இவ்வாறு கூறினான் ஒற்றர் தலைவன். இதைக் கேட்டதும் சந்திரசூடன் மிகுந்த துயரத்தோடு சொன்னான்: ''தம்பி! இந்தப் புனிதமான பேரியாழைப் பாபம் மிகுந்த என்னுடைய கைகளால் வாசிக்க வேண்டும் என்று கருதியா இதை இங்கே கொண்டு வந்தேன்? இல்லவே இல்லை. எந்தப் புனிதமான பேரரசன் இந்த யாழுக்காகக் காத்திருந்தானோ, அந்த வாத்திய வித்தியாதரப் பேரரசனே, இந்த வாத்தியத்தை வாசிக்கும்படி செய்து, என்னுடைய பாபத்துக்கு ஈடேற்றம் காணலாம் என்று எண்ணித்தான் வலம்புரித் தீவிலிருந்து இதோடு புறப்பட்டேன்! ஆனால் இனி அதற்கு வழி இல்லை! என்னுடைய தீவினையை நீக்கி எனக்கு நல்ல கதி காணவேண்டிய கடமை இனி என்னையே சார்ந்தது. அந்தக் கடமை இப்பொழுது என்னுடைய உள்ளத்தை மிகவும் அழுத்திக் கொண்டு கிடக்கிறது. இனிமேல் இந்தப் பாபத்திலிருந்து என்னை விடுவிக்கக் கூடிய புண்ணிய சரீரம் இந்தத் தமிழ் நாட்டில் இல்லவே இல்லை. அத்தகைய புண்ணியம் நீலமேக யாழ்ப்பாணரின் பரம்பரைக்குத்தான் உண்டு!''

இவ்வாறு சொல்லி விட்டு ஒற்றர்களிடமிருந்து அகன்றான் சந்திரசூடன். அதன் பிறகு அவனுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதல்கள் அனந்தம்! நல்வினை, தீவினை என்ற கொள்கையிலே நாட்டம் உள்ளவர்களும், அருக தேவனிடத்தில் அசையாத நம்பிக்கை கொண்டவர்களுமான சமணத் துறவிகளின் சங்கத்திலே சேர்ந்து, தானும் ஒரு துறவியாக மாறி அந்தப் பேரியாழும் கையுமாக எங்கெங்கோ சுற்றி அலைந்தான் சந்திரசூடன். பாண்டிய நாட்டில் வலம்புரித் தீவைப் பற்றிப் பல செய்திகளை விசாரித்து அறிந்து கொண்டான். சாருகேசியின் மரணமும், அவனுடைய குழந்தை படகிலே மிதந்த கதையும் சந்திரசூடனின் இதயத்தைப் பொடிப் பொடியாக்கின. கடைசியில் அந்தப் பெண் குழந்தை எங்கே இருக்கிறது என்று தேடித் திரிந்து கண்டு கொள்ளுகிறவரை சந்திரசூடன் அநுபவித்த துன்பங்கள் கொஞ்சநஞ்சமல்ல! துறவுக் கோலத்தில் இருந்த போதிலும், உள்ளத்தில் ஆசாபாசங்களின் சுழற்சியினால் அவதிப்பட்டுக் கொண்டுதான் இருந்தான் அவன்! அந்தக் குழந்தையைக் கண்டுபிடித்த பிறகாவது சந்திரசூடனுடைய மனக் குழப்பம் தீர்ந்ததா என்றால், அதுவும் இல்லை! அந்தச் சஞ்சலம் அதிகமாயிற்றே தவிரக் குறைகிற வழியாக இல்லை. அப்பொழுது நாட்டின் நிலைமையும், சம்பவங்களின் பிணைப்பும் அப்படி இருந்தன!

ஆமாம்; சந்திரசூடன் சமணத் துறவியின் கோலத்தில் யாழை வைத்துக் கொண்டு நாடெங்கும் சுற்றி அலைந்து, தனது பெண் குழந்தையைக் கண்டுபிடித்தபோதிலும், தான் யார் என்றும் தனது கதை என்ன என்றும், யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியவில்லை! ஏனென்றால், அதற்குள் தமிழ் நாட்டில் அரசியற் குழப்பங்கள் அத்தனை தூரம் அதிகரித்து விட்டிருந்தன! சந்திரசூடனுடைய சொந்த ஊராகிய கொடும்பாளூரில் வேளிர் குடும்பத்திலும் பல மாறுபாடுகள் ஏற்பட்டு விட்டன! பல்லவ அரசாட்சி பரமேசுவரவர்மனுக்குப் பிறகு நந்திவர்மன் என்ற சிறுவனுடைய உரிமையாகி, அதன் விளைவாக எதிர்ப்பும் வஞ்சகச் சூழ்ச்சிகளும் சிலந்தியின் வலையைப் போலத் தமிழ் நாட்டு அரசியலைச் சூழ்ந்து பின்னிக் கொண்டு நின்றன! இந்தப் பின்னலுக்கு மத்தியிலேதான் சித்தண்ண வாசல் மலையின் ஏழடிப் பட்டத்தில் சமணத் துறவி தமது கதையை முடித்துவிட்டு, சித்திராங்க பூபதியோடு நடக்க ஆரம்பித்தார்! சித்திராங்க பூபதியோ தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும், என்ன ஆனார்கள் என்று சொல்லும்படி சமணத் துறவியைக் கேட்டான்.

## ஆறாம் அத்தியாயம்

# சூரியோதயம்

ஏழடிப் பட்டத்திலிருந்து புறப்பட்ட சமணத் துறவி மிக்க கவலையோடு சித்திராங்க பூபதியுடம் பேச ஆரம்பித்தார். தரங்கவல்லியும் பாண்டியகுமாரனும் என்ன ஆனார்கள் என்பதைத் தொடர்ந்து சொன்னார் அவர்:

பாண்டிய அரச குமாரன் எப்படியும் பேரியாழை மீண்டும் வலம்புரித் தீவுக்குக் கொண்டு வந்து விடவேண்டும் என்று கருதி, அதற்காகச் செய்த முயற்சிகள் மிகப் பல! சந்திர சூடனைத் தேடி எத்தனையோ ஒற்றர்களைப் பல திசைகளிலும் அனுப்பினான். ராஜசிம்ம பல்லவனுடைய அரச சபையிலே வலம்புரித் தீவின் பேரியாழ் இருக்கிறதா என்று இரகசியமாகத் தெரிந்து வரும்படி மிகவும் சாமர்த்தியசாலிகளான சில தூதர்கள் வலம்புரித் தீவிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்து முயன்று பார்த்தார்கள். பிறகு வலம்புரித்தீவின் அரசகுடும்பத்திலிருந்து சில பிரதானிகள் தமிழ் நாட்டுக்கு வந்து ஆராய்ந்தனர். ஆனால் பெரிய விந்தை என்னவென்றால், வலம்புரியிலிருந்து இங்கே வந்த யாரும் மீண்டும் தங்கள் தீவுக்குத் திரும்பிச் செல்லவே இல்லை! இந்த மர்மம் பாண்டிய குமாரனையும் தரங்கவல்லியையும் அளவு கடந்த வேதனையில் ஆழ்த்தியது. தரங்கவல்லியின் தந்தையாகிய பேரரசர் இந்தத் துன்பங்களையெல்லாம் அந்தத் தள்ளாத வயதில் தாங்க முடியாமல் பெரும் வேதனையில் மாண்டுபோனார்!

இந் நிலையில், ராஜசிம்ம பல்லவன் மறைந்து, அவனுக்குப் பிறகு பரமேசுவர வர்மன் பட்டத்துக்கு வந்தான். அரசாட்சி மாறுதலில் பல சிக்கல்கள் இருந்தன. வலம்புரித் தீவின் பேரியாழைப் பற்றி யாருக்கு என்ன கவலை? தெற்கே பாண்டிய அரசர்கள் தங்கள் ஆட்சியை விரிவாக்கிக் கொண்டு வந்



# 'அனஸின்'

## விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகளின் ஒரு கலப்பு.



'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பீன்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் விதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்குவதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.




**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

தார்கள். கோச்சடையன் என்ற பாண்டிய மன்னன் மறைந்து அவனுடைய புத்திரர்களில் ஒருவனுன மாறவர்மன் அரசாட்சியை ஏற்றுன். இப்பொழுது அவனுடைய ஆட்சிதான் ஓங்கி நிற்கிறது. நமது பல்லவ சாம்ராஜ்யத்திலோ பரமேசுவரவர்மன் ஐந்து ஆண்டுகள் தான் அரசாண்டான். அதற்குள் அவன் மறைந்தான். அவனுக்குச் சந்ததியில்லை! இந்த நிலையில் உதயசந்திரனின் முயற்சியினுல் நந்திவர்மன் இப்பொழுது பட்டம் சூடியிருக்கிறுன். பட்டம் சூடும்போது சிறுவனுக விளங்கிய இந்த அரசன் இன்று அரசியல் ஞானமும், படை பலமும் மிகுந்து நிற்கிறுன். உதய சந்திரனுடைய உதவியும் முத்தரையர்களின் உதவியும் அவனுக்குப் பக்க பலமாக நிற்கின்றன. எந்த எதிர்ப்புக்களையும் நன்றுகச் சமாளித்து விடுவான் என்றே நாங்கள் அனைவரும் நம்புகிறேம்! ஆனுலும் எதிரியாகிய சித்திர மாயனுக்கு இப்பொழுது வீரவிக்கிரமன் என்ற விடுதித் தலைவனுடைய சகாயத்தினுல், கொடும்பாளூர் வேளிர்களின் உதவியும், மதுரைப் பாண்டியர்களின் உதவியும்சேர்ந்துகிடைத்திருக்கின்றன! இந்த நிலைமையில் வெற்றி தோல்வியை யாரால் எப்படி நிர்ணயித்துச் சொல்ல முடியும்? வலம்புரித்தீவை இரண்டு கட்சியார்களுமே தங்களுடைய இரகசியப் படைத்தளமாக உபயோகித்துக் கொள்ள முயற்சி செய்கிறுர்கள்! இந்த முயற்சியின் விளைவு என்ன ஆகும் என்பது நீங்கள் செய்கிற தீர்மானத்தைப் பொறுத்துத்தான் இருக்கிறது!'' என்றுர் துறவி, சிரித்துக் கொண்டே.

''நான் தீர்மானிப்பது இருக்கட்டும்! வலம்புரிப் பேரரசரின் மரணத்துக்குப் பிறகு தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும் என்ன ஆனுர்கள்? ஒருவேளை அவர்களும் இப்பொழுது பாண்டிய நாட்டுக்கு வந்து விட்டார்களோ?'' என்று கேட்டான் பூபதி.

''இளவரசே! வலம்புரிப் பேரரசர் மரணம் அடைந்த பிறகு வலம்புரித் தீவின் நிர்வாகத்தில் சோகத்திரை படர்ந்தது. பேரியாழ் ஒன்றிலேயே கண்ணும் கருத்துமாக இருந்த தரங்கவல்லிக்கு வாழ்க்கையில் விரக்தி உண்டாகி விட்டது. பாண்டிய குமாரனே இல்லறத்திலேயே நாட்டம் இல்லாதவனைப் போலத் தாமரையிலைத் தண்ணீராக உருள ஆரம்பித்தான். பேரியாழ் வராதவரை தான் உயிரோடு இருப்பதே பூமிக்குப் பாரந்தான் என்ற முறையில் மனம் வருந்தினுன் பாண்டிய குமாரன்! வாழ்க்கை இப்படி ஒரே விரக்தியில் கழிந்த போது தான் ஒருநாள், தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும் அரச நிர்வாகத்தை அவர்களுடைய தாயாதிக் குடும்பத்தாராகிய உங்களுடைய அன்னையிடம் ஒப்படைத்து விட்டு, அரச மாளிகையிலிருந்து வெளியேறினுர்கள். உங்களுடைய அன்னையின் நிலை தரும சங்கடமாக இருந்தது. ஏனென்றுல், நீங்கள் பிறந்தபோது தரங்கவல்லிக்குக் கல்யாணமாகி யிருக்கவில்லை. தரங்கவல்லியின் தந்தைக்கோ ஆண் சந்ததியில்லை. எனவே அந்தக் காலத்திலேயே அரச



உரிமை தாயாதிகளாகிய உங்களுக்குத் தான் போய்ச் சேரும் என்று மக்கள் எல்லாரும் பேசிக் கொண்டார்கள். ஆனுல் உங்கள் குடும்பத்தாருக்கோ அரச நிர்வாகத்தில் எப்பொழுதுமே விருப்பம் இல்லாமல் இருந்தது. பேரியாழ் மறைந்த பிறகோ என்றுல், வலம்புரி நிர்வாகத்தைச் சூழ்ந்து நின்ற தெய்வசாபம் எல்லாரையுமே அச்சப்படுத்தியது! வலம்புரிச் சிம்மாசனத்தின்மீது உங்கள் அன்னைக்குக் கொஞ்சங்கூட விருப்பம் இல்லை! எனவே பாண்டிய குமாரன் தரங்கவல்லியைத் திருமணம் செய்து கொண்டு அந்தத் தீவிலேயே தங்கி விடுவதாகத் தீர்மானித்த

போது, உங்களுடைய குடும்பத்தாருக்கு ஒரு நிம்மதி ஏற்பட்டிருந்தது. ஆனால் அந்த நிம்மதியை அதிக நாள் நீடிக்கவிடாமல், பாண்டிய குமாரனும் தரங்கவல்லியும் உலகையே வெறுத்து அரச மாளிகையிலிருந்து வெளியேற முற்பட்டதும், உங்கள் அன்னையும் உங்களுடைய உறவினர்களும் மிகவும் மனம்வருந்தினார்கள். எத்தனையோ சொல்லித் தடுக்கமுயன்றார்கள். ஆனால் தரங்கவல்லி எவருடைய வார்த்தைக்கும் செவி சாய்க்கவில்லை.



அரச போகத்திலே மிதந்து கொண்டு ஆனந்தத்திலே செல்லவேண்டிய தரங்கவல்லியும் பாண்டிய குமாரனும், உலகையே வெறுத்தவர்களாகி அரச மாளிகையிலிருந்து வெளியேறினார்கள். அரச நிர்வாகம் உங்கள் அன்னையிடம் ஒப்படைக்கப் பட்டது. பழைய அமைச்சராகிய மந்திரநாயகம் தரங்கவல்லியின் விரக்தியைக் கண்டு மனம் நொந்து கண்ணீர்வடித்தார்! ஆனால்யாராலும் தரங்கவல்லியின் தீர்மானத்தை மாற்ற இயலவில்லை!'' என்று கூறிவிட்டுச் சித்திராங்க பூபதியைப் பார்த்தார் சமணத் துறவி. அவன் கதையைக் கேட்கும் ஆவலில் மௌனமாயிருந்தான்.

சமணத் துறவி மேலும் கதையைத் தொடர்ந்தார்: ''இளவரசே! சிந்தியுங்கள்! சந்திரருடன் செய்த காரியம் எத்தனை பெரிய விபரீதங்களிலே கொண்டு போய் விட்டு விட்டது. பார்த்தீர்களா? பேரியாழ் என்றால் வலம்புரித் தீவில் என்னென்ன உணர்ச்சிகள் உண்டாகும் என்பது இப்பொழுது உங்களுக்குத் தெரிகிறதா? நீங்களும் இந்த யாழைத் தொடர்ந்து தமிழ் நாட்டுக்குப் புறப்படுவதாகப் பிடிவாதம் பிடித்தீர்களே! உங்கள் அன்னையின் உள்ளம் அத்தனை தூரம் துடி துடித்ததில் என்ன ஆச்சரியம் இருக்கிறது! சொல்லுங்கள்! அத்தனை கண்டிப்போடு உங்களிடம் உங்கள் அன்னை மூன்று உறுதிமொழிகளை வாங்கிக் கொண்டதில்தவறுஇல்லையே! இயல்புதானே?'' இவ்வாறு சொல்லிக் கொண்டே மலைச் சரிவில் ஒரு மகிழ மரத்தின் அடியில் நின்று தொலைவிலே பார்த்தார் சமணத் துறவி. அப்படியே கையைச் சுடக்குப் போட்ட வண்ணம் அருகில் நின்ற சித்திராங்க பூபதியின் பக்கம் திரும்பினார்.

''சூரியோதயம் ஆனதும் கதையை நிறுத்தி விடுவேன் என்று சொன்னேனல்லவா? உங்களுக்குச் சொல்ல வேண்டிய முக்கியமான விவரங்கள் இன்னும் சில உண்டு என்பதை அறிவேன். ஆனாலும் அவற்றை இப்பொழுது நான் சொல்வதற்கில்லை. அதன் காரணம் என்ன என்று இங்கே வந்து இந்த இடத்திலே நின்று பாருங்கள்! வேகமாக நடக்காதீர்கள். கால் சறுக்கிவிடப் போகிறது!'' என்று சொல்லிச் சிரித்தார் சமணத் துறவி. (தொடரும்)

## ''பலே, பட்டாசு!''



# மகத்தான விலைக் குறைவு

மிக நவீனமான 1956–ம் வருஷ ஸ்பெஷல் மாடல்கள். மிக மிக நேர்த்தியான மெஷின் & டிசைன் ஒவ்வொன்றும் 3 வருஷங்கள் உத்திரவாதம்

இலவசம்: ஏதாவது மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு அலாரம் டைம்பீஸும், ஒரு கடிகார ஆர்டருக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் இனாம்.



**நெ. 1181 வாட்டர் புரூப் 10½ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 36/- |
| 17 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 56/- |
| 21 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 64/- |



**நெ. 1183 வளைவு வடிவம் 7¾ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் பிரைட் க்ரோம் | 32/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 38/- |
| 17 | ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) | 63/- |



**நெ. 1185 தட்டை வடிவம் 10½ சைஸ்**

| | | |
|---|---|---|
| 5 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 19/- |
| 5 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு C/S | 21/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 28/- |
| 17 | ஜுவல்ஸ் க்ரோம் கேஸ் | 37/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 42/- |



**நெ. 1186 லேடீஸ் 5¼ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் பின் லீவர் R/G | 45/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 48/- |
| 17 | ஜுவல்ஸ் ,, (20 மைக்ரான்) | 65/- |
| 21 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



**நெ. 1182 வாட்டர் புரூப் 8¾ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 44/- |
| 17 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 | ஜுவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 58/- |
| 21 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



**நெ. 1184 டோனே வடிவம் 7¾ சைஸ்**

| | | |
|---|---|---|
| 15 | ஜுவல்ஸ் பிரைட் க்ரோம் | 34/- |
| 15 | ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | 40/- |
| 17 | ஜுவல்ஸ் ரோ. கோ. (லீவர்) | 65/- |



**பாக்கெட் கடிகாரம்**

ஜுவல் உள்ளது 18/- — 15 ஜுவல்ஸ் 27/-

**அலாரம் டைம்பீஸ்**

| | | |
|---|---|---|
| 3" டயல் அலாரம் | ... | 15/- |
| ஸ்மித் அலாரம் 4½" டயல் | ... | 18/- |
| உயர்தர அலாரம் 5" டயல் | ... | 22/- |
| டபுள் பெல் 5" டயல் | ... | 18/- |

## PIONEER WATCH CO., POST BOX NO. 11428, CALCUTTA-6







## அதிசயக் குளவிகள்!

குளவிகள் தம் முட்டைகளைப் பல வகைகளில் பத்திரப் படுத்துகின்றன. அவற்றின் முட்டைகளை விரோதிகளின் கண்களில் படாமல் பத்திரப் படுத்தி வைக்கக் கடவுள் அவற்றுக்கு விசேஷ அறிவைத் தந்திருக்கிறார். முதலில் அவை கூட்டை எங்கு கட்டுவது என்று சுற்றி அலைந்து முடிவு செய்யும். பிறகு வழவழப்பான களிமண்ணை எடுத்து வந்து சிறிய குடம் போல் ஒரு மண் கூட்டைக் கட்டி விடும். கூடு காய்ந்த பிறகு குஞ்சுகளுக்கு ஆகாரமாக எட்டுக்கால் பூச்சிகளைத் தேடிப் பிடித்து வந்து அவற்றை அந்தக் கூட்டுக்குள் திணித்து விடும். பிறகு அந்தக் கூட்டுக்குள் முட்டைகளை வைத்துக் கூட்டின் வாயைக் களி மண்ணால் அடைத்துவிடும். நாளடைவில் முட்டைகள் குஞ்சு பொரித்து, எட்டுக்கால் பூச்சியைத் தின்று, பெரிய குளவிகளாக மாறிக் கூட்டின் வாயைத் திறந்து கொண்டு வெளியே வந்து விடும். ''சின்னக் குளவிதானே? அதற்கு என்ன தெரியும்?'' என்று நாம் அலட்சியமாக நினைக்கிறோமல்லவா? அதற்குக் கூடு கட்டும் அறிவைக் கடவுள் கொடுத்திருக்கிறார் என்பதை அறியும்போது வியப்பாக இருக்கிறது. மனிதன் ஒருவனுக்குத்தான் சகல அறிவும் இருக்கிறது என்று நாம் கர்வப் படுகிறோம். ஆனால் சின்னஞ் சிறு ஜீவராசிகளும் நம்மை மிஞ்சி விடுகின்றன!










## 8. எதிர்பாராத விடுதலை!

விஜயனை ஒழித்துக் கட்டிவிடுவது என்று அவன் தாயார் சொன்ன போது மல்லிகா கதி கலங்கினாள். ஆனால் தாயாரின் ஆசை வார்த்தைகள் அவளை நிலை தடுமாறச் செய்தன. கடைசியில் தாயின் சதி வேலைகளுக்கும் மல்லிகா உடந்தையானாள்! மனிதர்களின் சித்தம் ஒரு புறமானால், கடவுளின் சித்தம் வேறொரு புறத்திலிருக்குமல்லவா?

குழந்தை விஜயன் ஒன்றரை வயதுக் குழந்தையாகத் தொட்டிலில் தூங்கிக் கொண்டிருக்கையில் அந்தச் சதி வேலை நடந்தது. சில மூலிகைகளின் சாற்றையெடுத்து, அக் குழந்தைக்குக் கொடுக்கும் காரியத்தை மல்லிகாவின் தாயே ஏற்றுக் கொண்டாள். எத்தகைய கொடூர நெஞ்சம் அவளுக்கு!

அன்று முழுவதும் மல்லிகா மூர்ச்சையுற்றுக் கிடந்தாள். சதியின் பயங்கரம் அவளைப் பாடாகப் படுத்தியது!

அவள் கண் விழித்துப் பார்க்கையில், குழந்தை உயிருடனேயே இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டாள்! ஆனால் ஆயுட் காலத்தின் வலிமையைப் பெற்றிருந்த அக் குழந்தையின் இரண்டு சக்திகளை மட்டிலும் தான் அம் மூலிகைகளினால் பறித்துக் கொள்ள முடிந்தது!

சிறிது காலத்துக்குப்பின் அக்குழந்தை ஊமையாகி விட்டது என்பதை அறிந்தவுடன், அவர்கள் அதைப் பற்றிக் கவலை கொள்ளவில்லை. மல்லிகாவின் தாயும் இறந்து போய் விட்டாள். ஆயினும், அவளால் விதைக்கப்பட்டிருந்த குரோத விதை, மகளின் இதயத்துக்குள் நன்றாகப் பயிராகிவிட்டது.

ஒருநாள் அரச சபைக்கு வந்திருந்த புலவர், விஜயனே அரசனாவானென்று ரேகை சாஸ்திரங்களின் மூலம் கூறினாரல்லவா? அப்பொழுது அவர்—ராணி மல்லிகாவின் மனத்திலிருந்த எண்ணங்களைத்தான் உடைத்தெறிந்தார்! அதன் விளைவுகள்தான், ராணி மூர்ச்சையடைவதற்கும் காரணமாயிற்று.

இவ்வாறான பழைய எண்ணச் சுழல்களிடையே உள்ளம் வெதும்பிக் கொண்டிருந்த மல்லிகா, திடுக்குற்றவாறு எழுந்திருக்கும்படி நேரிட்டது. ஏனென்றால், அப்பொழுது அரசர் விக்கிராந்தன் அங்கே வந்திருந்தார்!

* * *

அரச சபையின் அரியணையில் இருக்கவேண்டிய விஜயன், அவ் வரக்கர்களால் நரபலி பீடத்தின்மீது ஏற்றப்பட்டானல்லவா? அதன் பின்னர், அவன் தன் ஆயுட்காலத்தின் எண்ணங்களை யெல்லாம் போக்கிக் கொண்டு விட்டான். கண்களை இறுக மூடியவாறு, தன் கழுத்தின்மீது விழப்போகும் கத்தியை வினாடிக்கு வினாடி எதிர்பார்த்த வண்ணம் இருந்தான். அம்மாதிரி நேரம் கடந்து கொண்டிருந்ததுதான் அவனுக்கு நரக வேதனையாக இருந்தது.

ராஜகுமாரனின் தலைக்கு நேரே வாளைத் தூக்கிப் பிடித்த அசுரன், தன் கையின் வேகத்துக்குப் பெரும் பலத்தையும் கூட வரவழைத்துக் கொண்டிருந்தான். ஆனால், அப்பொழுது ஒரு அதிசயமான சம்பவமே நிகழ்ந்தது!

கத்தியைத் தூக்கிப் பிடித்திருந்த அசுரன், அதை ஓங்கியவாறே நின்று கொண்டிருக்கும்படியாகிவிட்டது. பின்னர், அதைப் பயபக்தியுடன்



# ஊமை ராஜா

துரோணன்

எடுத்துக்கொண்டு, திரும்பியும் ஓடினான்! ஏனென்றால், அந்தத் தெய்வச் சிலையின் சமீபமாக நின்று கொண்டிருந்த ஒருவன், திடீரென்று பயங்கரமான கூச்சல்களை விடுவித்தபடியே கூத்தாடத் தொடங்கினான்! அவர்களது குல தெய்வமான அத் தேவதை, அப்பொழுது அவ்வசுரனின் வாய் உதவியைக் கொண்டு கூச்சலிட்டது! பின்னர், ''பக்தர்களா! நீங்கள் இப்போது எனக்காகச் செய்யும் பணியை நிறுத்துங்கள்! இந்தப் பணியினால் எனக்குத் திருப்தியில்லை!'' என்று கூறியது.

அசுரர் தலைவன், ''தேவி! தங்களுக்கு ஏன் திருப்தியில்லை? நாங்கள் என்ன குறை செய்து விட்டோம்?'' என்று கேட்டான் பயத்துடன்.

அத் தெய்வம் 'கடகட' வென்று ஒரு பயங்கரமான சிரிப்பை விடுத்தது. பின்னர், ''குறையா? உங்களது மதியற்ற தன்மைதான் எனது குறை! இவ்வளவு நாட்களாகப் பசித் தாகத்துடன் காத்திருக்கும் எனக்கு, இந்த ஊமை வாலிபனையா பலி கொடுக்கிறீர்கள்? பேஷ்!'' என்றது. அடுத்த கணமே அவர்கள் எல்லோரும் வியப்புடன் திரும்பி ராஜகுமாரனை நோக்கினர். அவன் இன்னமும் கண்களை மூடியவாறேதான் பீடத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான்!

அசுரர் தலைவன், தெய்வத்தின் பக்கமாகத் திரும்பி, ''தாயே! எங்களை மன்னியுங்கள். இனி, கூடிய சீக்கிரமே தங்களுக்கு நல்ல காணிக்கையாக அளிக்கிறோம்'' என்றான் வணக்கத்துடன். அத் தெய்வம் மீண்டும் கூச்சலிட்டு விட்டு ஓய்ந்தது.



இச்சம்பவங்களைப் பற்றி ராஜகுமாரனுக்கு ஒன்றுமே தெரியாது. ஆனால், பலரும் ஒன்றாகக் கூடி அவனைக் கேள்விகள் கேட்பது போலிருந்தது. அவன் பதில் கூற முடியாமலே திணறிய பின், கூச்சலிட்டான். அதில், ''பே—மே—பே'' யென்ற பரிதாபமான ஒலிதான் தொனித்தது!

அவனுக்குப் பின்புறத்திலிருந்த சில அசுரர்கள், பலமாகக் கைகளைத் தட்டியவண்ணம் அவனைக் கூப்பிட்டனர். அவன் திரும்பவேயில்லை!

அசுரர்கள் வியப்புடன் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்துக் கொண்டனர். பின்னர், அவனைக் கையைப் பிடித்து அழைத்தவாறு கிளம்பினர். ராஜகுமாரனின் வியப்பு பன்மடங்காயிற்று. தன்னைப் பலிகொடுக்காமல், இவ்வளவு காருண்யத்துடன் ஏன் அழைத்துச் செல்லுகிறார்கள் என்ற இரகசியம் அவனுக்குச் சிறிதும் விளங்கவேயில்லை!

அவர்கள் கூட்டமாகக் கூடி ராஜகுமாரனை எங்கெங்கோ அழைத்துச் சென்றனர். இப்போது—வழிப் பாதைகளெல்லாம், அவன் ஏற்கனவே வந்த வழியாகவே தெரியவில்லை. இடையிடையே இருள் நிறைந்த குகைகள் நிறைய வந்து கொண்டிருந்தன. ஏதோவொரு பாதாளச் சுரங்கத்தினின்றும் மேலேறி வருவது போன்றும் இருந்தது. முதல் வாயிலில் மிக அகலமாகத் தென்பட்ட அக் குகை, போகப்போகக் குறுகிக் கொண்டும், அநேகம் வளைவுகளைக் கொண்டும் இருந்தது. பின்னரோ, சுவர் போன்ற ஒரு பாகமும் தென்பட்டது. அதன் சமீபம் வந்ததும், நாலைந்து அசுரர்கள் ஒன்றாகக் கூடி, ஒரு பெரும் பாறையைப் புரட்டினார்கள். அதன் மேல் நோக்கி யிருந்த வாய்ப்புறத்தின் வழியாக வெளிச்சம் தெரிந்தது!

அசுரர்கள் பின்தங்கியபடியே, அவனைப் பார்த்து, வெளியே செல்லுமாறு சைகை யிட்டனர். வியப்பின் மிகுதியுடன் விஜயன் அவ்வாயிலைக் கடந்து மேலேறி நின்றான். அடுத்த கணமே ஒரு பெரும் கற்

பாறை, அவன் வந்த வாயிலை அடைத்துக் கொண்டு விட்டது! ராஜகுமாரனுக்கு விடுதலையே கிடைத்து விட்டது!

நிசி வேளை. அரண்மனை ஜாமத்து மணியடித்து அரை நாழிகை யிருக்கும். அரண்மனையை யடுத்த அடர்த்தியான மாந்தோப்பில் மங்கலான நிலவொளியில் நால்வர் உட்கார்ந்திருந்தனர். அவர்களில் ஒருவன் துணிப் பையை அவிழ்த்து விட்டுக் கொட்டினான். கலகலவென்று ஓசையுடன் அதிலிருந்த நாணயங்களெல்லாம் விழுந்து உருண்டன. இந்தக் காட்சியை ஓர் மரத்தடியில் ஒரு முக்காடிட்ட உருவம் மறைந்திருந்து உற்றுக் கவனித்தது. (தொடரும்)

# உலோகத்தின் ராஜா!

இரும்பில் எப்படித் துருப்பிடிக்கிறது? கட்டை எப்படிக் கரியாக மாறுகிறது? சமுத்திர ஜலத்திலிருந்து எப்படி உப்பு எடுக்கிறார்கள்? பூதக்கண்ணாடி ஏன் உருவத்தைப் பெரிதாகக் காட்டுகிறது?

சோப்பு எவ்வாறு அழுக்கைப் போக்குகிறது?

இம்மாதிரி யெல்லாம் நாம் யோசிப்பது உண்டல்லவா? இவற்றை ஆராய்ந்து தெரிந்து கொள்ள நாம் வெளியூர்களுக்குப் போக வேண்டியதில்லை. நம் வீட்டில் இருந்தபடியே பல விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியும். காகிதம், கண்ணாடி, ஆணி, உப்பு, கரி இவை யாவும் நம் வீட்டிலேயே இருக்கின்றன. இவைகளை ஒவ்வொன்றாக நாமே ஆராய்ந்து பார்க்கலாம். நாமே விஞ்ஞானிகள் ஆகலாம். ஒரு உப்பைக் கையில் எடுத்துப்பார்! உப்பின் உருவத்தில் பலவிதமான வேறுபாடுகள் உண்டு. அதன் கண்ணாடிபோன்ற கூர்மையான ஓரங்களும் பட்டையான அமைப்புகளும் வைரம் போல் நன்கு பிரகாசிக்கின்றன!



ஒரு காகிதத்தில் என்னவெல்லாம் அடங்கி இருக்கின்றன தெரியுமா? ஆயிரக்கணக்கான தாவர அணுக்கள் ஒரு சிறு காகிதத்துண்டில் அடங்கி யிருக்கின்றன. நாம் காகிதம் செய்யலாம். உப்பு செய்யலாம். ரப்பர் செய்யலாம் சிமெண்டும் இரும்பும் செய்யலாம். நூல் நூற்கலாம்; துணி நெய்யலாம். நம் முன்னோர்கள் கல்லிலிருந்தும், மண்ணிலிருந்தும், மரங்களிலிருந்தும், மிருகங்களிலிருந்தும், கடலிலிருந்தும் பல அற்புதங்களைக் கண்டு பிடித்தார்கள். பல உபயோகமுள்ள பொருள்களைக் கண்டு பிடித்தார்கள். நாமும் அம் மாதிரி ஏன் செய்யக் கூடாது?

நம் வீட்டில் உள்ள இரும்புச் சாமான்களை முதலில் கண்டு பிடிப்போம். முதலில் ஒரு காகிதமும் பென்ஸிலும் எடுத்துக் கொள்வோம். பிறகு இரும்பைத் துப்பறியும் ஒரு கருவியைக் கொண்டு வருவோம். இரும்பைத் துப்பறியும் கருவி என்றால் என்ன தெரியுமா? 'மேக்னெட்' என்னும் காந்த சக்தி படைத்த ஒரு பொருள். குண்டூசி, கொண்டை ஊசி, ஆணி, கரண்டி முதலியவை இரும்பாக இருந்தால் அவற்றைக் காந்தத்தால் கண்டு பிடித்து விடலாம். காந்தத்தை அவற்றின் பக்கத்தில் கொண்டு போனால் காந்தத்தின் சக்தி அவற்றைத் தன்னிடம் இழுக்கும். இழுக்கவில்லை என்றால் அந்தப் பொருள்களில் இரும்பு இல்லை என்று தெரிந்து கொள்ளலாம். இப்படியே ஒவ்வொன்றாகக் காந்தம் வைத்துப் பார்த்து இரும்புச் சாமான்களை ஒரு ஜாபிதா தயார் செய்து கொள்ளலாம். இந்த இரும்புச்சாமான்களில் பல எஃகு சாமானுகவும் இருக்கலாம். அது எப்படி என்பதைப் பிறகு தெரிந்து கொள்வோம்.





பேனாக்கத்தி கூர்மையாக இருக்கிறது. அதை உடையாமல் வளைக்க முடியும். சுத்தியல் சிறிதுதான். ஆனால் அதைக் கொண்டு பல பெரிய பொருள்களை உடைத்து விடுகிறோம். ஆனால் சுத்தியல் மட்டும் உடைவதில்லை. இதிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்ன? இரும்புக்கு வலிமை அதிகம். அதை வளைக்க முடியும். தகடாக்க முடியும். குழாய்கள் செய்யலாம். ஆணி செய்யலாம். கம்பிகள் செய்யலாம். பல உருவங்களில் அதை இஷ்டம் போல் மாற்றி அமைக்கலாம். இரும்பு பல விதங்களில் நமக்குப் பயன்படுகிறது. இரும்புக்கு உலோகத்தின் ராஜா என்று ஒரு பெயர் உண்டு. அது உண்மை தானே?



# படித்துப் பாருங்கள்

## பாரதி நூல்கள்

தமிழ் மக்களின் தவப்பயனாகத் தோன்றித் தமிழ் மொழிக்கும் தமிழகத்துக்கும் தம் கவிதா சக்தியினால் புத்துயிரும் புது வாழ்வும் தந்த மகாகவி பாரதியின் கவிதைகளும், கட்டுரைகளும் வசன காவியங்களும் நூல் வடிவத்தில் வந்து தமிழ்கூறும் நல்லுலகமெல்லாம் நன்கு பரவியிருக்கின்றன.

இப்பொழுது மதுரை, பாரதி புத்தக நிலையத்தார் அமர கவியின் இலக்கியச் செல்வங்களைத் தனித் தனிப் புத்தகமாக வெளியிட்டிருக்கின்றனர்.

'பாஞ்சாலி சபதம்' விலை: ரூ. 1—12—0 : 'கண்ணன் பாட்டு' விலை : ரூ. 1—0—0 : 'குயில்' விலை : அணா 0—8—0 ; 'தேசிய கீதங்கள்' விலை : ரூ. 1—0—0.

தத்துவம் : "யாரைத் தொழுவது?" "சக்தி தர்மம்" முதலிய அறிவுக் கருவூலங்களென்று சொல்லத் தகுந்த அற்புதக் கட்டுரைத் தொகுதி இது. விலை : ரூ. 2.

கலைகள் : பாரதியாரின் வசன நடையின் அழகை எடுத்துக்காட்டும் கட்டுரைகள் பல அடங்கியிருக்கின்றன இந்நூலில். விலை: ரூ. 2.

பகவத் கீதை : போர்க்களத்தில் பார்த்தனுக்குச் சாரத்தியம் செய்த கண்ணன், அவன் மனச் சோர்வைப் போக்கும் பொருட்டுச் செய்த மகா உபதேசமான கீதையை மகாகவி தமக்கே உரிய எளிய நடையில் வசனமாக எழுதியிருக்கிறார். விலை : ரூ. 2-4-0.

மாதர் : "மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்" என்று முழக்கிய பாரதியார் மாதர்களுக்கு என்று எழுதிய நூல் இது. விலை : ரூ. 1—4—0.

சமூகம் : அடிமை வாழ்வில் அகப்பட்டு அல்லல்பட்டு உழன்ற பாரத சமுதாயம் நல்வாழ்வு வாழக் கவிஞர் பெருமான் பல கட்டுரைகள் எழுதினார். அந்தத் தொகுதியே இது. விலை : ரூ. 3—0—0.

தராசு : பொதுவாகப் பல விஷயங்களைப் பற்றி மிகவும் சுவாரஸ்யமாகக் கவிஞர் பெருமான் கட்டுரைகள் எழுதியிருக்கிறார், இந்நூலில். விலை : ரூ. 1—0—0.

ஞானரதம் : கவியரசர் கற்பனைத் தேரில் ஏறி, ககன மார்க்கமாகப் பல உலகங்களுக்குச் சென்று தாம் பார்த்தவைகளை அழகிய கட்டுரையின் மூலம் சொல்லுகிறார். விலை : ரூ. 1—4—0.

மேற்படி நூல்களெல்லாம் கவர்ச்சி தரும் கவினுறு வடிவில், நல்ல தாளில் அச்சிடப்பட்டிருக்கின்றன. அறிவுப் பொக்கிஷம் என்று போற்றத் தகுந்த இந்நூல்கள் ஒவ்வொரு தமிழ் மகன் இல்லத்தையும் அலங்கரிக்கத் தக்கவை. கிடைக்குமிடம் : பாரதி புத்தக நிலையம், மதுரை.

## அண்ணல் காந்தி அடிச்சுவட்டில்

1915-ம் ஆண்டில் காந்திஜி பேசிய கூட்டத்தில் எல்லோரையும் போல் ஒருவராக ஓர் இளைஞர் நின்று கொண்டிருந்தார். அந்த இளைஞர், காந்திஜி வருங்காலத்தில் பாரத நாட்டின் தந்தையாக விளங்கப் போகிறார் என்பதை அறியார். தானும் சுதந்திர பாரதத்தின் முதலாவது ஜனாதிபதியாக வரப்போகிறோம் என்பதையும் அந்த இளைஞர் அறியவில்லை. ஆம், அந்த இளைஞர் தான் பாபு ராஜேந்திரப் பிரசாத்!

காந்திஜியின் அத்தியந்த சீடர்களில் ஒருவரும், சகாக்களில் ஒருவருமாக விளங்கிய பாபு ராஜேந்திரப் பிரசாத் எழுதியுள்ள "அண்ணல் காந்தி அடிச்சுவட்டில்" என்ற நூலைச் சிறந்த அரசியல் இலக்கியமாகக் கூறலாம். காந்திஜியின் வாழ்க்கையிலும் பாபு ராஜேந்திரரின் வாழ்க்கையிலும் வேறு எந்த நூலிலும் வெளிவராத மெய்சிலிர்க்கும் பல விவரங்கள் இந்த நூலில் அடங்கியுள்ளன. காந்தி மகானுக்குப் பிறகு, அவரது கொள்கைகளை இம்மிகூட வழுவாமல் பின்பற்றும் பாபு ராஜேந்திரரின் அரசியல் வாழ்க்கை சம்பரான் விவசாயிகளின் போராட்டத்திலிருந்து ஆரம்பமாயிற்று. பாரத நாட்டின் சுதந்திரத்துக்குச் சம்பரானில் காந்திஜி போட்ட விதை தான் இன்று மாபெரும் ஆல விருட்சமாக வளர்ந்து, முப்பத்தாறு கோடி மக்களுக்குச் சுதந்திர நிழலை அளித்திருக்கிறது. சம்பரான் இயக்கம் ஆரம்பமானதிலிருந்து காந்தி மகான் அமரரான வரையில் நிகழ்ந்த பல அற்புத சம்பவங்களும் அவற்றையொட்டிப் பாபு ராஜேந்திரரின் பொன் போன்ற கருத்துக்களும் இந்த அரும் பெரும் நூலில் அடங்கியுள்ளன. இந்த நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு மிகவும் பாராட்டத் தக்க முறையில் அமைந்திருக்கிறது. தமிழ்ப் பத்திரிகை உலகில் முப்பது ஆண்டுகளுக்கு மேல் அநுபவம் வாய்ந்த ஆசிரியர் ஸ்ரீ ரா. வேங்கடராஜுலுவின் எளிய நடையும், நன்கு தடையற்ற வாக்கிய அமைப்பும் இதை வாசிப்போருக்கு மிகுந்த உற்சாகத்தை அளிப்பதாக இருக்கின்றன.

கிடைக்குமிடம் : வேல் புத்தக நிலையம், 69, பீட்டர்ஸ்ரோடு, சென்னை—6. விலை: ரூ. 8.

## மூன்று நாடகங்கள்

இந்நூலில் மூன்று சிறு நாடகங்கள் சுவாரஸ்யமாக எழுதப்பட்டிருக்கின்றன. சரித்திரப் பின்னணியைக் கொண்ட "துரோகியின் தலை" வீரதீரத்துடன் செல்லுகிறது. "புகழேந்தி விடுதலை" என்ற இரண்டாவது நாடகம், ஒட்டக்கூத்தர், புகழேந்தி இருவர் கதைகளையும் வைத்து ரஸமாகப் புனையப்பட்டிருக்கிறது. மூன்றாவதான "ஆலங்காட்டு அம்மையார்" என்பது "காரைக்கால் அம்மையார் நாடகம். பிறைசூடிய பெருமானின் அடியவர்களுக்குள் காரைக்கால் அம்மையார் தலைசிறந்தவர். அவர் கதையை நாடக உருவில் எளிய நடையில் எழுதியிருக்கிறார். இந்நூலைப் படித்துத் தமிழ் மக்கள் பயனடைய வேண்டும் என்பது இந்நூலாசிரியர் அவா.

எழுதியவர் : இ. ரா. ர. சபேசய்யர், 9/76, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை—4 ; விலை : அணா 12.

# ஒரு நாள் கோபம்!

கௌரி

சுமதியைப் பார்க்கப் பார்க்கப் பெற்ற மனம் பித்தாய் அலைந்தது. 'எப்படி யெல்லாம் இருக்க வேண்டிய குழந்தை எப்படி யிருக்கிறாள்!' என்று எண்ணும் போது அவள் உள்ளத்தில் பல நிகழ்ச்சிகள் அலை மோதின. உலகத்தில் அவள் உயிருடன் இருக்க வேண்டுமென்று தோன்றியதுகூடச் சுமதிக்காகவேதான். சுமதியிடம் இருந்த பாசத்தினால்தான் உயிர் அவளுடைய உடலை விட்டுப் பிரியாமல் ஒட்டிக் கொண்டிருந்தது. அவளைத் தொட்டிலில் விட்டுத் தாலாட்டிக் கொஞ்சிக் குலாவி எவ்விதம் அருமையாக வளர்த்தாளோ, அதே குழந்தை பேரில் இன்றும் பாவனைகள்! ஞானத்தையும் ஒய்வையும் தேட வேண்டிய வயதில் அஞ்ஞானத்தாலும் பந்தங்களினாலும் ஓய்வின்றிச் சுழன்று வந்தாள் சுமதியின் தாயார்.

சுமதியின் பிறந்தகம் நல்ல சீரும் செல்வாக்கும் நிறைந்த இடம். அவளும் நல்ல அழகி. படிப்பு, சங்கீதம் எல்லாம் பயின்று வெகு சாமர்த்தியசாலியாக விளங்கினாள். பெற்றோருக்குச் செல்லக் குழந்தையாகவும் இருந்தாள். அவளுக்கு வரன் தேடுவதற்காக அவளுடைய தந்தை அலைந்த அலைச்சல் கொஞ்ச நஞ்சமல்ல.

தாயாருக்கு ஒரு ஆசை; தகப்பனாருக்கு ஒரு ஆசை. தம் புதல்வியுடன் இன்பமாய் வாழும் குணமுள்ள பையனாக வேண்டும் என்பது தகப்பனாருக்கு. அவளுடைய கலைகளை ரசித்து உத்தியோகத்தில் இருக்கும் பிள்ளை வேண்டும் என்பது தாயாருக்கு. இருவருடைய ஆசைகளையும் பூர்த்தி செய்தது மல்லாமல் சுமதியின் விருப்பத்தை அறிந்து கொண்டவன் போல் நிறைந்த ஆடவனாய்த் தோன்றினான் சந்திரன்!

பிறகு கல்யாணத்தைப்பற்றிக் கேட்கவே வேண்டாம். குழந்தை தூர தேசம் சென்று குடித்தனம் செய்ய வேண்டுமே என்பதைத் தவிர வேறு எவ்வித மான கவலையும் சுமதியின் பெற்றோர்களுக்கு இருக்கவில்லை. பெற்றோரின் மனம் அலைந்



ததேஹுமிய, சந்திரனின் குளிர்ந்த நிலவொளியில் பெருகிய அன்பைப் பருகி ஆனந்தமாய் நாட்களைக் கழித்தாள் சுமதி.

மும்மணிகள் என மூன்று குழந்தைகளையும் சுமதி பெற்றெடுத்தாள். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவர்கள் வாழ்க்கைப் படகு ஆடத் தொடங்கியது.

சுமதி திடீரென்று நோய்க்கு இலக்காகிப் படுத்து விட்டாள். அன்புக் கடலில் ஆனந்தமாக நீந்திக் கொண்டிருந்த தம்பதிகள் பிரியும்படி நேரிட்டு விட்டது. சந்திரனுக்குச் சுமதியைப் பெற்றோரிடம் அனுப்ப விருப்பமில்லை. தன்னிடம் வைத்துக் கொண்டு வைத்தியம் பார்க்க வேண்டும் என்பது அவன் எண்ணம். ஆனால் அவர்கள்விடவில்லை.

அவர்கள் பணத்தைப் பணமென்று பார்க்கவில்லை. தண்ணீர் போல் செலவழித்தார்கள். அலைச்சலைப் பாராட்டவில்லை. எப்படியாவதும் சுமதியின் உடம்பு குணமடைய வேண்டும் என்பது ஒன்றுதான் எல்லோருடைய நோக்கமும். இத்தருவாயில் மற்றொரு இடி காத்திருந்தது. சுமதியின் தந்தை இவ்வுலகை விட்டு விடைபெற்றுக் கொண்டு விட்டார். சுமதியின் தாயாருடைய துயரத்துக்கு எல்லையே இல்லை. எல்லாவற்றையும் துறக்க வேண்டிய நிலையில் சுமதியின் தாயாரைக் கார்மேகம் போல் கவிழ்ந்து கொண்டது அஞ்ஞானம். துயரப் போர்வையின் அதிர்ச்சியோ, அல்லது சுமதியின் மேல் படர்ந்த பாசமோ, யாரால் சொல்ல முடியும்? கார்மேகத்தின் மின்னலும் இடிமுழக்கமும் பெருமழையில் பரிணமிப்பது போல் மாப்பிள்ளை சந்திரனின் பேரில் வந்து விழுந்தன.

''சுமதியைத் தூரதேசம் அனுப்புவதற்கு அவன்தான் காரணம். அந்தக் காரணத்தினாலேயேதான் தன் கணவருக்கு நோய் வந்து அவர் இவ்வுலகை விட்டு மறைந்தார். அவன் கையைப் பிடித்ததால்தான் சுமதிக்கும் நோய் வந்து படுக்கும்படி நேர்ந்தது'' என்ற எண்ணங்கள் சிறு ஊற்றுப் போல் கிளம்பிப் பெரும் பிரவாக மெடுத்து ஓட ஆரம்பித்து விட்டன சுமதியின் தாயார் மனத்தில்.

மாப்பிள்ளை மீது வெறுப்பும், கோபமும் அவளுக்குப் பொங்கி எழுந்தன. வர வரச் சந்திரன் சுமதியிடம் பேசுவதுகூடப் பொறுக்காமல் பொருமும் நிலை ஏற்பட்டு விட்டது!

* * *

**மா**லை சுமார் நான்கு மணியிருக்கும். குளிர்ந்த காற்று 'சில்'லென வீசிக் கொண்டிருந்தது.

அன்று காலை ஊரிலிருந்து வந்திருந்த சந்திரன், ''வெளியில் போய் விட்டு வரலாமா, சுமதி?'' என்று ஆவலுடன் கேட்டான்.

இதைக் கேட்டதும் சுமதியின் உள்ளத்தில் எழுந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஒரே விநாடிதான். சந்திரனுக்கு மிகவும் பிடித்த மஞ்சள் நிறப் புடவையை உடுத்திக் கொண்டு சுமதி கிளம்பி விட்டாள்.

''வாருங்கள், போகலாம்!'' என்றாள் அவள்.

சந்திரன் ஒரு குடையையும் கம்பளியையும் கையோடு எடுத்துக் கொண்டான்.

'' அம்மா......வெளியில் போகிறேன் '' என்று சத்தம் போட்டவள் தாயாரின் பதிலுக்குக்கூடக் காத்திருக்கவில்லை. கணவனுடன் வெளியில் கிளம்பி விட்டாள்.

இருவரும் பேசிக் கொண்டே வந்து ஒரு கல்லின் மேல் உட்கார்ந்தார்கள்.

''உடம்பு இப்பொழுது எப்படி இருக்கிறது, சுமதி?'' — சந்திரனின் கேள்வியில் அன்பு ததும்பி வழிந்தது.

''எவ்வளவோ தேவலை. ஏன் இப்படிக் கடிதமே போடாமல் இருந்து விட்டீர்கள்?''

''நான் வருவேன் என்று நீ எதிர்பார்க்கவே இல்லை, இல்லையா?''

''ஆமாம். என்ன திடீரென்று?..பண்டிகைக்கு வருவீர்கள் என்று நினைத்தேன்.''

'' அது இன்னும் ஒரு வாரம் இருக்கிறதே. எல்லாம் உனக்காகத்தான். ஒன்றும் தெரியாதவள்போல் கேட்கிறதைப் பார்!'' அன்புடன் அவளை ஒரு தட்டுத் தட்டினான் சந்திரன்!

''சுமதி, இந்தப் புடவை உனக்கு எவ்வளவு நன்றாக இருக்கிறது, தெரியுமா?''

சுமதியின் முகம் நாணத்தால் சிவந்தது.



## தனது கவுனை வெண்மையென அவள் நினைத்திருந்தாள் ஆனால், ரின்ஸோவினால் சலவை செய்த மீனாவின் கவுனைப் பார்த்ததும் பிரமித்தாள்!



## உண்மை! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது

அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோவினால் சலவை செய்யுங்கள். உங்களுடைய வெண்மை ஆடைகள் கண்ணைப் பறிக்கும் வெண்மையாக ஆகிவிடும்! வர்ணத் துணிகளும் அதிகப் பிரகாசமடையும்! அடித்துத் துவைக்கவோ, அழுத்தித் தேய்க்கவோ வேண்டியதில்லை. ரின்ஸோவின் பிரமிக்கத்தக்க விறுவிறுப்பு வாய்ந்த நுரை எல்லா அழுக்குகளையும் கழுவிக் களைந்துவிடும். கண்ணைப் பறிக்கும் அத்தகைய அதிகப்படி வெண்மைக்கு நீங்கள் சேர்க்க வேண்டியது வேறொன்றுமில்லை. குடும்பத்தில் சகல சலவைகளுக்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்!




**. . . சலவை செய்ய மிகவும் சுலபமானது**

**இந்த அற்புத சோப் பவுடர்**

R. 7-50 TM

"என்னால் எவ்வளவு சிரமம் உங்களுக்கு?" என்றாள் சுமதி சந்திரனின் கையைப் பிடித்துக் கொண்டு. அவள் முகமே வாட்டம் கொடுத்தது, இதைச் சொல்லும்பொழுது.

"என்ன சிரமம்? என்னைப் பார்த்தால் அப்படியா தோன்றுகிறது உனக்கு?"

"இருந்தாலும் எத்தனை நாளைக்குத்தான் உங்களைப் பிரிந்து நான் இப்படி இருப்பது?"

"அதைப் பற்றி எல்லாமா கவலை? உன் உடம்பல்லவா முக்கியம் சுமதி?"

சுமதியால் மேலே ஒன்றும் பேச முடியவில்லை. தொண்டை தழுதழுத்தது. மளமளவென்று பொங்கி வந்த கண்ணீர் சந்திரனின் கைகளில் உதிர்ந்தது.

"பார்த்தாயா? வீணாக உடம்பை அலட்டிக் கொள்ளுகிறாய். அவ்வளவு தூரத்திலிருந்து உன் கண்ணீரைக் காணுவதற்கா வந்தேன்?" என்றான் அவன் கனிவுடன்.

சுமதியும் சந்திரனும் வருகிறார்களா என்று சுமதியின் தாயார் வழியைப் பார்த்து வாசலில் நின்று கொண்டிருந்தாள். சந்திரனின் கையிலிருந்த குடையையும் கம்பளியையும் வாங்கிக் கொண்டு படி ஏறினாள் சுமதி.

அவள் தாயாரின் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன.

சுமதி வந்ததும் வராததுமாக, "எங்கே போயிருந்தீர்கள், இவ்வளவு நேரமாக?" என்று ஆத்திரத்துடன் கேட்டாள் தாயார்.

"எங்கேயும் இல்லை. பேசிக் கொண்டிருந்தோம். நேரமாகி விட்டது."

"அப்படி என்ன பேச்சு, நேரமாவது கூடத் தெரியாமல்!"

"என்ன கேள்வி அம்மா இது?"

"கேள்வி என்ன கேள்வி! நீ கண்கலங்கிக் கேட்கிற போதே தெரியுமே எனக்கு! அழைத்துக் கொண்டு போய் உன்னை அவன் அழ விட்டானாக்கும்!"

"என்ன பேச்சு! அவர் காதில் படப் போகிறதம்மா!"

"பட்டால் என்ன? தலையைக் கிள்ளி எறிந்து விடுவானோ? ஒரு அக்கறையைக் காணோம்! கவலையைக் காணோம்! உன்னைத் தண்டிக்கவும் கண்டிக்கவும்தான் அங்கிருந்து ஓடி வந்தானோ?"

சுமதியின் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த இன்பப் பெருக்கு ஒரே நொடியில் துயரக் கடலாய் மாறியது.

'கவலை எவ்வளவு? செலவு எவ்வளவு? துளி சுகம் உண்டா? ஒன்றையும் பொருட்படுத்தாமல் அவளைப் பார்க்க ஓடி வந்துள்ள கட்டிய கணவனுக்கு இதுதான் மரியாதையா? அவன் படும்பாடு அவனுக்கல்லவா தெரியும்! எதற்காகத் தன் தாயாருக்கு அவனிடம் இவ்வளவு ஆத்திரம்! வெறுப்பு!' – இப்படி எண்ண அலைகள் வந்து குவிந்தன.

சந்திரனைத் தன் தாயார் அலட்சியம் செய்வது சுமதிக்குப் பொறுக்கவில்லை. பேசாமல் எவ்வளவு நேரம்தான் கிடப்பது? அவளுக்கும் தாங்கவில்லை. தலையை வாரிக் கொண்டவள் தெருப் பக்கம் வந்தாள். சந்திரன் அங்கு உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"ஏன், கோபமா?" என்று கேட்டாள் சுமதி, சந்திரனைப் பார்த்து.

"கோபித்துக் கொண்டு எங்கே போய் முட்டிக் கொள்கிறது?" இதைச் சாதாரணமாகவே கூறினான் சந்திரன்.

"அப்படியானால் ஏன் என்னிடம் பேசாமல் இருக்கிறீர்கள்?"

"பேசினால்தான் எல்லாம் பெரிய ஆபத்தாக முடிந்து விடுகிறதே!"

"அப்படியானால் இனிமேல் பேசாமலே இருக்கப் போகிறீர்களா?"

"இல்லை. ஊருக்குப் போகப் போகிறேன்!" என்றான் சந்திரன். இதைக் கேட்டவுடன் சுமதிக்குத் 'திக்' கென்றது.

"ஏன் திடீரென்று? தீபாவளிக்கு இருந்து விட்டுப் போகிறேன் என்றீர்களே?"

"உங்கள் உறவை நான் ஏன் கெடுக்க வேண்டும்?" என்றான் கோபத்தோடு.

"வாசலில் எதற்கு இதெல்லாம்? உள்ளே வாருங்கள், போகலாம்" என்றாள்.

"ஆமாம். அதே புத்திதானே உனக்கும்? உன் அம்மா சத்தம் போடுவது தெரியவில்லை, ஒரு புருஷன் இருக்கிறான் என்றுகூடப் பார்க்காமல்! நீ என்னை அடக்க வந்து விடு! பெண் உயர்த்தி என்றால் கல்யாணமே செய்யாமல் வைத்துக் கொள்வதுதானே, செல்லமாய்! என்ன என்று நினைத்துக் கொண்டு பேசுகிறாள் வரவர? நீ இங்கேயே சுகமாய் இரு. என்னால் நீ அழவும் வேண்டாம்; உன் உடம்புக்கு வரவும் வேண்டாம்!" என்று சந்திரன் கோபத்தோடு உதறித் தள்ளினான்.

சுமதிக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. கண்ணைத் துடைத்துக் கொண்டு அவள் உள்ளே வந்தாள்.

"எதற்கு மறுபடியும் கண்ணைக் கசக்குகிறாய்? நான் ஒருத்தி இருக்கிறது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? எங்கேயாவது தொலைந்து போகிறேன். சந்தோஷமாய் நீங்கள் விருப்பப்படி இருங்கள்!" என்று ஆரம்பித்தாள் சுமதியின் தாயார்.

"உன்னை யார் எங்கே போகச் சொன்னார்கள் இப்போது?" என்றாள் சுமதி.

"வாயால் வேறு போகச் சொல்லணுமா?"

"அவர் இன்று ஊருக்குப் போகிறாராம்!"

"அவன் எதற்குப் போகவேணும்? நன்றாய் மகராஜனாய் இங்கேயே இருக்கட்டும். நான் போகிறேன். நீங்கள் இருவரும் சுகமாக இருங்கள்" என்று பொரிந்து கொட்டினாள் சுமதியின் தாயார்.

அவ்வளவுதான்! அவள் தாயாரின் பெட்டியும் படுக்கையும் கூடத்துக்கு வந்தன.

சந்திரனின் பெட்டியும் படுக்கையுமோ வாசலுக்கே போய் விட்டன. யாரோடு என்ன பேசுவது? பேசினாலும் பயன்? சுமதிக்குச் சொல்ல முடியாத வேதனை. காலை முதல் கண்களைத் துடைத்துத் துடைத்துத் தலைவலி ஏற்பட்டு விட்டது.

வாசலில் இரண்டு வண்டிகள் வந்து நின்றன. சந்திரனின் பெட்டியும் படுக்கையும் ஒன்றில் ஏறின. மற்றொரு வண்டியில் அவள் தாயாரின் பெட்டியும் படுக்கையும் ஏறிக் கொண்டன.

"போய் விட்டு வரேன். கடிதாக போடச் சொல்லு!" என்று சொல்லி விட்டு அவன்

தாயார் வண்டியில் ஏறிக்கொண்ட பொழுதும் சுமதி பேசவில்லை.

''வருகிறேன், சுமதி! உடம்பைக் கவனித்துக் கொள்'' என்று சொல்லிவிட்டுச் சந்திரன் வண்டிக்குப் போனபொழுதும் சுமதி வாயைத் திறக்கவில்லை.

சுமதிக்கு அடைத்து வைத்துக் கொண்டிருந்த துக்கமோ பீறிட்டுக்கொண்டுவந்தது. சந்திரன், வண்டியில் ஏறும் சமயம் ஓடி வந்து அவனுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்து விட்டாள். சந்திரனுக்கோ கோபம் இன்னும் தணிந்த பாடில்லை.

''என்னிடம்தான் உன் கைவரிசைகளெல்லாம்! உங்கம்மாவிடம் காட்டுகிறது தானே! இனி மேல் இந்தப் பக்கமே தலை காட்டப் போவதில்லை நானும்!'' என்று கத்தி விட்டுச் சுமதியைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் வண்டியில் ஏறிக்கொண்டுவிட்டான் சந்திரன்.

ரயிலடிக்குப் புறப்பட்ட வண்டிகள் தொடர்ந்து சென்றனவே ஒழிய, சுமதியின் தாயோ, அல்லது சந்திரனோ, ஒருவரை ஒருவர் திரும்பிப் பார்க்கவில்லை. ரயிலடிக்கு வந்து இறங்கியவர்கள் டிக்கட்டுகளை வாங்கிக் கொண்டு இந்தப் பக்கம் ஒருவர், அந்தப் பக்கம் ஒருவருமாகப் பேரனார்கள்.

வண்டி தயாராக நின்று கொண்டிருந்தது. சுமதியின் தாய் ஒரு வண்டியில் ஏறிக் கொண்டாள். சந்திரனும் போய் மற்றொரு வண்டியில் ஏறிக் கொண்டான்.

அவன் உள்ளத்தில் குமுறிய துக்கமோ, கோபமோ துளியும் தணியவில்லை.

இன்னும் நேரமாகாததால் வண்டிக்குள் ''ஜே ஜே'' என்று கும்பல் ஏறுவதும் இறங்குவதுமாய் ஒரே சந்தடியாக இருந்தது.

வண்டியில் குழந்தைகளுக்குக் குறைவில்லை. அவைகளில் சுமார் ஐந்து வயதுள்ள ஒரு பெண் குழந்தை சந்திரனின் அருகில் வந்து நின்று கொண்டு, ''மாமா'' என்று அழைத்தது. கொஞ்சம் இனிபோல் எவ்வளவு அழகு! கபடமில்லாத மலர்ந்த முகம்! குழந்தை சந்திரனின் பக்கத்தில் வந்து, ''உங்கள் வீட்டு மாமி வரல்லே, மாமா?'' என்று கேட்டது கண்களில் அன்பொளி வீச.

குழந்தையின் இக்கேள்வி சந்திரனைத் திக்கு முக்காடச் செய்து விட்டது.

''வீட்டில் இருக்கிறாள்!'' என்று அவனுடைய வாய் பேசியதே ஒழிய, அவன் அகக்கண் முன்பு சுமதியின் பரிதாபம் நிறைந்த முகம் வந்து நின்றது.

தன்னந்தனியாக என்ன செய்வாள்! ஒரு நொடிக்குள் புழுவாய்த் துடித்துப் போய் விட்டான் அவன்.

வண்டியும் புறப்படத் தயாராக ஊதியது. குழந்தையை வாரி எடுத்து முத்தமிட்டான் சந்திரன். பெட்டி படுக்கையை இழுத்துக் கீழே எறிந்து விட்டு வண்டியிலிருந்து வேகமாகக் குதித்தான்.

''ஏன் சார் இறங்கி விட்டீர்கள்?'' ஒரே சமயத்தில் எவ்வளவோ குரல்கள் அவன் செவிகளில் ஒலித்தன.

''ஜீக் ஜீக்'' என்று ரயில் வண்டியும் கிளம்பி விட்டது. அந்த வண்டிக்குமேல் காற்றாய்ப் பறந்தான் சந்திரன் வீட்டை நோக்கி!

வீட்டில் எல்லா விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. சுமதி எந்த நிலையில் இருக்கிறாளோ என்று சந்திரனுக்கு ஒரே கவலை. ஆனால் அவன் உள்ளே நுழைவதற்குள் எதிரில் வந்த சுமதி, ''அம்மாவைப் பார்க்கவில்லை?'' என்று கேட்டாள்.

''இல்லையே!'' சந்திரனுக்கும் ஒன்றும் தோன்றவில்லை.

''இதோ பாருங்கள். ரயிலடி போனதுமே, பெற்ற மனம் துடித்துப் போய் என் அம்மா வீடு திரும்பி வந்து விட்டாள். இந்த டிக்கெட்டை மாற்றிக் கொண்டு வரச் சொன்னாள் இப்பொழுதே!'' என்று சுமதி டிக்கெட்டை அவனிடம் நீட்டியபொழுது சந்திரனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

''தீபாவளிப் பண்டிகை இன்னும் நாலு நாட்கள்தானே இருக்கிறது. இருந்து விட்டு ஊருக்குப் போகலாம்'' என்று சொல்லிக் கொண்டு மாமியார் எதிரில் வந்து நின்ற பொழுது சந்திரனின் நிலை ஒரே தடுமாற்றமாய்ப் போய் விட்டது.

''நம் வீட்டில் வருஷம் முந்நூற்று அறுபது நாளும் தீபாவளிதான்!'' என்று சுமதி கூறியபொழுது ஒருவராலும் சிரிப்பை அடக்கவே முடியவில்லை.

தன்னுடைய டிக்கெட்டையும் மாமியாரின் டிக்கெட்டையும் எடுத்துக்கொண்டு ரயிலடியை நோக்கிக் கிளம்பிவிட்டான் சந்திரன்.

''பாசம் காரணமாக ஏதோ சொன்னால் அதையெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளலாமா? ஆயிரம் இருந்தாலும் உறவு விட்டு விடுமோ?'' என்று சுமதியின் தாயார் சொல்லிக் கொண்டிருந்தது, அவன் செவியில் விழாமல் போய்விடவில்லை.

தீபாவளியன்று கைநிறைய ரூபாய் நோட்டுகளுடன் நின்ற மாமியாரைப் பார்த்தபோது, ''பெற்ற மனம் பித்து'' என்று சந்திரனால் நினைக்காமல் இருக்க முடியவில்லை.






# ஸாரிடான்
## உபயோகித்து வலியை ஒழியுங்கள்

தலைவலி, பல்வலி, முதுகுவலி, தசைவலி மற்றும் சாதாரண உபாதைகளிலிருந்து துரித நிவாரணம் பெற, வலியைப் போக்குவதில் உலகப் பிரசித்தி பெற்ற ஸாரிடான் உபயோகியுங்கள். அது மூன்று விதங்களில் வேலை செய்கிறது:

**நிவாரணமளிக்கிறது:** எல்லாவித வலிகளிலிருந்தும் ஸாரிடான் உங்களுக்கு துரித நிவாரணம் அளிக்கிறது. அது உங்களுக்கு வயிற்றுக் கோளாறு விளைவிக்கவோ, அல்லது மனச் சோர்வு உண்டாக்கவோ செய்யாது.

**விச்ராந்தி அளிக்கிறது:** ஸாரிடான் உங்கள் நரம்புகளுக்கு சமனமூட்டி, வலியினால் ஏற்படும் சங்கட உணர்ச்சியை நீக்கி, உங்களை உற்சாகத்துடனும், விச்ராந்தியுடனும் வைக்கும்.

**தெம்பூட்டுகிறது:** தூக்கமின்மை, அதிகவலி இவைகளால் ஏற்படும் உடல் மற்றும் மனத் தளர்ச்சியை சமாளிக்க அவசியமான தெம்பை ஸாரிடான் உங்களுக்கு அளிக்கிறது. உட்கொண்ட சிறிது நேரத்தில் சுகமும் புத்துணர்ச்சியும் பெறுவீர்கள்.

ஸாரிடானின் சேர்க்கைப் பொருள்கள் ஒருங்கே இணைந்து வேலை செய்வதால் அவைகளின் தனித்தனி குணங்கள் அதிகரிக்கின்றன. ஸாரிடானில் போதையூட்டும் மருந்துகள் ஒன்றும் சேர்க்கப்படுவதில்லை.

* ஒரு மாத்திரை 2 அணா
* ஒவ்வொரு வில்லையும் ஒரு பூர்த்தியான டோஸ்
* ஆஸ்பிரின் (அஸெட்டில்–ஸாலிஸிலிக் ஆஸிட்) சேரவில்லை



**ஸாரிடான் உபயோகித்து பலனை அனுபவத்தில் காணுங்கள்!**

VT. 3305















# டாக்டர் ஞானதேவி

டாக்டர் ஞான தேவிக்கு வயது சுமார் ஐம்பது இருக்கும். வயதின் முதிர்ச்சியை அவளது வெண்மை படர்ந்த கேசம் எடுத்துக் காட்டியது. நல்ல அனுபவசாலி. முகத்தில் உள்ள கம்பீரமும் அதிகாரமுமான பார்வையும் பார்ப்பவர்கள் அவளிடத்தில் பய பக்தியும், மரியாதையும் வைக்கும்படி செய்தன. விழுப்புரத்திலே இவளுடைய ஆஸ்பத்திரியில் தான் அதிகக் கூட்டம். காரணம், ஞான தேவியின் சலியாத உழைப்பும், கண்டிப்பான இயல்பும்தான்.

டாக்டர் ஞானதேவி அவளுடைய அறையில் ஏதோ சிந்தித்தவாறு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய இதழ்களிலே புன்முறுவல் தோன்றி மறைந்தது. அவளுடைய கைகள் மேஜை மேல் இருந்த கடிதத்தை எடுத்தன. அதில் கண்டவை பின்வருமாறு :

டாக்டர் ஞானதேவிக்கு.

என்னுடைய செல்வக் குமாரி திருமதி நளினிக்கு நடக்கவிருக்கும் கல்யாணத்துக்குத் தாங்கள் அவசியம் வந்து குழந்தையை ஆசீர்வதிக்க வேண்டுமாறு பன்முறை ! கேட்டுக் கொள்ளுகிறேன். நளினி தங்களுடைய திறமையால், தங்களால் எனக்கு அளிக்கப்பட்ட ஒரு வரப்பிரசாதம். இதை நான் என்றென்றும் மறக்கமாட்டேன், மறக்கவும் முடியாது. அவசியம் தங்கள் வரவை எதிர்பார்க்கிறேன். இத்துடன் அழைப்பும் அனுப்பியிருக்கிறேன்.

ரகுநாதன்

அழைப்பைக் கையிலெடுத்துப் பார்த்தாள் ஞானதேவி. கண்கள் பத்திரிகையைப் பார்த்தனவே தவிர, அவளது சிந்தனை இருபது வருடங்களுக்கு முன் நடந்த சம்பவத்துக்குச் சென்றது.

இருபது வருடங்களுக்கு முன்னால் ஒரு நாள் காலையில் டாக்டர் ஞானதேவி ஆஸ்பத்திரியில் அவளுடைய அறையில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள். அப்பொழுது நர்ஸ் புஷ்பா ஓடி வந்து, "டாக்டர்!" என்றாள் மிகுந்த பரபரப்புடன். தான் எழுதுவதை நிறுத்தாமலேயே, "என்ன வேண்டும்?" என்று கேட்டாள் ஞானதேவி.

"நேற்று வந்த அந்த நாடோடிப் பெண்ணைக் காணவில்லை, டாக்டர்!" என்றாள் நர்ஸ் பயத்துடன்.

திடுக்கிட்ட ஞானதேவி, "காணவில்லையா? நேற்றுப் பிரசவித்த ஒரு பெண் அதற்குள் எப்படி எழுந்து போக முடியும்? நீங்களெல்லாம் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்? இரவு வேலை உன்னுடையதுதானே?" என்றாள் கோபத்துடன்.

நர்ஸ் புஷ்பா பதில் சொல்லவில்லை. பிழையை உணர்ந்து தலை குனிந்து நின்றாள்.

"சரி; குழந்தை இருக்கிறதா அல்லது அதையும் எடுத்துக் கொண்டு போய் விட்டாளா?"

"இல்லை, டாக்டர்! குழந்தை மட்டும் இருக்கிறது."

"சரி; இந்த விஷயத்தை வெளியில் யாருக்கும் சொல்ல வேண்டாம். தெரிந்தால் ஆஸ்பத்திரியின் பெயர் கெட்டு விடும். நீ உடனே குழந்தையை ஒன்பதாம் நம்பர் அறையில் வைத்திரு. நான் கவனித்துக் கொள்கிறேன்."

நர்ஸ் முணுமுணுத்தாள். டாக்டரின் குரல் அவளைத் தடுத்து நிறுத்தியது. "இனிமேல் இப்படியெல்லாம் அஜாக்கிரதையாக இருக்காதே!" என்று எச்சரித்து அனுப்பினாள்.

அப்பொழுது ஆஸ்பத்திரியை நோக்கி ஒரு டாக்ஸி வந்தது. அவள் அதை எதிர் பார்த்ததுதானே! உடனே அறையினின்றும் விரைந்து சென்று டாக்ஸியிலிருந்து இறங்கிய அந்த அம்மாளை நர்ஸ்களின் பாதுகாப்புடன் ஓர் அறைக்கு அனுப்பி வைத்தாள். அப்பொழுது அவள் கண்கள் ரகுநாதனைச் சந்தித்தன.

"டாக்டர், இந்தத் தடவையாவது குழந்தையை உயிருடன் எனக்கு அளியுங்கள், டாக்டர்!" என்றார் ரகுநாதன் உணர்ச்சி மிகுதியினால் தழதழத்த குரலில்.

"மிஸ்டர், ரகுநாதன்! கவலைப்படாதீர்கள். உங்கள் மனைவியின் கர்ப்பப் பை மிகவும் பலவீனமானது. அதனால்தான் இதுவரை ஒரு குழந்தைகூடத் தங்க வில்லை. இந்தத் தடவை என் திறமை யெல்லாம் காட்டி முயற்சி செய்து பார்க்கிறேன். நம்மால் செய்யக் கூடியது அதுதானே? கடவுளை நம்புங்கள். மனம் தளராதீர்கள். இன்னும் நான்கு மணி நேரத்தில் உங்களுக்குச் செய்தி அறிவிக்கிறேன். அது வரையில் நீங்கள் இங்கே இருக்க வேண்டாம். உங்கள் வீட்டுக்குப் போய் உங்கள் வேலையை நீங்கள் கவனிக்கலாம்" என்றாள் ஞானதேவி கனிவுடன்.

டாக்டர் வார்த்தைகளைக் கேட்ட ரகுநாதன் மனநிறைவுடன் வீடு திரும்பினார்.

ரகுநாதன் அவ்வூரிலே ஒரு பிரபல வக்கீல். அவர் மனைவி பத்மாவுடன் சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்தார். அப்படி இருந்தும் அவருக்கு வாழ்க்கையில் இரண்டு குறைகள் இருந்தன. ஒன்று குழந்தை இல்லாமல் இருப்பது. இரண்டாவது தன் தம்பி நன்றாகப் படித்திருந்தும் தொழில் ஏதும் நடத்தாது சினிமாவில் சேர்ந்து நடிப்பது.

அவர் தம்பி நாகராஜன் பிறவிக் கலைஞன். சிறு வயதிலேயே ஆடல்பாடல்களை அணு அணுவாக ரசிப்பான். பள்ளிக்கூடத்திலும் சரி, கல்லூரியிலும் சரி, அங்கு நடக்கும் நாடகங்களுக்கெல்லாம் அவன்தான் கதா நாயகன். ரகுநாதன் இவற்றையெல்லாம் அப்பொழுது கண்டிக்கவில்லை. மாணவர்கள் எல்லோரும் இப்படித்தான் இருப்பார்கள்; பின்பு உத்தியோகம், பொறுப்பு என்று ஏற்பட்டால் இவற்றையெல்லாம் மறந்து விடுவார்கள் என்று எண்ணினார்.

நாகராஜன் பி. ஏ. பரீக்ஷை எழுதி முடித்தான். அவன் வரவை ரகுநாதன் ஆவலுடன் எதிர்பார்த்தார். அவனை எந்த வழியில் புகுத்தலாம் என்று திட்டமிட்டார். சென்னை



யில் நாகராஜனிடமிருந்து கடிதம் ஒன்று வந்து அவரைக் கதிகலங்கச் செய்தது. கடிதத்தில் கண்டது இதுதான்:

அன்புமிக்க அண்ணா அவர்களுக்கு,

உங்களைத் திருப்தி செய்யும் பொருட்டு இதுவரை கல்லூரியில் படித்து பி. ஏ. பரீக்ஷையும் எழுதிவிட்டேன். ஒருவனுக்கு எதில் விருப்பம் இருக்கிறதோ, அந்தத் துறையில் அவன் இறங்கினால்தான் வாழ்வில் வெற்றி காணமுடியும். ஆதலால் நான் சினிமாவில் சேர்ந்து நடிப்பது என்ற முடிவுக்கு வந்து விட்டேன். இதை நீங்கள் பலமாக ஆட்சேபிப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். என்னை ஒரு பட முதலாளி அவருடைய கம்பெனியில் ஒரு நிரந்தர நடிகராக ஒப்பந்தம் செய்திருக்கிறார். என்னை ஒரு இஞ்சினியராகவோ - டாக்டராகவோ மாற்ற நீங்கள் முடிவு செய்திருந்தீர்கள். ஆனால் என்னுடைய வாழ்க்கைப் பாதை இப்படித் திரும்பி விட்டது. இக்கடிதத்தின் மூலம் நான் தங்களிடமிருந்து விடைபெற்றுக் கொள்ளுகிறேன். என்னை இவ்வளவு காலம் தாய் போல் வளர்த்த என் அண்ணனுக்கு என் வணக்கங்கள் என்றென்றும் உண்டு.

உங்கள் தம்பி,

**நாகராஜன்**

கடிதத்தைப் படித்ததும் அவர் கண்கள் இருண்டன. தம்பியின் பிரிவு அவரை வாட்டியது. காரணம் தாயும் தந்தையுமாக இருந்து வளர்த்தவர் அல்லவா? இரண்டு மாத காலம் நோயாளிபோல் படுக்கையில் கிடந்தார்.

இந்தச் சமயத்தில் அவருக்கு ஓர் ஆண் குழந்தை வேறு பிறந்து இறந்தது. எல்லாமாகச் சேர்ந்து அவரை ஒரே யடியாகக் குழப்ப ஆரம்பித்தன.

அவர் தம்பியைப் பிரிந்து வருடங்கள் சில உருண்டோடின. அவனிடமிருந்து அன்று வந்த ஒரு கடிதத்தைத் தவிர வேறு கடிதம் எதுவும் வரவில்லை. இந்தச் சில வருஷங்களில் அவன் நடித்த நான்கு படங்கள் வெற்றி பெற்றன. அவருடைய மனைவியின் தொந்தரவால் அவன் நடித்துக் கடைசியாக வெளி வந்த படத்தைப் பார்த்தார். அவருடைய மனத்தில்நிலைபெற்றஎண்ணம் இதுதான். 'நம் தம்பி ஒரு சிறந்த நடிகன். அவனால் சினிமாத் துறை முன்னேற்றம் அடையும். இப்படிப் பட்ட கலைஞனைத் தடுத்தோமே' என்று வருத்தமும் பட்டார். 'அவனுடன் இவ்வளவு சரளமாக நடித்து உரையாடினாளே கதாநாயகி, அவள் யார்?' என்றும் அவர் நினைப்பதுண்டு. அவர் மனைவியிடம் ஒரு சமயம் இதைப் பற்றிக் கேட்டார். "நன்றாக இருக்கிறது நீங்கள் கேட்பது? சிறு குழந்தைகூடச் சொல்லுமே அவள் யாரென்று - அவள் பெயர் மாலா. சிறந்த நடிகை" என்றாள்.

மனைவியை ஆஸ்பத்திரியில் விட்டுத் திரும்பிய ரகுநாதனுக்கு வேலையில் கவனம் செல்லவில்லை. கைக்கடிகாரத்தைப் பார்த்தார். மூன்று மணி நேரம் ஆகிவிட்டது. இன்னும் தகவல் கிடைக்கவில்லையே என்று நினைத்தார்.

அப்பொழுது டெலிபோன் அடித்தது. ரிஸிவரைக் கையிலெடுத்துக் கேட்டார். அவர் முகத்தில் மகிழ்ச்சி ரேகை படர்ந்தது. தான் ஒரு பெண் குழந்தைக்குத் தகப்பனார் ஆகி விட்டதைக் கேட்ட அவரால் ஒரு நிமிடங்கூட அங்கே நிற்க முடியவில்லை. மனைவியையும் குழந்தையையும் காணுவதற்காக ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்தார்.

டாக்டருக்கு அவருடைய நன்றியை எப்படித் தெரிவிப்பதென்றே தெரியவில்லை.

குழந்தை நளினி செல்வமாக வளர்ந்தாள். அதற்குப் பின்னும் ரகுநாதனுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்து உடனே இறந்தன. நளினி சிறந்த அழகி. அவளிடம் அவள் தந்தையின் சாயல் அப்படியே இருந்தது.

நேற்று ஞானதேவி ரகுநாதனைச் சந்திக்க நேர்ந்தது. அப்பொழுது அவர் கூறியவை ஞானதேவியின் காதுகளில் இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தன. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நளினி தன்னுடன் படித்த மாணவன் சேகரையே மணப்பேன் என்று உறுதியாகச் சொன்னாளாம். செல்வக் குமரியின் விருப்பப்படியே அவர் சேகரையே மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்து விட்டாராம். ஆனால் அவர் மாப்பிள்ளையின் குடும்பத்தைப் பற்றி விசாரித்தபோது சில தகவல்கள் தெரிய வந்தன. சேகர் பிறப்பதற்குச் சில வருடங்களுக்கு முன்னால் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்த அவன் அக்காவைக் காணவில்லையாம். சிலர் அவள் யாருடனோ கடல் கடந்து போய் விட்டாள் என்றார்கள். சிலர் 'அவள் மாதிரியே ஒரு பெண் சினிமாவில் நடிக்கிறாள். பெயரை மாலா என்று மாற்றி வைத்துக் கொண்டு அவளே அப்படி நடிக்கலாம்' என்றும் ஊகிக்கிறார்களாம்.

"மிஸ்டர் ரகுநாத், அதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. நமக்கு வேண்டியது மாப்பிள்ளைப் பையன் யோக்கியமானவனாக இருக்க வேண்டும் என்பதே. நீங்கள் உங்கள் தம்பியைப் பற்றிச் சொன்னீர்களா?" என்றாள் ஞானதேவி.

வக்கீலின் முகம் உடனே மாறிவிட்டது.

"இல்லை, டாக்டர்! சொல்லவில்லை. என் தம்பி இறந்து எவ்வளவோ ஆண்டுகள் ஆகிவிட்டன என் வரையில்" என்று சொல்லியவாறே மேலே பேச விரும்பாமல் அவசரம் அவசரமாக விடைபெற்றுக் கொண்டு விரைந்து சென்று விட்டார் ரகுநாதன்.

இவற்றையெல்லாம் நினைத்துக் கொண்ட ஞானதேவி மீண்டும் ஓர் முறை தனக்குள் சிரித்துக் கொண்டாள். பின்பு ஓர் கடிதம் எழுதி அதை நர்ஸ் ஒருத்தியிடம் கொடுத்து அஞ்சலில் சேர்க்கச் சொன்னாள்.

நாட்கள் இரண்டு சென்றன. அன்று ஞானதேவி தனக்கு வந்த கடிதங்களைப் படித்துக் கொண்டிருந்தாள். அவற்றுள் ஒரு கடிதம் தான் அவள் ஆவலுடன் படித்தது.

அன்புள்ள டாக்டர் ஞானதேவிக்கு,

மாலா எழுதுவது. தங்களுடைய கடிதத்தைக் கண்டதும் களிப்படைந்தேன். என்னுடைய குமாரியின் கல்யாணத்தை நான் எப்படியாவது அவசியம் காண வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது என் கணவர் சில விஷயங்களைச் சொல்லி என்னைத் திடுக்கிடச் செய்தார். அவற்றை நான் உங்களுக்கு நேரிலே சொல்லுகிறேன். தங்களுடைய கடிதத்தில் அங்கு வந்தால் ஆச்சரியம் காத்திருக்கிறது என்று மர்மமாக

# வேர்க்குரு விலிருந்து

## நிச்சயம் நிவாரணம் பெற

## இரு-வழி

## சிகித்சை

**2**

நாள்முழுதும் சுகமாயிருக்க ஸ்நானத்திற்குப்பின் ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடரை தேகத்தில் தூவிக் கொள்ளுங்கள். சருமத்தை மென்மையாக்கும், இதன் சக்திவாய்ந்த கிருமி நாசினி குணங்கள் உங்களுக்குக் குளுமையும், இதமும் அளிப்பதுடன், கொடிய வெப்பத்திலும் உங்கள் சருமத்தை புதுமையுடனும் சுகமாயும் வைக்கின்றன.




**1**

வேர்க்குருவிலிருந்து உடனடியாக நிவாரணம் பெற ஸ்நானத்தின்பொழுது ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் சோப் உபயோகியுங்கள். அதன் செழுமையான ஔஷத சக்தி வாய்ந்த நுரை சருமத்தினூடே புகுந்து, வேர்க்குரு ஏற்படுவதற்குக் காரணமான அமிலங்களால் அடைபட்ட சருமத் துவாரங்களுக்கு உடனே நீடித்த நிவாரணம் அளிக்கிறது.




Johnson's
TRADE MARK

**ஜான்ஸன்ஸ்**

**ப்ரிக்லி ஹீட் சோப் மற்றும் பவுடர்**

JPH. 3311

எழுதியிருக்கிறீர்கள். அவற்றை அறிய ஆவல் உடையவளாக இருக்கிறேன். நானும் அவரும் கல்யாணத்துக்கு முதல் நாள் உங்களைச் சந்திக்கிறோம்.

பின்குறிப்பு:—நான் இப்படியே வரமாட்டேன். முன்பு நான் நாடோடிப் பெண் போல் வேஷம் போட்டுக் கொண்டது போல், இப்பொழுது உயர்ந்த குடும்பப் பெண் போல் உருமாறிக் கொண்டு வருவேன். அன்று நீங்கள் செய்த உதவியை என்னால் என்றும் மறக்க முடியாது.

இப்படிக்கு,
மாலா

கல்யாணத்துக்கு முதல் நாள் நாகராஜன்-மாலதி ஜோடிகள் தங்களை முற்றிலும் அடையாளம் தெரியாதவாறு ஆக்கிக் கொண்டு விழுப்புரம் வந்து இறங்கினார்கள். இல்லாவிட்டால் ரசிகர்கள் கூட்டம் அவர்களைச் சூழ்ந்து கொள்ளும் அல்லவா? அவர்களைக் கண்ட ஞானதேவிகூடப் பிரமித்து விட்டாள். இருபது வருடங்களுக்கு முன்பு பார்த்த மாலாவா இவள் என்று வியந்தாள்.

ஆஸ்பத்திரிக்கு இரண்டு நாட்களுக்கு விடுமுறை கோரி எழுதிப் போட்டு விட்டு டாக்டர் ஞானதேவி விருந்தினர்களை உபசரிப்பதில் ஈடுபட்டாள். ரகுநாதனின் தம்பியான நாகராஜனே மாலா வரித்துக்கொண்ட கணவன் என்பதை நினைக்க நினைக்க அவளுக்கு வியப்பு மேலிட்டது. நளினியின் முகச்சாயல் ரகுநாதனை ஒத்திருப்பதை நினைத்து வியந்தாள் அல்லவா? அதன் மர்மம் இப்பொழுது அவளுக்கு நன்றாக விளங்கியது. அண்ணன் தம்பிகளான ரகுநாத்—நாகராஜ் இருவரும் ஒரே அச்சில் வார்த்த இரு பதுமைகள் போல் இருந்தார்கள்.

"என்ன டாக்டர், யோசனையில் ஆழ்ந்து விட்டீர்களே! எங்களை நாளைக்குக் கல்யாண வீட்டில் எப்படி அறிமுகம் செய்து வைப்பது என்று யோசிக்கிறீர்களா? டாக்டர்! குழந்தை நளினி எப்படி இருக்கிறாள்?" என்றாள் மாலா தாய்மை உணர்ச்சியோடு.

"மணப் பெண்ணாக இருக்கிறாள்" என்றாள் ஞானதேவி.

"ஏதோ சொல்லி என்னைத் திடுக்கிடச் செய்யப் போவதாக எழுதியிருந்தீர்களே, அதை நான் அறியலாமா, டாக்டர்?" என்றாள் மாலா.

"இன்று ஒரு நாள் பொறுத்துக் கொள். எல்லாம் கல்யாணத்தின் போது விளங்கும்" என்றாள் ஞானதேவி.

அன்றிரவு ஞானதேவி தன் காரை எடுத்துக் கொண்டு ரகுநாதனின் வீட்டுக்கு விரைந்தாள். டாக்டரை அப்பொழுது எதிர்பார்க்காத ரகுநாதன் திடுக்கிட்டு எழுந்து அவளை வரவேற்றார். விஷயத்தை எப்படி ஆரம்பிப்பது என்று புரியாமல் டாக்டர் ஞானதேவி ஏதேதோ பேசிக் கொண்டிருந்தாள்.

"மிஸ்டர் ரகுநாதன்! நாளை கல்யாணத்துக்கு என் விருந்தாளி இருவரை அழைத்து வரப் போகிறேன். அதற்காகத்தான் இப்பொழுது இங்கு வந்தேன்."

"என்ன டாக்டர்! இதற்காக நீங்கள் இங்கே வர வேண்டுமா, என்ன? உங்கள் விருந்தாளி எங்களுக்கும் விருந்தாளிதானே!" என்றார் ரகுநாதன்.



தமிழ் எழுத்தாளர் திரு சோலை - இருசனுக்கும் திருமதி மீனாட்சிக்கும் சமீபத்தில் ஜோலார்பேட்டையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமக்களுக்கு, தமிழகப் பத்திரிகை ஆசிரியர்கள், கவிஞர்கள், கலைஞர்கள், அரசியல் தலைவர்கள் முதலியோரிடமிருந்து பரிசுகளும், வாழ்த்துச் செய்திகளும் வந்திருந்தன. வாழ்க, மணமக்கள்!

"இல்லை, ஸார்! உங்களுக்கு அதிகம் வேண்டியவர். ஏன், உங்கள் தம்பி என்றே வைத்துக் கொள்ளுங்களேன்! அவரும் அவர் மனைவியும் கல்யாணத்துக்காக வந்திருக்கிறார்கள். இப்பொழுது அவர்கள் என் வீட்டில் தங்கி யிருக்கிறார்கள்."

இவற்றைச் சற்றும் எதிர்பார்க்காத வக்கீல் ரகுநாதன், "நான் ஒன்றும் அவர்களுக்கு அழைப்பு அனுப்பவில்லையே!" என்றார்.

அப்பொழுது அவர் மனைவி, "நான்தான் அனுப்பினேன். இருப்பது உங்களுக்கு ஒரு தம்பி. நம் வீட்டில் முதன் முதலில் சிறப்பாக நடக்கும் இந்தக் கல்யாணத்துக்கு அவர் வராவிட்டால் நன்றாக இராது என்று தோன்றிற்று. எனக்கும் அவரைப் பார்க்க வேண்டும் போல் இருந்தது. அதனால்தான்...." என்று மெதுவாக இழுத்தாள்.

"யாரைக் கேட்டு இதெல்லாம் செய்தாய்?" என்ற ரகுநாதனின் கர்ஜனையைக் கேட்டு டாக்டர் ஞானதேவியும், அவர் மனைவியும் திடுக்கிட்டார்கள்.

தனக்கு எதிரில் இந்தச் சண்டையைக் காண விரும்பாத டாக்டர் ஞானதேவி, "மிஸ்டர் ரகுநாத்! அமைதியாக இருங்கள். உங்கள் இருவரைக் காட்டிலும் அவர்களுக்குத்தான் இந்தக் கல்யாணத்தில் அதிக உரிமை இருக்கிறது" என்று ஒரு போடு போட்டாள்.

"ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?" என்றனர் இருவரும் ஏக காலத்தில்.

"மிஸ்டர் ரகுநாத்! நான் சொல்லுவதைக் கவனமாகக் கேளுங்கள். இருபது வருடங்களுக்கு முன்னால் இதே ஆஸ்பத்திரியில் உங்கள் தம்பிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவரும் அவர் மனைவியும் 'முறைப்படி கல்யாணம் செய்து கொள்ளாததால், என்ன செய்வது?' என்று திகைத்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது எனக்கு உங்கள் ஞாபகம் வந்தது. உங்கள் மனைவிக்கும் அப்பொழுது பிரசவகாலம் நெருங்கிக்

கொண்டிருந்தது. உங்கள் மனைவிக்குப் பிறக்கும் ஒரு குழந்தையும் உயிருடன் பிறக்காது. அவர் உடல் அமைப்பு அப்படி. அது எனக்கு நன்கு தெரியும். குழந்தைக்காக ஏங்கிய உங்கள் இருவரையும் அப்பொழுது நினைந்து, உங்களைப் பற்றி அவரிடம் சொன்னேன். உடனே உங்கள் தம்பியின் முகத்தில் மகிழ்ச்சியைக் கண்டேன். நீங்கள் அவருக்கு வேண்டிய நெருங்கிய நண்பர் என்றும், ஆதலால் குழந்தை தங்களிடம் வளர்வதில் அவருக்கு ஆட்சேபனை இல்லை என்றும் சொன்னார். அப்பொழுது அவர் உங்கள் தம்பி என்று எனக்குத் தெரியாது.

அன்று இரவே உங்கள் தம்பி தம் மனைவியைக் காரில் பத்திரமாக அழைத்துக் கொண்டு சென்னைக்குச் சென்று விட்டார். மறுநாள் உங்கள் மனைவி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள். எப்பொழுதும் போல் குழந்தை இறந்தே பிறந்தது. அதை அப்புறப் படுத்திவிட்டு உங்கள் தம்பியின் குழந்தையை உங்கள் மனைவியின் பக்கம் கிடத்தி விட்டேன். நான் செய்தது குற்றமா? சொல்லுங்கள், ரகுநாத்! குழந்தைக்காகத் தவித்த உங்களுக்குக் குழந்தையைக் கொடுத்தேன். அதுவும் அனாதைக் குழந்தையை அல்ல. உங்கள் சொந்தத் தம்பியின் குழந்தையைத் தான்'' என்று கூறி முடித்தாள்.

விஷயங்களை அறிந்த ரகுநாதன் தம்பதிகள் ஆடாமல் அசையாமல் அப்படியே ஸ்தம்பித்திருந்தனர். ரகுநாதனின் உள்ளத்தில் புயல் அடிக்க ஆரம்பித்தது. தம்பியை அன்பாக வளர்த்தார். அவன் பிரிந்து சென்றவுடன் அவனுடைய குழந்தையை வளர்த்திருக்கிறார். 'இது கடவுள் சித்தம் போலும்' என்று அவர் எண்ணிப் பெருமூச்சு விட்டார்.

ரகுநாதன் மனைவிக்கு டாக்டர் ஞானதேவி கடவுள் போல் காட்சி அளித்தாள். தன் குழந்தை இறந்த சமயத்தில் தன் மைத்துனரின் குழந்தையைக் கொடுத்துக் குடும்பத்தில் விளக்கேற்றி வைத்தாளல்லவா?

டாக்டர் ஞானதேவி அவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு, மறுநாள் கல்யாணத்துக்கு அவர்களையும் அழைத்துக் கொண்டு வருவதாகக் கூறிச் சென்றாள்.

பிரபல வக்கீல் ரகுநாதன் வீட்டில் கல்யாணம் என்றால் கேட்க வேண்டுமா? போவோரும் வருவோருமாக ஒரே கூட்டமாக இருந்தது. இந்தச் சமயத்தில் காரில் வந்திறங்கிய இருவரை ரகுநாதன் மனைவி அழைத்து ஓர் அறையில் இருக்கச் செய்து ஆரத்தி எடுத்துத் திலகம் இட்டாள். முதன் முதலாக அவள் மைத்துனரைக் குடும்ப சகிதமாக இப்பொழுதுதான் வரவேற்கிறாள் அல்லவா?

கல்யாணம் நடந்து கொண்டிருந்தது. டாக்டர் ஞானதேவி, மாலா இருவரும் மணவறைக்கு அருகில் இருந்து கல்யாணக் காட்சியைக் கண்டு களித்துக்கொண்டிருந்தார்கள்.

மாலா தன் பெண்ணையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் தாய்மை உணர்ச்சி தன் பெண்ணை அப்படியே கட்டித் தழுவ வேண்டும் என்று தூண்டிற்று. மணமகனைப் பார்த்தாள். நளினிக்கு ஏற்றவன் தான் என்று அவள் வாய் முணுமுணுத்தது. மணமகனுக்குப் பின்னால் நின்றவரைப் பார்த்தபொழுது அவள் விழிகள் நிலைகுத்தி விட்டன. இதைப் பார்த்த டாக்டர் ஞானதேவி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

''என்ன மாலா, உன் தகப்பனாரை அடையாளம் தெரிந்து கொண்டாயா?'' என்றாள்.

திடுக்கிட்ட மாலா, ''என்ன! உங்களுக்கு அவரைத் தெரியுமா?'' என்றாள்.

''ஏன் தெரியாது. அவரையும் தெரியும். அவர் மகன் அதோ மணமகனும் உட்கார்ந்திருக்கிறானே உன் தம்பி, அவனையும் நன்றாகத் தெரியும்'' என்றாள் டாக்டர் ஞானதேவி.

மாலாவுக்கு மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. உணர்ச்சியுடன் எழுந்திருக்கப்போனாள். ஞானதேவி அவளைத் தடுத்து நிறுத்தி, ''இப்பொழுது ஒன்றும் கலவரப்படுத்தி விடாதே. கல்யாண வீட்டின் அமைதி குலைந்துவிடும். ஜனங்கள் எல்லோரும் செல்லட்டும். பிறகு பேசிக் கொள்ளலாம்'' என்று கூறினாள்.

இதே சமயம் வெளியில் ரகுநாதனும் நாகராஜனும் ஒருவரை ஒருவர் உணர்ச்சி மேலிடத் தழுவிக் கொண்டார்கள்.

அன்று பிற்பகல் வாசலில் உட்கார்ந்து கொண்டு செய்தித்தாள் படித்துக் கொண்டிருந்த ரகுநாதனின் சம்பந்தியின் காலில் வந்து விழுந்தாள் மாலா. ''அப்பா! என்னை மன்னித்து விடுங்கள்'' என்றாள்.

மகளை இவ்வளவு ஆண்டுகளுக்குப் பின் கண்ட தகப்பனாரின் கண்களிலிருந்து கண்ணீர் ததும்பிற்று. ''மன்னிப்பதற்கு என்னம்மா இருக்கிறது! எல்லாம் கடவுள் சித்தம்?'' என்றார். அவருக்கும் விவரங்கள் எல்லாம் சொல்லப்பட்டன.

தம் மகள் வயிற்றில் பிறந்த தமது பேத்தியையே மகனுக்கு மணம் முடித்ததில் திருப்தி அடைந்தார் மாலாவின் தகப்பனார். சேகர் தன் சொந்தத் தாய் மாமன் என்பதை அறிந்த நளினியின் கண்கள் களிநடனம் புரிந்து மகிழ்ந்தன.

''என்னுடைய வேலை எல்லாம் முடிந்தது. எனக்கு விடை கொடுங்கள்'' என்றாள் டாக்டர் ஞானதேவி. எல்லோரும் எழுந்து அவளுக்கு விடை கொடுத்தனுப்பினர்.

மறுநாள் பத்திரிகைச் செய்தி இப்படிக் கூறியது:—

'கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாகத் திரைப்பட உலகின் முன்னேற்றத்துக்கு உழைத்து, அந்த அரும் கலையை வளர்த்த நாகராஜ்—மாலா இருவரும் திரைப்பட உலகினின்றும் விலகிக் கொள்ளப் போவதாக அறிவித்திருக்கிறார்கள். விரைவில் அவர்கள் சுற்றுப் பிரயாணம் செய்யப் போவதாகத் தெரிகிறது. அவர்களது இந்தத் திடீர் முடிவு ரசிகர்களுக்கு எல்லையில்லாத வருத்தத்தைக் கொடுக்கும். சுற்றுப் பிரயாணத்திலிருந்து திரும்பி வந்தபின் அவர்கள் மீதி நாட்களை அமைதியுடன் கழிக்கப் போவதாகத் தெரிய வருகிறது.'

இதைப் படித்த டாக்டர் ஞானதேவி, தனக்கே இயல்பான முறையில் — தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited**
**Managing Editor: T. Sadasivam**

## வியர்வை நாற்றங்களுக்கும் சாதாரண சரும நோய்களுக்கும் விஞ்ஞானம் தரும் புத்தம்புதிய பதில்...

# ஆக்டமர்

## இந்தியாவிலேயே ஓர் அழகுசாதன சோப்பில் இப்போது உள்ளது!

நீராடும் ஒவ்வொரு முறையும் சருமத்துக்குப் பாதுகாப்பு! ஆக்டமர் அடங்கியுள்ள காரணத்தால்தான் ப்ரீஸ் டாய்லெட் சோப் அத்தகைய பராமரிப்பை உங்களுக்கு அளிக்கிறது. மான்ஸான்டோ கம்பெனியின் 'ஆக்டமர்' என்பது அதிநூதனமாக நிருபணமாகியுள்ள ஓர் சருமக் கிருமிநாசினி—வியர்வை நாற்றம், முகப்பரு போன்ற பற்பல சாதாரண சரும நோய்களுக்குக் காரணமான, கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளையும் ஒழிக்கவல்லது.
அமெரிக்க மெடிகல் அஸோஸியேஷனால் அதிகார பூர்வமாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது 'ஆக்டமர்'

கறுமணமுள்ள ப்ரீஸ் டாய்லெட் சோப்பை நீங்கள் உபயோகித்துப் பார்ப்பதற்கு இதுவே உற்ற தருணம். தவறாமலும் இடையறாமலும் 3 வில்லைகள் மட்டும் உபயோகித்தாலே, கிருமிகளினின்று கிட்டத்தட்ட விடுதலை பெற்ற சருமம் உங்களுடையதாகிவிடும். வியர்வை நாற்றங்களினின்றும் சாதாரண சரும நோய்களினின்றும் அற்புதமான பாதுகாப்பு என்றால் அதுதான்!



தனிச் சிறப்பு வாய்ந்த அழகுசாதனசோப் இதுவே. இதுவே ப்ரீஸ் சோப்!

BZ. 4-50 TM லண்டனிலுள்ள இரசாயனக் கம்பெனி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# எனது மிகச்சிறந்த சேலைகளை என்றுமே நான் பத்திரமாக லக்ஸினால் சலவை செய்கிறேன்






வனப்பும் வசீகரமும் புடவைகளுக்கு என்றுமே உண்டு. நேர்த்தியான சிப்பான், மிருதுவான பட்டு, கிரேப், ஜார்ஜ் ஜெட், காருக்கான பருத்தித் துணி எல்லாவற்றையும் தூய, மென்மையான லக்ஸ் தூள்கள் உபயோகித்து வீட்டிலே சலவை செய்தால் புதுமைக் களை மாறாமல் அவை பல் லாண்டுகள் நீடித்திருக்கும்.

**இலவசம்:** "நேர்த்தியான துணிகளைச் சலவை செய்ய சரி யான வழி" "சேலைகளைச் சலவை செய்ய சரி யான வழி" என்னும் பயனுள்ள இலவசத் துண்டுப் பிரசுரங்களுக்கு எழுதுங்கள். லக்ஸ் பெட்டியின் மேல் மூடியிலுள்ள பாப்பா படத்தை உடன் இணைத்து எழுதுங்கள்: தபால் பெட்டி 409, பம்பாய் 1.

**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத் தோற்றம் அளிப்பது லக்ஸ்**

L.X. 137-50 TM